# தமிழ் அரிச்சுவடி

| ஃ | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

# சைவ நெறி

## தரம் 11



கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

முதலாம் பதிப்பு - 2007


2007 ஆம் ஆண்டு முதல் பாடசாலைகளுக்கு அறிமுகப்படுத்தப்படுகின்ற திருத்தப்பட்ட புதிய பாடத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு வெளியிடப்படுகின்ற இந்தப் பாடநூல்,கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தின் வழிகாட்டலுக்கேற்ப, பாடநிபுணத்துவக் குழுவினாலும் பாடநூல் மதிப்பீட்டுக் குழுவினாலும் அங்கீகரிக்கப்பட்டுள்ளது.

அட்டைப்பட ஆலயம் - மன்னார் திருக்கேதீஸ்வரம்.
முகப்புப் பக்க வார்ப்புப் படிமம் - நடராஜர் படிமம்
(11ஆம் நூற்றாண்டு, பொலனறுவை ஐந்தாம் சிவாலயத்தில் கிடைக்கப்பெற்றது.)

இந்நூல், கல்வி வெளியீட்டுத் திணைக்களத்தினால் 712, புளூமெண்டல் வீதி, கொழும்பு 15 இல் அமைந்துள்ள கலர் பிரின்ஸ் அச்சகத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது.

2007 /ලද/ 11/220/72,000

## தேசிய கீதம்

சிறீ லங்கா தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நல்லெழில் பொலி சீரணி
நலங்கள் யாவும் நிறை வான்மனி லங்கா
ஞாலம் புகழ் வள வயல் நதி மலை மலர்
நறுஞ்சோலை கொள் லங்கா
நமதுறு புகலிடம் என ஒளிர்வாய்
நமதுதி ஏல் தாயே
நம தலை நினதடி மேல் வைத்தோமே
நமதுயிரே தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ தாயே

நமதாரருள் ஆனாய்
நவை தவிர் உணர்வானாய்
நமதேர் வலியானாய்
நவில் சுதந்திரம் ஆனாய்
நமதிளைமையை நாட்டே
நகு மடி தனை யோட்டே
அமைவுறும் அறிவுடனே
அடல்செறி துணிவருளே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே

நமதார் ஒளி வளமே
நறிய மலர் என நிலவும் தாயே
யாமெலாம் ஒரு கருணை அனைபயந்த
எழில்கொள் சேய்கள் எனவே
இயலுறு பிளவுகள் தமை அறவே
இழிவென நீக்கிடுவோம்
ஈழ சிரோமணி வாழ்வுறு பூமணி
நமோ நமோ தாயே - நம் சிறீ லங்கா
நமோ நமோ நமோ நமோ தாயே.

ஒரு தாய் மக்கள் நாமாவோம்
ஒன்றே நாம் வாழும் இல்லம்
நன்றே உடலில் ஓடும்
ஒன்றே நம் குருதி நிறம்

அதனால் சகோதரர் நாமாவோம்
ஒன்றாய் வாழும் வளரும் நாம்
நன்றாய் இவ் இல்லினிலே
நலமே வாழ்தல் வேண்டுமன்றோ

யாவரும் அன்பு கருணையுடன்
ஒற்றுமை சிறக்க வாழ்ந்திடுதல்
பொன்னும் மணியும் முத்துமல்ல - அதுவே
யான்று மழியாச் செல்வமன்றோ.

ஆனந்த சமரக்கோன்
கவிதையின் பெயர்ப்பு.

## உங்களுக்கோர் செய்தி !

பல்வேறு ஆற்றல்களைக் கொண்ட பூரண ஆளுமை கொண்ட நற்சமூகம் ஒன்றை உருவாக்கும் மகத்தான குறிக்கோள் கல்வியினால் நிறைவு பெற வேண்டும்.

இக்குறிக்கோளை அடைவதில் பாடநூல் மகத்தான் இடத்தை வகிக்கிறது. உயர் தரத்திலான பாடநூல் ஒன்றினை மாணவர்களுக்கு வழங்குவதை முக்கிய குறிக்கோளாகக் கொண்ட கல்வி வெளியீட்டுத் திணைக்களம் 2007 ஆம் ஆண்டு தொடக்கம் பாடசாலை முறைமைக்கு அறிமுகம் செய்துள்ளது. புதிய பாடவிதானத்தை அடிப்படையாகக் கொண்டு 2008 ஆம் ஆண்டிற்கு இப்பாடநூல் ஆக்கப்பட்டுள்ளது.

பாடத் திட்டத்திற்கு ஏற்ப பிரத்தியேக உத்திகளைக் கையாண்டு மாணவருடைய தேர்ச்சி விருத்தியையும் கற்றல் ஈடுபாட்டையும் விருத்தி ஆக்கும் வண்ணம் பாடநூல் ஆக்குவதற்கு முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

இப்பணிக்காகப் பெரும் அர்ப்பணிப்புடனும், உற்சாகத்துடனும் செயற்பட்ட பல்கலைக்கழகப் பேராசிரியர்களுக்கும், விரிவுரையாளர்களுக்கும், எழுத்தாளர் மற்றும் பதிப்பாசிரியர் குழுவினருக்கும் இணைப்பாளர்களுக்கும் கடமையாற்றிய திணைக்கள உத்தியோகத்தர்களுக்கும் இப்பணியை வெற்றி கரமாக மேற்கொள்வதற்கு உற்சாகத்தையும், சிறந்த வழிகாட்டலையும் நல்கிய கல்வி அமைச்சின் செயலாளர் உட்படச் சகலருக்கும் எனது நன்றி உரித்தாகும்.

என். தர்மசேன
கல்வி வெளியீட்டு ஆணையாளர் நாயகம்

கல்வி வெளியீட்டுத் திணைக்களம்
“இசுருபாய”
பத்தரமுல்ல
2007.06.13

# அறிமுகம்

கற்றல் தேர்ச்சிகளை மையமாகக் கொண்டு இலங்கை அரசினால் அறிமுகம் செய்யப்பட்ட புதிய பாட விதானத்திற்கு அமைய, 11ஆம் தரத்துக்குரிய சைவ நெறி பாடத்திட்டத்திற்கு ஏற்ப இப்பாட நூல் தயாரிக்கப்பட்டுள்ளது. இந்நூலை கற்கப் போகும் மாணவர்களுக்கும் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கும் அறிமுகம் செய்வதில் பெருமகிழ்ச்சி அடைகின்றோம்.

புதிய கல்விச் சீர்த்திருத்தத்தின்படி மாணவர் மையக் கல்வியை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் வடிவமைக்கப்பட்டுள்ளது. பாடத்திட்டத்திலுள்ள தேர்ச்சி, தேர்ச்சி மட்டம் என்பவற்றிக்கு அமைய விடய தானம், அதற்குப் பொருத்தமான படங்கள், பயிற்சிகள், செயற்பாடுகள், பாடச்சுருக்கம் என்பன உள்ளடக்கப்பட்டுள்ளன. அத்தோடு 5E, 3T முறைகளில் கற்றல் கற்பித்தலை முன்னேடுக்கத்தக்கதாக அமைக்கப்பட்டுள்ளன.

மாணவர்கள் சைவ நெறிப் பாடத்தை அறிவுக்காக மாத்திரம் கற்காது அவர்களது உள்ளங்களில் தெய்வ நம்பிக்கை, உயர்ந்த இலட்சியங்கள், பாரம்பரியத்தில் பற்று, விழுமியங்களைப் பேணுதல் ஆகிய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டு, வாழ்க்கையோடு இணைந்ததாகவும், மாணவர்களது உளங்கொளத்தக்கதாகவும் அமையும் படியாக இப்பாடநூல் தயாரிக்கப்பட்டுள்ளது.

இப்பாடநூலின் ஆக்கத்தின் போதும் சீராக்கத்தின் போதும் பல வகைகளிலும் ஒத்துழைத்த அனைவருக்கும் எமது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலை மேலும் மேம்படுத்துவதற்குத் தங்களின் ஆக்கபூர்வமான ஆலோசனைகள் வரவேற்கப்படுகின்றன.

**நூலாக்கக் குழு**

## கண்காணிப்பும் மேற்பார்வையும்

திரு. எம் . தர்மசேன - ஆணையாளர் நாயகம், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## ஆலோசனை

திருமதி. ஈ.எப்.டி. நாணயக்கார - ஆலோசகர் - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்

## வழிகாட்டல்

திருமதி.எம். டி. பத்மினி நாளிகா - மேலதிக ஆணையாளர் (அபிவிருத்தி) கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## இணைப்பாக்கம்

திரு.வி. அருளானந்தம் - பிரதி ஆணையாளர் கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## எழுத்தாளர் குழு

1) திரு.கே. நாகேஸ்வரன் - சிரேஷ்ட விரிவுரையாளர், சப்பிரகமுவ பல்கலைக்கழகம்.

2) திரு.என். ஞானவேல் - விரிவுரையாளர், உறுகுணை தேசிய கல்வியியற் கல்லூரி, காலி.

3) செல்வி.ச. நந்தினி - அபிவிருத்தி உதவியாளர், இந்து கலாசாரத்திணைக்களம்.

4) திரு.எஸ். ஸ்ரீதயாளன் - உதவிக் கல்விப்பணிப்பாளர், தமிழ்ப்பிரிவு, கல்வி அமைச்சு.

5) திரு.எஸ். மோகநாதன் - உதவிக்கல்விப் பணிப்பாளர், மடுக்கல்வி வலயம்.

6) திரு. எம். மூவேந்தன் - ஆசிரியர், பெயர்லோன் தமிழ் வித்தியாலயம், சாமி மலை.

7) திரு.வி. அருளானந்தம் - பிரதி ஆணையாளர், கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

## பதிப்பாசிரியர் குழு

1. திரு.என். ஞானவேல் - விரிவுரையாளர், உறுகுணை தேசிய கல்வியியற்கல்லூரி, காலி.

2. திரு.வி.எஸ். இதயராஜா - உதவிக் கல்விப் பணிப்பாளர், (இந்து சமயம்) சமய விழுமியங்கள் பிரிவு, கல்வி அமைச்சு.

3. செல்வி க. மகாலட்சுமி - ஆசிரியை,கொ/கணபதி இந்து மகளிர் வித்தியாலயம்.

## கணினி வடிவமைப்பு

1. செல்வி.எஸ்.பிரியதர்ஷினி - கல்வி வெளியீட்டுத் திணைக்களம்.

2. செல்வன்.உ.சஜிவ் - றோயல் கல்லூரி, கொழும்பு.

## சரவை பார்ப்பு

1. திருமதி. எஸ்.அருள்தாசன் - ஆசிரியை கொ/ கணபதி இந்து மகளிர் வித்தியாலயம்.

2. செல்வி.கே.மகாலட்சுமி - ஆசிரியை கொ/ கணபதி இந்து மகளிர் வித்தியாலயம்.

## சித்திரம் - அட்டைப்படம்

1. திரு.என்.எஸ் ஞானகுருபரன் - ஓவியர்

2. திருமதி.அமித்தா இந்திராணி - ஆசிரியை (சித்திர ஆலோசகர்), ரிவிசந்த மத்திய கல்லூரி உஸ்சாபிட்டிய.

## உயர் மதிப்பீட்டுக் குழுவின் மதிப்பீடு

கலாநிதி ந. இரவீந்திரன் - விரிவுரையாளர், வவுனியா தேசிய கல்வியியற் கல்லூரி, வவுனியா.

உ

சிவமயம்

# கடவுள் வணக்கம்

## பஞ்ச புராணம் ஓதுவோம்.

### திருச்சிற்றம்பலம்

### தேவாரம்

சுடுவார்பொடி நீறு நல்ல துண்டப்பிறை கீழுங்
கடமார்களி யானையுரி யணிந்தகறைக் கண்டன்
படவேரிடை மடவாளொடு பாலாவியின் கரைமேல்
திடமாயுறை கின்றான்றிருக் கேதீச்சரத் தானே.

சுந்தரர் தேவாரம் - திருக்கேதீச்சரப் பதிகம்.

### திருவாசகம்

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பக்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

மாணிக்கவாசகர் அச்சோப்பதிகம்

### திருவிசைப்பா

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்ற எம் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிரஎன் கண்குளிர்ந் தனவே.

சேந்தனார்.

## திருப்பல்லாண்டு

குழலொழி யாழொலி கூத்தொலி ஏத்தொலி
எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று
விம்மி மிகுதிரு வாரூரின்
மழவிடையாற்கு வழி வழியாளாய்
மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடி யாரோடுங் கூடி எம்மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே.

சேந்தனார்.

## புராணம்

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக் கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

சேக்கிழார்.

திருச்சிற்றம்பலம்.

# பொருளடக்கம்

இப்பாட நூலில் நாம் புனிதமாகப் போற்றித் துதிக்கும் இறை திருவுருவங்களின் பிரதிமைப் படங்களும், இறையடியார்களின் படங்களும், ஆலயங்களின் பிரதிமைப் படங்களும் புனித நூல்களின் துதிப்பாடல்களும் இடம் பெற்று இருப்பதனால், இந்நூலை கண்ணியமாகப் பாவித்து பயன் பெறுவதோடு, விரும்பத்தகாத இடங்களில் வைப்பதையும் தவிர்த்துக் கொள்ளவும்.

# 1 கடவுளே மெய்ப்பொருள்

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் சைவம் ஆகும். இது கடவுளை 'சிவம்'' எனக் கூறுகிறது. சிவம் என்பது மங்கலம் எனப்பொருள் தரும். மங்கலம் என்பது தீமையற்ற நன்மை வடிவானது. அதுவே சிவம் எனப்படும் கடவுளாகும். இதனை,

**சிவன் எனும் நாமம் தனக்கே உடைய**
**செம்மேனி யெம்மான்........**

என்கிறார் திருநாவுக்கரசு நாயனார். சைவசமயத்தில் கடவுள்; இறைவன், நின்மலன், பதி எனப் பலபெயர்களில் அழைக்கப்படுகின்றார். கடவுள் என்றால் உள்ளத்தைக் கடந்தவர், உலகைக் கடந்தும் உலகத்துள்ளும் உள்ளவர் எனக்குறிப்பிடப்படும். கடவுதல் - இயக்குதல் என்ற அடிப்படையில் கடவுள் உலகை இயக்குபவர் என்று குறிப்பிடப்படுகிறார். சைவசமயத் தத்துவ அடிப்படையில் கடவுள் **பதி** என்று குறிப்பிடப்படுகிறார். **பதி** என்றால் **காப்பவன்** என்று பொருள். அதாவது, தன் கீழ் உள்ளாரை நல்ல வகையில் ஆவன செய்து காப்பவன் என்பதாகும். சைவசித்தாந்தம் கடவுளை இரு பிரிவுகளாக விளக்கிக் கூறுகிறது. ஒன்று, கடவுள் உண்டு என்பதை நிரூபிப்பது. இரண்டு, கடவுளுக்குரிய குணங்களையும் இயல்புகளையும் பற்றிக் கூறுவது.

உலகமானது சித்து, அசித்து என இருவகைப் பொருட்கள் கொண்டமைந்தது. **சித்து** என்பது அறிவுடைப்பொருள். **அசித்து** என்பது அறிவற்ற பொருள். அசித்துப்பொருட்கள் அனைத்தும் தோன்றி, நின்று, அழியும் தன்மையன. எனவே இவற்றைப் படைத்து, காத்து, அழிப்பதற்கு இவற்றிற்கும் மேலான ஒரு சத்துப்பொருள் - மெய்ப்பொருள் இருக்க வேண்டும். அப்பொருளே சிவம் என்கிறது சைவசமயம். இன்னொரு வகையில் கூறுவதாயின், ஓர் சேலையை நெய்வதற்கு நெசவாளன் ஒருவன் இருக்க வேண்டும். சேலை தானாக உண்டாகாது. அதே போன்று இந்த உலகமும் தானே தோன்றாது. அதனைத் தோற்றுவித்தவன் அவ்வுலகத்துக்கு அப்பாற்பட்டவனாகவும் அதனுள்நின்று இயக்குபவனாகவும் இருக்கிறான். அவனே கடவுள் என்கிறது சைவசமயம். இதனை மெய்கண்டார் சிவஞானபோதத்தில்,

**அவன் அவள் அதுஎனும் அவைமூ வினைமையின்**
**தோற்றிய திதியே ஒடுங்கிமலத்து உளதாம்**
**அந்தம் ஆதி என்மனார் புலவர்**

என்று கூறுகிறார்.

சிவன் பொதுவியல்பு, சிறப்பியல்பு எனும் இரு இயல்புகள் கொண்டமைந்தவர். சிவனின் பொதுவியல்பு என்பது தடத்த இலக்கணமாகும். இது அவன் செய்யும் ஐந்தொழில்களைப் பற்றிக் கூறுகிறது. படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பனவே அவ் ஐந்தொழில்களாகும். உயிர்களின் பொருட்டு மாயையிலிருந்து உலகைப்படைத்தல், அவ்வுயிர்கள் தம் வினைப்பயன்களை அனுபவிக்கும் காலம் வரை அவற்றைக் காத்தல், உயிர்களின் வினைப்பயன் முடிவுற்ற காலத்தில் அவற்றை அழித்தல் என்பவை அவனியற்றும் முத்தொழில்களாகும். உயிர்கள் மலங்களில் அழுந்தியிருக்கும் நிலை என்பது மறைத்தலையும், அம்மலங்களை நீக்கி அவற்றிற்கு முத்தியளிப்பது அருளலையும் குறிக்கின்றது. இவ் ஐந்தொழில்களையும் முறையே பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரர், சதாசிவர் என்னும் ஐந்து உருவின் மூலமாக சிவன் செய்கிறார். இதனை,

**படைப்பன் அயன், அளிப்பன் பங்கயக்கண் மாயன்,**
**துடைப்பன் உருத்திரனும் சொல்லில், - திடப்பெறவே**
**ஏன்றும் திரோபவிப்பர் ஈசர், சதாசிவரும்**
**ஆன்றே அநுக்கிரகர் ஆம்**

என்கிறது உண்மை விளக்கம் எனும் நூல்.

சிவனின் சிறப்பியல்பு என்பது சொரூபலக்கணமாகும். அது அவனின் எண்வகைக் குணங்களான தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை உணர்வினனாதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின்று நீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவற்றைப் பற்றிக் கூறுவதாகும். தன்வயத்தனாதல் என்பது தானே அறியும் ஆற்றலுடைய ஒரே முதல்வனாம். இதனை உபநிடதம் ‘ஏகன்'' எனக் குறிக்கிறது. தூயவுடம்பினனாதல் என்பது பதி பாசத்தினால் பீடிக்கப்படாமல் தூய்மையாக இருப்பவன் என்பதாம். இயற்கை உணர்வினனாதல் என்பது இறைவன் தானே அறியும் ஆற்றல் கொண்டவன் என்பதைக் குறிக்கிறது. முற்றும் உணர்தல் என்பது அனைத்துப் பொருளைப் பற்றியும் அறிந்தவன் இறைவன் எனவும், இயல்பாகவே பாசங்களில் நீங்குதல் என்பது சுதந்திரமான இறைவன் பாசத்தால் பீடிக்கப்படாதிருத்தல் எனவும், பேரருள் உடைமை என்பது பிறர் துன்பம் கண்டிரங்கும் கருணை வடிவான இறைவன் எனவும், முடிவில் ஆற்றல் உடைமை என்பது பேரறிவு கொண்ட இறைவனின் செயல் பேராற்றலுடையது, அதாவது முடிவில்லா ஆற்றல் கொண்டது எனவும் வரம்பில் இன்பமுடைமை என்பது பேரறிவும் பேராற்றலும் கொண்ட இறைவன் எல்லையில்லா இன்பத்தைக் கொண்டு விளங்குபவன் எனவும் கூறப்படுகின்றது.

இவ் எண்குணங்களையுடைய இறைவன் சச்சிதானந்தன் என்று அழைக்கப்படுகிறார். இத்தகைய பெருமைகளைக் கொண்டு உயிர்களைக் காத்தருளும் இறைவனை நாம் என்றும் மறவாது போற்றி வழிபடுதல் அவசியமானதாகும். இதனை,

**நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்**
**சலமிலன் பேர்சங் கரன்**

எனக்கூறுகிறது திருவருட்பயன். இறைவன் தன்னையடைந்து வழிபடும் உயிர்களுக்கு இன்பத்தைக் கொடுப்பவன். எக்காலத்தும் விருப்பு வெறுப்பைக் காட்டாத பண்பினன். அதனால் சங்கரன் (சங்- சுகம், கரன்- கொடுப்பவன்) எனப்படுகிறான். எனவே அறிவிற்கறிவாய் நின்று எம் பிறவிப்பிணி நீக்கும் இறைவனை நாம் தினமும் போற்றி வழிபடுவோமாக.

## மேல் வரும் வினாக்களுக்கு விடை தருக

1. சிவம் என்னும் பொருள் பற்றி விளக்குக.
2. இறைவனின் ஐந்தொழில்கள் எவை? அவற்றினைச் செய்யும் தெய்வங்களின் பெயர்களைக் கூறுக.
3. கடவுள் என்ற பதத்தை சித்தாந்த அடிப்படையில் விளக்குக.
4. தடத்தலக்கணம், சொரூபலக்கணம் பற்றிக் கூறுக.
5. இறைவனின் எண்குணங்கள் பற்றி விளக்கிக் கூறுக.

## செயற்பாடு

1. திருமுறைகளில் இறைவனின் ஐந்தொழில்கள் பற்றிக் கூறப்படும் செய்திகளைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
2. இறைவன் எண் குணங்களைக் கொண்டவன் என்பதற்கான விளக்கங்களைச் சிவஞானபோத நூலிலிருந்து திரட்டி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

1. இறைவன் ஒருவரே உள்பொருள். ஏனையவை தோன்றி நின்று அழிபவை.
2. இறைவன் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களைச் செய்கிறார்.
3. இறைவன் தடத்தலக்கணம், சொரூபலக்கணம் என இரு இயல்புகள் கொண்டவர்.
4. இறைவனின் சொரூபலக்கணம் என்பது அவனது எண்குணங்களைக் கூறுகிறது.

# 2 சமய வாழ்வு

வாழ்க்கை வேறு சமயம் வேறு என்று கருத முடியாத அளவுக்கு நமது வாழ்க்கை, சமயத்தினால் மெருகூட்டப்பட்டுள்ளது. குறிப்பாகச் சைவ சமயிகளாகிய நமது வாழ்வியற் கருமங்கள் யாவும் இறை சிந்தனையுடனேயே ஆரம்பித்து இறை சிந்தனையுடனேயே நிறைவெய்துகின்றன. நமது முன்னோர்கள் வாழ்ந்து காட்டிய வழியின்பால் நமது வாழ்வு சமயத்துடன் பின்னிப்பிணைந்ததாகக் காணப்படுகிறது. அதாவது நாயன்மார்கள், சமயச் சான்றோர்கள், அநுபூதிச் செல்வர்கள் என்போர் வாழ்ந்து காட்டிய வழியில் நமது வாழ்வை அமைத்துக் கொள்வோமானால் எந்நாளும் இன்பமே கைகூடும்.

நமது அன்றாட கருமங்களில் இறை சிந்தனையுடன் நெறிப்படுத்தி செயலாக்கம் பெறும் இடங்களாக மேல்வரும் மூன்று இடங்கள் அமைகின்றன.

அ. வீடு
ஆ. பாடசாலை
இ. ஆலயம்

இவை ஒவவொன்றும் சைவசமயி ஒருவனது வாழ்வில் எங்ஙனம் இறைசிந்தனையை மேம்படுத்துகின்றன என்பதனை இனி, நோக்குவோம்.

## அ. வீட்டில் சமயம்

சைவசமயிகளாகிய நமது இல்லங்கள் தோறும் இடம்பெறும் அனைத்து கருமங்களும் இறை சிந்தனையுடன் தொடர்புபட்டனவாக அமைகின்றன. நம்மால் ஆற்றப்படுகின்ற கடமைகளை மேல்வரும் இரு நிலைகளுடாக அவதானிக்கலாம்.

1. வீட்டில் இடம்பெறும் நாளாந்தக் கடமைகளில் சமயம்
2. வீட்டில் இடம்பெறும் விசேட கடமைகளில் சமயம்

### 1. வீட்டில் இடம்பெறும் நாளாந்தக் கடமைகளில் சமயம்.

நமது இல்லங்களில் இடம்பெறும் அன்றாடக் கருமங்கள் யாவும் இறைசிந்தனையுடனேயே ஆற்றப்படுகின்றன. அதிகாலையில் நித்திரை விட்டெழுந்ததும் சிவ சிவ என்று சொல்லிக் கொண்டே எழுகிறோம். அந்நேரத்தில் எங்களை அறியாமலே வழிபாடு தொடங்குகிறது. சூரியனைப் பார்த்து சூரிய நமஸ்காரம் செய்தல்; வீட்டைக் கூட்டி, பெருக்கி சுத்தம் செய்த பின்னர் மஞ்சள் நீர், சாணம் கலந்த நீர் என்பவற்றால் எம் வீட்டையும் வளவையும்

தூய்மையாக்குகிறோம். தூய்மையான நீரில் நீராடிய பின்னர் சுவாமி அறையிலுள்ள தெய்வப்படங்களுக்கு பூவும் நீரும் வைத்து, தூப தீபம் காட்டி, தோத்திரப் பாடல்களைப் பாடி இறையருளை வேண்டி நிற்கிறோம். அதன் பின்னர் வீபூதியை சிவ சிவா என கூறிக்கொண்டு நெற்றியில் தரிக்கிறோம். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் வீபூதி தரிக்க வேண்டிய நேரங்கள் பற்றி சைவ வினாவிடை முதலாம் பாகத்தில் கூறியுள்ளார்.

கொல்லாமையை வலியுறுத்தும் சைவ சமயிகள் அனைவரும் உயிர்களிடத்து ஜீவகாருண்யம் மிக்கவர்களாகத் திகழ வேண்டும். வீட்டில் உள்ள பசு முதலான பிராணிகளுக்கு உணவளித்தல், அவற்றைத் தெய்வங்களாக கருதுதல், நமது வீடு தேடி வரும் துறவியருக்கும் மற்றும் வறியவருக்கும் இன்முகத்தோடு உணவளித்தல், பிறரிடத்தில் இனிய வார்த்தைகள் பேசுதல், இறைவனது பூசைக்குரிய மலர்களைப் பெறும் முகமாக நந்தவனம் அமைத்து அங்கு வளரும் பூங்கன்றுகளுக்கு இறை சிந்தனையுடன் நீர் பாய்ச்சுதல், துளசி மாடம் அமைத்துத் துளசிச்செடியை வலம் வந்து வணங்குதல் என்பன எல்லாம் இறைசிந்தனையுடன் கூடியதான நமது அன்றாடக் கடமைகளாகும்.

**யாவர்க்குமாம் இறை வற்கொரு பச்சிலை**
**யாவர்க்குமாம் பசு விற்கொரு வாயுறை**
**யாவர்க்குமாம் உண்ணும் போதொரு கைப்பிடி**
**யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரை தானே.**

என்ற திருமூலரது திருமந்திரப் பாடலுக்கு அமைய யாவர்க்கும் நன்மை பயக்கும் இறைவனுக்கு ஒரு பச்சிலை இட்டாவது வணங்குங்கள்; எல்லோருக்கும் பால் கொடுக்கும் பசுவுக்கு பசும்புல்லாயினும் கொடுங்கள்; சாதி பேதம் பாராது பசி என்று வந்தவர்களுக்கு நீங்கள் உண்ணுவதற்கு முன்னர் ஒரு பிடி சோறாவது கொடுங்கள்; பிறருக்கு இன்னுரை பேசுதல் யாவருக்குமே நன்மையாகும்; இவ்வாறான செயல்களெல்லாம் இறை சிந்தனையின் பாற்பட்டவையாகும்.

நாம் உணவை உண்பதற்கு முன்னர் அவ்வுணவைத் தந்தமைக்காக இறைவனைத் துதித்த பின்னரே உண்பதை நம் வழக்கமாக்கிக் கொண்டுள்ளோம்.

**அன்னம் பாலிக்குந் தில்லைச்சிற் றம்பலம்**
**பொன்னம் பாலிக்கு மேலுமிப் பூமிசை**
**என்னம் பாலிக்கு மாறுகண் டின்புற**
**இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே**

என்ற திருநாவுக்கரசு நாயனாரது தேவாரத்தினை ஓதிய பின்னர் உணவை உண்ணும் வழக்கத்தினை நம் முன்னோர்கள் கையாண்டனர்.

மாலை வேளைகளில் விளக்கினை ஏற்றித் தூபதீபம் இட்டு திருமுறைப்பாடல்களைப் பாடுதல், நித்திரைக்குச் செல்வதற்கு முன்னர்

இறைவனைத் துதித்தல், அன்றைய நாள் முழுவதும் செய்த செயல்களை எண்ணிப்பார்த்து அவற்றில் தவறு விடப்பட்ட செயல்களுக்காக இறைவனை மன்றாடித் துதித்தல், என்பன எல்லாம் நமது இல்லங்கள் தோறும் அன்றாடம் ஆற்றப்படும் இறைசிந்தனையுடன் கூடிய செயல்களாகும்.

## .2 வீட்டில் இடம்பெறும் விசேட தினங்களில் சமயம்.

நமது வீட்டில் நாளாந்தம் இடம்பெறும் செயற்பாடுகள் இறை சிந்தனையுடன் கூடியதுபோல் விசேட தினங்களில் ஆற்றப்படும் செயல்களும், இறை சிந்தனையுடன் நமது கலாசாரத்தினைத் தழுவியனவாக அமைகின்றன. விரதங்கள், பண்டிகைகள், சடங்குகள் ஆற்றப்படும் விசேட காலங்களில் அச்செயற்பாடுகள் ஊடாக இறை சிந்தனை மேலோங்கிக் காணப்படுகின்றது.

சிவராத்திரி, பிரதோஷம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, திருவாதிரை, கந்தசஷ்டி, திருவெம்பாவை முதலான விரத காலங்களிலும் தைப்பொங்கல், சித்திரை வருடப்பிறப்பு, தீபாவளி முதலான பண்டிகைக் காலங்களிலும் நாம், நமது வீடுகளையும் சுற்றுப்புறங்களையும் தூய்மையாக்குவதோடு இறை சிந்தனையுடன் மருத்து நீர் வைத்து நீராடி, தோய்த்துலர்ந்த அல்லது புதிய ஆடைகளை அணிந்து வாசலில் மாக்கோலம் இடுதல், மாவிலைத் தோரணம் கட்டுதல், கும்பம் வைத்தல், புதிய பாத்திரங்களில் சமைத்த உணவை இறைவனுக்கு நிவேதித்தல், குறித்த விரதத்துக்குரிய தோத்திரப் பாடல்களைப் பாடுதல், என்பன எல்லாம் விசேட காலங்களில் இறை சிந்தனையுடன் ஆற்றப்படும் செயல்களாகும்.

சைவ சமயி ஒருவரது பிறப்பிலிருந்து இறப்பு வரையும் அதன் பின்னரும் ஆற்றப்படும் அனைத்துச் சடங்குகளும் இறைசிந்தனையுடனேயே ஆற்றப்படுகின்றன. இத்தகைய சடங்குகள் பூர்வ கிரியைகள், அபூர்வ கிரியைகள் என இரு வகைப்படும்.

உயிர் உடலில் இருக்கும் போது ஆற்றப்படுகின்ற கிரியை பூர்வக் கிரியை எனப்படும். பெயர் சூட்டுதல், ஏடு தொடக்குதல், உபநயனச்சடங்கு, திருமணச்சடங்கு என்பன இவற்றுள் சில. அச்சடங்குகள் அனைத்தும் இறைசிந்தனையுடனையே ஆற்றப்படுகின்றன. பிறந்த குழந்தைக்குப் பெயர் சூட்டும் போது பெயர் இறைவனதும் அல்லது இறை அடியார்களினதும் திருப்பெயர்களில் ஒன்றாக இருக்க வேண்டும் என எதிர்பார்ப்பர். குழந்தைக்கு முடி இறக்குதல், உணவு ஊட்டுதல் போன்றவற்றையும் புனித ஆலயங்களில் இடம்பெறச் செய்வர். திருமணச்சடங்கில் அட்டதிக்குத் தேவதைகளின் ஆசி, முன்னோர்களின் ஆசி என்பன பெறப்படுவதோடு மணமகனையும், மணமகளையும் சிவ சக்தியாகக் கருதி ஆசீர்வதிப்பர்.

உயிர் உடலை விட்டுப் பிரிந்ததும் ஆற்றப்படும் அபரக் கிரியைகளில் மரணச்சடங்கு பிரதானமானது. இறந்த ஆன்மாவை இறைவனுடன்

இரண்டறக்கலக்கச் செய்யும் முகமாக இங்கு பல கிரியைகள் இடம்பெறும். அதாவது சீவனை சிவனாகப் பாவித்து அக்கிரியைகள் தொடரப்படுகின்றன. அதனைத் தொடர்ந்து ஆற்றப்படும் காடாற்று, அந்தியேட்டி, மாளயம் முதலான கிரியைகளும் ஆன்மாவை மோட்சத்துக்கு இட்டுச்செல்லும் முகமாக இறைசிந்தனையுடனேயே ஆற்றப்படுகின்றன.

## ஆ. பாடசாலையில் சமயம்

வீட்டில் எமது பெற்றோர்களின் மூலம் பெற்றுக் கொண்ட சமய ஆன்மிக மரபுகளை மேலும் மெருகூட்டும் இடமாக பாடசாலை அமைகின்றது. பாடசாலையில் ஆற்றப்படும் பலதரப்பட்ட செயற்பாடுகள் இறைசிந்தனையுடனேயே ஆற்றப்படுவதை நாம் அனைவரும் அறிவோம்.

பாடசாலை அன்றாடச் செயலொழுங்கில் காலைப்பிரார்த்தனை, வகுப்பறையிலுள்ள சுவாமிப் படங்களுக்கு மலர் தூவி விளக்கு ஏற்றுதல், ஆசிரியர் வகுப்புக்கு வரும் போது எழுந்து நின்று வணக்கம் தெரிவித்தல், எழுதும் போது பிள்ளையார் சுழி இடல், பாடசாலை நிறைவுறும் போது பிரார்த்தனையுடன் நிறைவுறச் செய்தல் போன்ற நாளாந்த செயற்பாடுகள் அனைத்தும் இறைசிந்தனையுடனேயே ஆற்றப்படுகின்றன. விசேடமாக பாடசாலைக்கு அருகிலுள்ள ஆலயத்துக்குச் செல்லுதல், அங்கு இடம்பெறும் பூசை விழாக்களில் மாணவர்கள் பங்கேற்றல் என்பன இறைசிந்தனையுடன் ஆற்றப்படும் செயல்களாக அமைகின்றன.

### பாடசாலையில் சமய விழாக்களை ஆற்றுவதன் முக்கியத்துவம்

சைவ சமய மாணவர்களாகிய நாம் எமது பாடசாலையில் பல சைவ சமய விழாக்களை மேற்கொள்கின்றோம். சிவராத்திரி விழா, நவராத்திரி விழா, நாயன்மார் குருபூசை என்பன அவற்றுள் சிலவாகும்.

பாடசாலைகளில் சமய விழாக்களை நடாத்தும் போது மாணவர்கள் மத்தியில் இலைமறைகாயாக மறைந்திருக்கும் பலதரப்பட்ட திறமைகளை வெளிக்கொணர வாய்ப்பு ஏற்படுகிறது. நவராத்திரிக் காலங்களில் இடம்பெறும் ஒன்பது நாள் பூசைகளும் ஒவ்வொரு வகுப்பு மாணவர்களது உபயமாக ஆற்றப்படுவதை நீங்கள் அறிவீர்கள். அப்போது தலைமைத்துவம், பொறுப்புணர்வு, குழு ஒருமைப்பாடு ஆகிய விழுமியங்கள் மாணவர் மத்தியில் உருவாகின்றன. கோலமிடுதல் போட்டி, மாலைகட்டுதல் போட்டி, தோரணம் கட்டுதல் போட்டி, பேச்சுப் போட்டி மற்றும் பண்ணிசைப் போட்டி என சமய சார்பான போட்டிகளை மாணவர்கள் மத்தியில் நடாத்துகின்ற போது இதுவரை காலமும் தமது திறமைகளை வெளிப்படுத்த சந்தர்ப்பம் கிடைக்கப் பெறாத மாணவர்கள் திறமைகளை வெளிப்படுத்த சந்தர்ப்பம் கிடைக்கிறது.

வீடுகளில் சமய நிகழ்வுகளை ஆற்றும் போது வீட்டுக்கு வீடு கிரியைகளும் சடங்கு முறைகளும் அவற்றை ஆற்றும் முறைமையும் சற்று மாறுபட்டுக் காணப்படலாம். அதனால் சமய விழாக்களைச் சரியான முறையில் நிகழ்த்துவது என்பதனைப் போதிக்கும் இடமாகப் பாடசாலை அமைகின்றது.

மாணவர்கள், பாடசாலையில் ஆற்றப்படுகின்ற சமய விழாக்களின் போது அங்கே பேசப்படுகின்ற நற்சிந்தனைகள், பிரசங்கங்கள் என்பவற்றை பாடசாலையின் சட்ட திட்டங்களுக்கமைய அவற்றை செவிமடுக்கின்றனர். இந்நிலையை கோயிலிலோ வீட்டிலோ ஏற்படுத்துவது அரிதாகவே காணப்படும்.

நாயன்மார்களது குருபூசை மற்றும் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரது குருபூசை என்பனவற்றை பாடசாலைகளில் ஆற்றும் போது, இளமைப் பராயத்திலிருந்தே குறித்த மெய்யடியார்கள் நமது சமயத்தின் வளர்ச்சிக்கு ஆற்றிய பணிகளை எண்ணிப்பார்ப்பதற்கும் அவர்கள் ஆற்றிய வழியினின்று தாமும் தமது சமூகத்தில் சைவ சமய விழுமியங்களை முன்னெடுக்க வேண்டுமென்ற உள்ளார்ந்த உந்தல்கள் மாணவர்கள் மத்தியில் தோன்றுவதற்கும் இவ்விழாக்கள் வழிவகுக்கின்றன.

தமது பாடசாலை உபயமாக அயலிலுள்ள ஆலயமொன்றில் இடம்பெறும் திருவிழா ஒன்றினைப் பொறுப்பேற்று நடத்துதல், இவ்விழாவில் அனைத்து மாணவர்களும் கலந்து கொள்ளுதல், இவ்வாலயத்துக்கு வேண்டிய திருப்பணிகளுக்கு உதவுதல், என்பவற்றின் மூலம் இறைசிந்தனையுடன் மாணவர்கள் செயலாற்ற வழிவகுக்கப்படுகின்றன. நமது நாட்டிலுள்ள தேவாரப் பாடல்பெற்ற திருத்தலங்களில் ஒன்றாகிய திருக்கேதீச்சர ஆலயத்தின் வருடாந்த மகோற்சவத்தினை, நாட்டில் உள்ள முன்னணிச் சைவப்பாடசாலைகளின் மாணவர்கள் ஒவ்வொரு திருவிழாவையும் தமது உபயமாக ஆற்றுவது அதற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## இ. கோயிலும் சமயமும்

காலத்தால் முற்பட்ட சமயமாகிய நமது சைவம் இன்றளவும் நிலைத்து எம்மையெல்லாம் சீரிய வழியில் நெறிப்படுத்திச் செல்வதற்குக் காரணம், அந்நெறி கூறும் ஒழுக்கங்கள் செயலாக்கம் பெறும் ஆலயங்களாலேயே எனலாம். எமது சைவ சமயத்தையும் ஆலயங்களையும் வேறுபடுத்திப்பார்க்க முடியாத அளவுக்கு அவை பின்னிப்பிணைந்து காணப்படுகின்றன. அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூவகைத் திருமேனிகளையுடைய இறைவனை உருவமாகவும் அருவுருவமாகவும் வழிபடத்தக்க இடமாக ஆலயம் அமைகிறது. அத்தகைய ஆலயங்களை நீக்கி விட்டு எமது சைவ சமய வளர்ச்சியை நோக்குவோமாயின் அது இயலாததாக அமையும். அந்தளவுக்குச் சைவ சமய வளர்ச்சியில் ஆலயமும் ஆலயங்களின் வளர்ச்சியில் சைவ சமயமும் பின்னிப் பிணைந்தவையாகக்

காணப்படுகின்றன.

நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம் பிரானுடைய கோயில் புக்கு
புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடி
தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி
சங்கராசய போற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடை எம் ஆதி என்றும்
ஆரூராவென்றென்றே அலறா நில்லே.

என்ற நாவுக்கரசரது தேவாரத்தில் ஆலய வழிபாட்டின் அவசியம் உணர்த்தப்படுகிறது. சைவ சமயம் கூறும் அனைத்து வழிபாட்டு நிகழ்வுகளும் அதிகளவில் செயலாக்கம் பெற்று நடைமுறைப்படுத்தப்படும் இடங்களாக ஆலயங்களே அமைகின்றன. அதனால்த் தான் ஆன்மாக்கள் லயப்படும் இடமாக ஆலயங்கள் விளங்குகின்றன. ஆலயங்களில் இடம்பெறும் கிரியைகள் நித்திய கிரியைகள், நைமித்திய கிரியைகள் என இருவகைப்படும். நித்திய கிரியைகள் பயன் கருதாது ஆலயத்தில் அன்றாடம் கிரம ஒழுங்கில் ஆற்றப்படும் கிரியைகள் ஆகும். திருவனந்தல், காலை, உச்சி, மாலை, இரண்டாம் சாமம், அர்த்த சாமம் என ஆறு காலங்களில் ஆற்றப்படும் பூசைகள் குறிப்பிடத்தக்கனவாகும். சில ஆலயங்களில் ஆலயத்தின் வசதிக்கேற்ப ஒரு வேளைப் பூசை, இருவேளைப்பூசை, மூன்றுவேளைப் பூசை என்பன இடம்பெறும். திருச்செந்தூர் முருகன் ஆலயத்தில் பன்னிரண்டு வேளை பூசைகள் இடம்பெறுகின்றன.

விசேட காலங்களில் பயன் கருதி ஆற்றப்படுகிற கிரியைகள் நைமித்திய கிரியைகள் ஆகும். அதாவது வருடாந்த மகோற்சவம், தைப்பூசம், சிவராத்திரி, புதுவருடப்பிறப்பு, நவராத்திரி, கந்த சஷ்டி, திருவெம்பாவை முதலான காலங்களில் இடம்பெறுபவை.

ஆலயத்தில் வருடாந்த மகோற்சவம் தொடங்கி விட்டால் ஊர் மக்களது உள்ளங்களில் புதுவித குதூகலிப்பு ஏற்படுகிறது. அன்றாடம் உழைப்பதும் உண்பதுமான வாழ்க்கையில் சலிப்படையும் மக்களுக்கு இத்தகைய ஆலய விழாக்கள் புதுவித உற்சாகத்தையும், பூரிப்பையும் ஏற்படுத்த வல்லன. வீடுகள் புனிதமாக்கப்படுவதோடு பக்தி சிரத்தையுடன் விரதமிருந்து நேர்த்திக்கடன்களை நிறைவேற்றி அயலூர்களிலிருந்து விழாக்களைக் காணவரும் அடியவர்களை வரவேற்று அவர்களுக்கு விருந்துபசாரம் செய்தும் இன்புறுவர்.

ஆலயத்திலே ஊர் மக்கள் அனைவரும் ஒன்றுகூடி கோயிலையும் திருவீதிகளையும் சுத்தம் செய்து பழக்குலை வாழைகளை நாட்டி மகரதோரணங்களால் ஆலயத்தினை அலங்கரிப்பர். ஆலயத்தில் இடம்பெறும் மகோற்சவம் இறைவனின் ஐந்தொழிலை நினைவூட்டுகிறது. அங்குரார்ப்பணம்,

திருக்கல்யாணம், கொடியேற்றம், இரட்சாபந்தனம் ஆகிய விழாக்கள் படைத்தலையும், வாகனத்திருவிழா, ஓமம், பலி என்பன காத்தலையும், சூர்ணோற்சவம், தேர் என்பன அழித்தலையும், மௌனோற்சவம் மறைத்தலையும், ஊடல்த் திருவிழா, தீர்த்தத் திருவிழா என்பன அருளலையும் குறிக்கின்றன. அது போன்று கொடியேற்றத் திருவிழா முப்பொருள் தத்துவத்தை வெளிப்படுத்துவதாக அறிஞர்கள் குறிப்பிடுவர். கொடி மரம் பதியையும், கொடிச்சீலை பசுவையும், சீலையுடன் சேர்ந்த கயிறு பாசத்தையும் குறிக்கும் என்பர்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. உங்களது வீட்டில் இறைசிந்தனையுடன் இடம்பெறும் நாளாந்தக் கடமைகள் மூன்று தருக.
2. பாடசாலையில் சமய விழாக்களை நிகழ்த்துவதனால் மாணவர்கள் அடையும் நன்மைகள் இரண்டு தருக.
3. எவ்வாலயத்தின் மகோற்சவப் பெருவிழா பாடசாலை மாணவர்களால் ஆற்றப்படுகிறது?
4. பன்னிரண்டு வேளை பூசை இடம்பெறும் ஆலயம் யாது?
5. ஆலயங்களில் இடம்பெறும் மகோற்சவம் குறிக்கும் தத்துவத்தினை விவரிக்குக?

## செயற்பாடு

1. உமது பாடசாலையில் கொண்டாடப்படும் சமய விழாவினை நீர் தலைமைதாங்கி நடத்துவதாகக் கருதி அவ்விழாவுக்கான முன்னேற்பாடுகளை பட்டியல் படுத்தி வகுப்பறையில் சமர்ப்பிக்குக.
2. உமது ஊரில் உள்ள ஆலயத்தில் இடம்பெறும் வருடாந்த மகோற்சவ காலங்களில் ஊர் மக்களது செயற்பாடுகளை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்.

1. நமது செயற்பாடுகள் அனைத்தும் இறை சிந்தனையுடன் கூடியனவாக அமைதல் வேண்டும்.

2. வீட்டில் இடம்பெறும் நாளாந்த நிகழ்வுகளின் போதும் விசேட நிகழ்வுகளின் போதும் இறை சிந்தனையுடன் செயற்படுகிறோம்.

3. பாடசாலையின் அன்றாட, விசேட நிகழ்வுகள் இறை சிந்தனையுடன் ஆற்றப்படுவதோடு இந்நிகழ்வுகள் மூலம் மாணவர்கள் பலதரப்பட்ட திறன்களை வெளிப்படுத்தச் சந்தர்ப்பம் வழங்கப்படுகிறது.

4. சமய வாழ்வும் ஆலய நிகழ்வுகளும் ஒன்றோடொன்று வேறுபாடின்றிச் சைவமக்களை வளப்படுத்துகின்றன.

# 3 சமய ஒழுகலாறுகள்

சமயம் என்றால் வாழும் முறைமை அல்லது வாழ்க்கை நெறி எனப்படுமென்றும் அதுஒழுகலாறுகளையும் வழக்காறுகளையும் தெரிவிப்பனவென்றும் முன்னையவகுப்பில் அறிந்துகொண்டோம். இங்கு விழுமியங்கள் என்ற தலைப்பில் மேலும்சில விடயங்களை விளங்கிக்கொள்வோம். சைவநெறியானது ஒழுங்குபடுத்தப்பட்ட, பண்படுத்தப்பட்ட, சீரிய ஒழுகலாறுகளை சமயம் சார்ந்த அறவாழ்க்கையாக எமக்குக்காட்டுகிறது. ஒருவன் உயர்வான ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து வாழ்வானேயானால் அவனிடத்தே ஆன்மிக ஒளி பிரகாசம் பெறுதல் இலகுவாகும்.

உயிரினும் மேலான ஒழுக்க வாழ்வின் மூலம் பெறப்பட்ட பண்புகளையும் தலையான பெறுமானங்களையும் விழுமியங்கள் எனச் சொல்லலாம். **"ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை"**என்றும், **"ஒழுக்கம் இல்லான்கண் உயர்வு இல்லை"** என்றும் சான்றோர் செப்பிய வாக்குகள் இதனை வலியுறுத்தும். நீடுவாழ்வை நிர்ணயிக்கும் விழுமியங்களால் மானிடன் உயர்கிறான். வள்ளுவப்பெருமானும் **'பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார் நீடு வாழ்வார்'** எனச் சுட்டியிருக்குமிடமும் இவ்விழுமியமே. ஒழுக்கமும் சமயமும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களாகும்.

சமயவாழ்வின் வெற்றி, ஆன்மிக விடுதலை எல்லாமே நாம் கடைப்பிடிக்கும் விழுமியங்களில் தான் தங்கியிருக்கிறது என்றால் மிகையாகாது. நல்ல பண்பாடு, சீரிய ஒழுகலாறுகள், பழக்க வழக்கங்கள், மனித நேயப்பண்புகள், தியாக சிந்தனைகள் உடைய ஒருவன், நல்ல விழுமியங்களையுடையவனாகப் போற்றப்படுவான்.

மனித விழுமியங்களெனப் போற்றப்படும் எவையும் உலகம் தழுவிய அன்பினை வளர்த்துக்கொள்ளும் நோக்கில் அமையும். பொதுவாக சமயங்களனைத்தும் பாவங்களையும், தீயனவற்றையும் விலக்கி, சீரிய வாழ்க்கை வாழவேண்டிய அவசியத்தையும் தன்னுயிர்போல் மன்னுயிர்களையும் பிற உயிரினங்களையும் மதித்து நேசித்தலையுமே விழுமியங்களில் சிறந்ததாகக் குறித்துச் சொல்கின்றன. **"புண்ணியமாம் பாவம் போம்"**என்பதுதான் அடிப்படையான சமயநெறி எனப்பேசப்படினும், சைவநெறியென்னும்

விழுமியங்களாக மேல்வரும் விடயங்களை நாம் விசேடமாகக் கடைப்பிடித்தல் இன்றியமையாததாகும்.



1. சமய ஒழுகலாறுகளின் வழிநின்று சைவசமயியாக வாழ்தல்.
2. நற்பிரசையாக வாழ்தல்.
3. தான தர்மம் செய்தல்.
4. தமக்கும் சமூகத்திற்கும் உதவியாக வாழ்தல்.
5. அர்ப்பண சிந்தையுடன் வழிபாட்டில் ஈடுபடுதல்.
6. மகிழ்வான மனநிலையைச் சகலருக்கும் ஏற்படுத்தல்.
7. சமூக நோக்குடன் செயற்படுதல்.

சைவசமயம் என்பதற்கு அறிவுமயமான, அன்புமயமான தலைவனை அடைவதற்கு வழியெனப் பொருள்கொள்ளப்படும். சைவசமயத்தைச் சுத்தாத்துவ சைவசித்தாந்த வைதிகசமய நன்னெறியென்று அடைமொழிகள் கொடுத்துச் சிறப்பித்துச் சொல்வதுமுண்டு. அவை ஒழுக்கத்தின் வாயிலாகப் பெறும் பேரின்பத்தைப் போற்றுபவையாகும்.

மேல்வருவன சைவசமயத்தின் சிறப்பு இலட்சணங்களாகும்.

1. அறிவை ஆதாரமாகக் கொள்வது.
2. அன்பை அடிப்படையாகக் கொண்டுள்ளது.
3. அறவொழுக்கத்தை மேலாகப் போற்றுவது.
4. சகிப்புத்தன்மையுடையது, சமநோக்குடையது.
5. இகபர நன்மைகளை ஒருங்கே பயக்கும் தன்மையது.

நமக்கு நேரே புலப்படும் உடல், உயிர், உலகம், அதனுள் இயங்கும் பொருள், இயங்காப்பொருள் ஆகியவற்றையும் நுண்ணறிவால் ஆராய்ச்சிசெய்யும் பொழுது எழுகின்ற மறை பொருளாகிய கடவுளையும், நன்மை தீமை, இன்பதுன்பம், இம்மை மறுமை ஆகிய இவற்றையும், இவற்றின் சம்பந்தமாகத் தோன்றும் பற்பல இயல்புகளையும், கொள்கைகளையும் அளந்து அறியும்படி

சைவசமயமானது வற்புறுத்துகிறது. இவ்வடிப்படை ஆராய்ச்சியைத்தான் **முப்பொருள் தத்துவம்** அல்லது **பதி, பசு, பாச** ஆராய்ச்சி எனச் **சைவசித்தாந்தம்** குறிப்பிடும்.

மெய்ப்பொருளாராய்ச்சியானது தன்னைத் தான் அறிவது. தன்னை அறிந்தவன்தான் தன் தலைவனை அறிவான். உயிரிற் புறப் பொருளை ஆராயாமல் உயிர்ப்பொருளை அறிய முடியாதென்று சித்தாந்தம் உறுதியாகச் சொல்கிறது. தற்காலத்தில் மேனாட்டு விஞ்ஞான அறிஞர்களும் தங்களுடைய நுண்ணிய ஆராய்ச்சியால் இந்த முடிவிற்கு வந்துள்ளார்கள். பரம்பொருள் சகலபொருள்களிடத்தும் ஒன்றாகியும், உடனாகியும், வேறாகியும் நிற்பதால் தன்னையும் பிறரையும் கடவுளையும் சேர்த்துப் பிடித்து ஒன்றாகக் காண்பதுதான் மெய்யறிவு எனப் புகட்டுகிறது சைவநெறி.

**"அன்பும் சிவமும் இரண்டெனப்பர்** அறிவிலார் என்றும் **'அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே"** என்றும் திருமந்திரம் கூறுகிறது. அன்புதான் சைவத்தின் உயிர்நிலை. மனிதன் உண்மையில் தன்னை நேசிப்பானாயின் அவன் கடவுளையும், பிறரையும், பிறவுயிர்களையும் நேசிக்கக் கடமைப்பட்டிருக்கிறான். மேலும் மெய்யன்பாவது பிரதிப் பிரயோசனம் கருதுவதாகவும் வித்தியாசம் பார்ப்பதாகவும், செயலற்றதாகவும் இருக்காது.

**மனிதனை நடமாடும் கோயில்** என்பர். மேலும் **இயங்கும் உயிரனைத்தும் ஈசன் கோயிலாகும்.** எவ்வுயிரும் **ஈசன் சந்நிதியாகும்** என்றும் சைவநெறி கூறுகிறது. காணப்படுகின்ற மனிதரிடத்து அன்பு இல்லாதபொழுது, ஈசனிடத்து அன்புடையோன் போல் ஒழுகுவது கேலிக்கூத்துப் போன்றதாகும்.

அறிவு, அன்பு ஆகிய இரண்டினதும் பயன் அறனும் ஒழுக்கமும் தான். மனத்துக்கண் மாசிலனாக அறநெறி நிற்றல், ஒழுக்கத்தை உயிரினும் ஓம்புதலாகிய தூய வழியில் கடைப்பிடித்தல் இரண்டுந்தான் மக்கட் பண்புடையார்க்கு அழகென்று சைவசமயம் வற்புறுத்துகிறது. மேலும், மனிதன் எதை நினைக்கிறானோ எதைப் பேசுகிறானோ எதை உணர்கிறானோ அவற்றின் வண்ணம் ஆகிறான் என்பதே சைவ நுண்ணறிவு.

மனம், மொழி, மெய்களை அடக்கி ஆளும் விஷயத்தில் அவசியமாக இருக்க வேண்டியவை, பயன் கருதி விழைய வேண்டியவை எனச் சைவம் சில வரையறைகளை வகுத்துமிருக்கிறது.

* அழுக்காறு , அவா, வெகுளி முதலிய மனக்குற்றங்கள்.
* இன்னாமொழிதல், புறங்கூறல், பொய் சொல்லல் முதலியவைகள்.
* களவு, கொலை, காமம், கள்ளுண்ணல், சூதாடல் முதலிய

பஞ்சமாபாதகங்கள் போன்ற தீய ஒழுக்கங்கள் தள்ளப்பட வேண்டியவையாம்.

கொள்ள வேண்டிய உத்தம குணங்களாகச் சான்றோர் மேல்வருவனவற்றை வகுத்துக்காட்டியுள்ளனர்.

* மனம், மொழி, மெய்யை அடக்குதல்.
* நல்லன நினைத்தல்.
* செய்ந்நன்றி அறிதல்.
* இனியவை கூறுதல்.
* உண்மையுரைத்தல்.
* பயனுடையன சொல்லல்.
* நூலோதுதல்.
* சுத்தமாயிருத்தல்.
* வறியோர்க்குதவுதல்.
* விருந்தோம்பல்.
* ஆபத்திலுதவுதல்.

இவற்றைவிடச் சைவநெறியானது ஒப்புமை ஒழுகல், புகழ்பட வாழ்தல், சமயாசாரங்களைக் கடைப்பிடித்தல், தவஞ்செய்தல் முதலிய சைவப் பழக்கங்களையும் தமது வாழ்வில் கைக்கொள்ள வேண்டுமென்று விதிக்கிறது.

அறிவு, அன்பு, ஒழுக்கம் இல்லாத மதங்கள் உலகத்தில் கிடையாது என்பதும், **"எல்லாம் இறைவன் செயல்" "அவனருளாலல்லாது அணுவும் அசையாது"** என்பதும் **சகல மதங்களும் இறைவன் ஆணையினின்றும் எழுந்தவையே** என்பதும் சைவநெறி காட்டும் சன்மார்க்கமாகும். கடவுள் ஒருவராக இருந்த போதிலும் அவரை வழிபடும் மதங்கள் எப்பொழுதும் பற்பலவாகத் தானிருத்தல் இயல்பே. எல்லாச் சமயங்களினிடையேயும் காணப்படும் உட்பிரிவே இதற்குச் சான்றாகும். ஆனால் சகல சமயங்களிடத்தும் கடவுளின் அருட்செயலைப் பார்க்க வேண்டும் என்பது சைவத்தின் போதனை. சைவசமயம் சகிப்புணர்வை அடிப்படையாகக் கொண்டது, எல்லா உயிர்களையும் நேசிப்பது.

தாய் போன்ற விசால நோக்கமும், சகிப்புத்தன்மையும், அணைத்தாதரிக்கும் பான்மையும் சைவ சமயத்தின் இயற்கையான இயல்புகளாகும்.

யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனார் தாம் வருவர்.

என்னும் பாடல் இங்கு எடுத்து நோக்கத்தக்கது.

இகவாழ்வுக்கும், பரவாழ்வுக்கும் ஏற்ற நெறிகளைக் காட்டி அவற்றின் வெற்றிக்கு வழிவகுப்பது சைவ நெறியாகும். மனிதன் நன்மை கருதியே தனு, கரண, புவன போகங்களை உபகரிக்கும் இறைவன், உயிர்களுக்கு யோகம் புரிதற் பொருட்டு யோகத்திருமேனியைத் தானே கொண்டு விளங்குகிறான். இகத்தின் மூலமாகத்தான் பரவாழ்வு சித்திக்கும் என்பதும் கருவியைக் கருவியாக உபயோகப்படுத்திக் கொள்ள வேண்டுமே தவிர, கருவி மூலமாக அடைய வேண்டிய பொருளை விட்டு கருவியையே பொருளாக மதித்து அங்கலாய்க்கக் கூடாது என்பதும் சைவ நெறிகாட்டும் விழுமியமாகும். பொதுவாகச் சொன்னால் மண்ணில் நல்ல வண்ணம் மானிடர் வாழவும் அவர்களின் துன்ப துயரங்களை மாற்றவும், சந்தேகங்களை நிவர்த்திக்கவும் சைவநெறியானது வழிகாட்டி நிற்கிறது.

சிவனருள் பெற்ற சமயகுரவர்கள், நாயன்மார்கள், அனுபூதிமான்கள், அருளாளர்கள், ஆன்றோர்கள் தத்தம் அனுபவத்தாற் கண்டவற்றை அருளியும், எழுதியும், தொகுத்தும், வகுத்தும் சாத்திரங்களாகத் தந்துள்ளனர். அறிவும், ஞானமும், பக்தியும், முத்தியும் சித்திக்க வழிதரும் நெறி, சைவ நெறி என்பதை நாம் தெளிவாக விளங்கிக் கொண்டால் இன்பமே எந்நாளும் துன்பமில்லை.

 மேல்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. சைவ சமயம் கூறும் விழுமியங்கள் ஐந்து எழுதுக?
2. சிவவழிபாடு இகவாழ்வுக்கும், பரவாழ்வுக்கும் பயன் தருவது என்ற கருத்தை விளக்குக.
3. நற்பிரஜையாக வாழ்தல் பற்றிச் சமயம் கூற விழையும் செய்தி யாது?
4. வழக்காறுகள், மரபுகள், பாரம்பரியங்களைச் சைவநெறி எந்த வகையில் கடைப்பிடிக்கத் தூண்டுகிறது?
5. வாழ்வோடு இணைந்து வரும் சமயக்கிரியைகளையும் சடங்குகள் சிலவற்றினையும் எடுத்துக் காட்டுக?

## செயற்பாடு

01. சைவ சமயம் கற்பிக்கும் ஏதாவது ஒரு நல்ல விழுமியத்தைக் கடைப்பிடித்தவரின் வெற்றியை எடுத்துக் காட்டும் சம்பவமொன்றை வகுப்பறையில் ஒரு பேச்சாக நிகழ்த்திக் காட்டுக.

02. மேலே வலியுறுத்திய விழுமியத்தின் சிறப்பை உணர்த்த, இச் சம்பவத்தை ஒரு குறுநாடகமாக அமைத்து நடிக்குக.

## பாடச்சுருக்கம்

01. சமயமும், அறவாழ்வும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை. சமயம், மனிதன் வையத்தில் வாழ்வாங்கு வாழும் முறைமையை வலியுறுத்துகிறது.

02. சமய ஆசாரமான வாழ்வு வாழ்பவன், மகேசனுக்குப் பிரியமானவனாகிச் சமூகத்தின் நற்பிரஜையுமாகிறான்.

# 4 சடங்குகளும் சம்பிரதாயங்களும்

சடங்குகள் சமயத்தின் பண்பாட்டுப் பிரதிபலிப்புகளாகும். வழிவழியாக வரும் மரபுகளைக் காத்திடும் பணிக்குச் சடங்குகள் பெரிதும் உதவுகின்றன. முன்னோர் இவற்றைக் கரணங்கள் என்கிறார்கள். உண்மையான உணர்வுடன் மனம் ஒன்றிச் செயற்பட்டால் சடுதியில் பயன்தருவது எனும் கருத்திலேயே சடங்குகள் செய்யப்படுகின்றன. முன்னோர்கள் செய்த செயல்களைக் காரண காரிய ஆராய்ச்சியில் ஈடுபடுத்தாமல் தாம்கண்டவாறே பின்பற்றுவதும் நிகழ்த்துவதும் சடங்கின் முறைமையாகும்.

வாழ்க்கை இன்பத்தைப் பெற்றுக்கொள்ளவும், துன்பத்தைப் பகிர்ந்து கொள்ளவும், கடமைகளை உணர்ந்து செயலாற்றி வெற்றிகண்டு வாழ்வினைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ளவும் மக்கள் ஒப்புரவு முறையில் உதவியும் துணையுஞ் செய்து, உறவுகளை வலுப்படுத்திக் கொள்ளவும் சடங்குகள் உதவுகின்றன. இவ்வகையில் எமது சமயத்தில் மனித வாழ்வின் பிறப்பு முதல் இறப்பு வரை பலவித சடங்குகள் இடம்பெறுகின்றன.

அவையாவன: சமயச் சடங்குகள், பிறப்பு, திருமணம், இறப்புச் சடங்குகள் என்பனவாகும்.

## திருமணச் சடங்கு



திருமணச் சடங்கு என்பது ஆண், பெண் ஆகிய இருபாலாரையும் இல்லறத்தில் இணைப்பதற்காகச் செய்யப்படும் சடங்காகும். மானிடப் பிறப்பு எடுத்ததற்கு அறம், பொருள், இன்பம், வீடு என்பவற்றை அடைவதற்கு ஒரு வாழ்க்கைத் துணையைத் தேடி இணைத்துக் கொள்ளும் ஒரு நிகழ்வே திருமணமாகும்.

திருமணம் **“விவாகம்”** என்றும் கூறப்படும். **“விவாகம்”** என்பதற்குச் **“சிறப்பாகச் சுமப்பது”** என்று பொருள் உண்டு. **“வஹ்”** எனும் வினையடி **“சுமத்தல்”** என்ற கருத்தைத் தருகின்றது. ஆதலால் தர்ம காரியத்தைச் செய்ய வேண்டிய பொறுப்பு இந்த விவாகத்தில் நிச்சயிக்கப்படுகிறது. இந்தத்

தர்ம நியதியைக் கொண்டே இல்லறம் எனப் போற்றப்படுகிறது. இது மங்கலத்தைத் தருவதால் **'கல்யாணம்'** என்றும் தெய்வத் தன்மை பொருந்திய மணம் என்பதால் **'திருமணம்'** எனவும் வழங்கப்படுகிறது.

## அ. திருமண நாளுக்கு முன்னர் நடைபெறும் நிகழ்வுகள்

திருமண நிகழ்ச்சிக்கு முன்பதாக நிச்சயதார்த்தம் நடைபெறும். தாரம்-மனைவி. தாரத்துவம் மனைவியாகும் தன்மையை நிச்சயப்படுத்துவது. இதனைத் தமிழில் திருமண உறுதி என்பர். இன்னார்க்கு இன்னார் உன உறுதி செய்யப்பட்டு மணமக்களது பெற்றோர், சான்றோர், சுற்றம் கூடிய அவையில் வெற்றிலை, பாக்கு, பழம் இவற்றுடன் மணஉறுதியையும் வைத்துச் சம்பந்திகள் பரிமாறுவர். பின் திருமண உறுதி வாசிக்கப்படும்.

பொன்னுருக்கு என்பது மாங்கல்யம் செய்வதற்கு நாள்பார்த்து மாப்பிள்ளை வீட்டில் பொன்னை உருக்குதல் ஆகும். இதில் மணப்பெண் தவிர ஏனைய உறவினர்கள், நண்பர்கள் கலந்து கொள்வர். இதன் போது பெண்வீட்டார் இனிப்புப் பலகாரம் கொண்டு செல்லுதல் சம்பிரதாயமாகும். இதே நாள் பெண்வீட்டிலும், மணமகன் வீட்டிலும் தனித்தனியே அவரவர்களின் வளவிலும் ஈசானமூலையில்(வடகிழக்கு) முகூர்த்தக்கால் (கன்னிக்கால்) ஊன்றுவர்.

இதற்கு இப்போது முள்முருக்கந் தடியை வெட்டி அதன் நுனியில் ஐந்து மாவிலைகளை மஞ்சள் பூசிய கயிற்றாற் கட்டிச் சுமங்கலிப் பெண்களால் நவதானியம் இட்டு ஊன்றப்படும். முகூர்த்தக்கால் ஊன்றிய பின் இருவீட்டாரும் திருமணச் சடங்குகள் முற்றாக முடியும் வரை எந்த விதமான அமங்கல நிகழ்ச்சிகளிலும் பங்கு கொள்ளக்கூடாது.

## ஆ. திருமணநாள் அன்று நடைபெறும் நிகழ்வுகள்.

திருமண நாளன்று நான்கு சுமங்கலிப் பெண்கள் மணமக்களுக்குப் பால், அறுகு வைத்து நீராட்டி அலங்கரிப்பர். சுபநேரத்தில் தோழனுடன் பெண்வீட்டார் மாப்பிள்ளை வீட்டிற்குச் சென்று பால், அறுகு வைத்து நீராட்டுவர். பின் மணப்பந்தலுக்கு அழைத்து வருவர். மாப்பிள்ளை வீட்டில் தலைப்பாகை வைத்தல் போன்ற நிகழ்வுகள் நடைபெறும். மணப்பந்தலின் முன்றலில் நிறைகுடம் வைத்து மங்கல விளக்கேற்றி வைப்பர். எல்லாக் காரியங்களுக்கும் முதலில் வணங்கும் விநாயகரை பசுவின் சாணத்தில் அல்லது மஞ்சள் மாவில் (பிள்ளையார் பிடித்து) எழுந்தருளச் செய்து மலர்சூட்டி மங்களப் பொருள்களையும் வரவேற்புக்குரிய சந்தனம், குங்குமம், பன்னீர் முதலியவற்றையும் வைப்பர்.

மாப்பிள்ளை தோழனுடன் வந்து சேர்ந்ததும் தோழன் மணமகனின் காலைக் கழுவுவார். தோழனுக்கு அன்பளிப்பாக மாப்பிள்ளை தங்க மோதிரம் அணிவிப்பார். சுமங்கலிகள் இருவர் ஆரத்தி எடுத்துத் திலகம் வைத்தலும், மாமனார் மாப்பிள்ளைக்கு மலர்மாலை சூட்டி வரவேற்பதும் வழக்கம்.(பிராமணக் கல்யாண வீடுகளில் காசி யாத்திரை, சாமா வர்த்தனம் எனும் கிரியைகளும் இடம்பெறும்.) அதன் பின் மாப்பிள்ளையைத் தோழன் நிறைகுடத்துக்கு வலப்பக்கமாக அழைத்துவந்து மணவறையில் அமரச் செய்வார். ஆயினும் நாட்டார் வழக்காறு சார்ந்த திருமணச்சடங்குகளில் இத்தகைய நடைமுறைகள் பல இடம்பெறுவதில்லை. வெவ்வேறு பிராந்தியங்களில் வேறுபட்ட சடங்குகள் மேற்கொள்ளப்படுவதைக் காணமுடிகிறது.

## திருமண மேடையில் நடைபெறும் கிரியைகள்

### 1. பவித்திரம் அணிதல் :

திருமணக் கிரியைகளை நிகழ்த்தும் சிவாச்சாரியார் தான் செய்யப்போகும் கருமத்திற்கு இறைவனிடத்தும் பெரியோர்களிடத்தும் ஆசிவேண்டுதல் அனுக்ஞை எனப்படும். அதனைத் தொடர்ந்து சங்கற்பம் நடைபெறும். அதாவது தான் செய்யப்போகும் கிரியைக்காக உள்ளத்தை உறுதி செய்தலாகும். இதனைத் தொடர்ந்து விநாயகர் ஆசமனம், பஞ்சகௌவிய பூசை என்பன இடம்பெறும்.

### 2. அங்குரார்ப்பணம் :

நவதானியங்கள் முளைப்பதற்காக இடுதல், மணமகன் மணமகள் ஆகிய இரு பகுதியினரிலும் உள்ள ஐந்து அல்லது மூன்று சுமங்கலிப் பெண்கள் தமது கைகளால் சட்டியில் நவதானியம் இடுவர். எல்லா நன்மைகளும் கிடைக்க வேண்டுமென்பதே இதன் நோக்கமாகும்.

### 3. இரட்சாபந்தனம் :

இது காப்புக் கட்டுதல் எனப்படும். மணமகன், மணமகள் ஆகியோருக்குத் தனித்தனியாகக் காப்புக் கட்டப்படும். மணமக்கள் பாவங்களிலிருந்து நீங்கித் தொடங்கிய காரியத்தைத் தடையின்றி முடிக்கவும் இடையில் குற்றங்கள் முதலியன தீண்டாதிருக்கவும் கையிற் காப்புக் கட்டப்படும்.

### 4. கும்ப பூசை :

மணமகனுக்குக் காப்புக்கட்டியதன் பின்னர் ஆசாரியார் முறைப்படி சிவனதும் சக்தியினதும் அருளைப் பெறுவதற்காகச் செய்யப்படுவது கும்ப பூசை எனப்படும்.

### 5. நவக்கிரக பூசை :

வாழ்க்கையில் அடியெடுத்து வைக்கும் மணமக்களுக்கு இப்பூசை நவக்கிரகங்களின் அருட்பார்வையைக் கொடுக்கும்.

### 6. ஓமம் வளர்த்தல் :

கும்பத்திலே பூசித்த சிவன், சக்தி ஆகியோரின் அருளை நிலைபெறச் செய்வதற்காக அக்கினி வளர்க்கப்படும். இது சிவாக்கினி எனப்படும்.

### 7. பிதுர் ஆசீர்வாதம் :

குடும்ப வாழ்க்கையைத் தொடங்கும் போது அது தவறின்றி நடப்பதற்கு அக்குடும்பத்து முன்னோரது ஆசீர்வாதத்தை வேண்டி, பிதுர்களைத் திருமணத்திற்கு அழைத்து அவர்களது ஆசியைப் பெறுவது இக்கிரியையின் நோக்கமாகும். இக்கிரியைகள் மணமக்களின் தந்தையால் செய்யப்படும்.

### 8. கன்னிகாதானம் :

தட்டொன்றில் வெற்றிலை, பாக்கு, வாழைப்பழம், எலுமிச்சம்பழம், தேங்காய், மஞ்சள் துண்டு, சில்லறைக்காசு, பொன், மலர் போன்ற பொருள்களை வைத்து பெண்ணின் கையைத் தட்டில் வைத்து மணமகளின் தந்தை தட்டையும் மகளையும் சேர்த்துப் பிடிப்பார். அவ்வேளையில் சிவாச்சாரியார் மந்திரம் ஓத, மங்கல வாத்தியங்கள் முழங்க மணமகளின் தாயார் மூன்று முறை வெற்றிலையில் தண்ணீர் விட்ட பின்னர் கன்னியைத் தானமாக மணமகன் கையில் கொடுப்பார்.

### 9. கூறை கொடுத்தல் :

பெண்ணின் திருமணச் சேலை, தாலி, மற்றும் உபசாரப் பொருட்களை வைத்துச் சார்த்திப் பூசித்த பின் பெரியோரினால், அவை ஆசீர்வதிக்கப்படும். பின்னர் மணமகன் மணமகளுக்கு உபசாரமாகக் கூறையைக் கொடுப்பார்.

## 10. தாலி கட்டல் :



மணமகளிடம் கொடுத்த கூறையை மணமகள் அணிந்து வந்த பின், மாங்கல்ய பூசை செய்து அவையோர் ஆசீர்வதிக்க, கெட்டி மேளம் முழங்கத் தாலிகட்டல் நடைபெறும். அதன் பின் மணமகள் மணமகனுக்கு இடப்பக்கமாக அமர்ந்து உமாமகேஸ்வரராகப் பாவனைப்படுத்திக் கிரியைகள் நடைபெறும்.

## 11. மாலை மாற்றுதல் :

பெண்ணின் கழுத்திலிருக்கும் மாலை ஆணுக்கும், ஆணின் கழுத்திலிருக்கும் மாலை பெண்ணுக்குமாக மாற்றப்படும். இது மூன்று முறை நிகழும். வாழ்க்கையில் உடலால், உள்ளத்தால், செயலால் நாமிருவரும் ஒருவரே என்ற தத்துவத்தினை இது விளக்குகிறது.



பால், பழம், தயிர், தேன், சர்க்கரை, நெய், சேர்த்துக்கொள்ளப்பட்ட பதார்த்தத்தை மணப்பெண் முதலில் மணமகனுக்கும், பின்னர் மணமகன் மணப்பெண்ணுக்கும் கொடுப்பர். உயர்ந்த பதார்த்தங்களின் சுவை போன்று மணமக்களது வாழ்வு நலம் பெற வேண்டும் என்பதற்காக இது வழங்கப்படுகிறது. இதுவே இதன் தாற்பரியமாகும்.

## 12. கோ தரிசனம் :

புண்ணியத்தின் வடிவமான பசுவைப் பார்த்தல் நல்ல சகுனம், வாழ்க்கையில் யாவும் வெற்றி பெறும் என்ற நம்பிக்கை மணமக்களுக்கு இதனால் ஏற்படும்.



### 13. ஏழடிவைத்தல் :

மணமகளுடைய கையை மணமகன் பிடித்துக் கொண்டு தோழி, தோழனுடன் அக்கினியை வலம் வருகையில் ஏழடி வந்ததும் அம்மி மிதித்தல் நடைபெறும். மும்முறை இந்த நிகழ்ச்சி நடைபெறும். இல்வாழ்விலே பெறவேண்டிய ஏழு பொருட்களையும் பெறுவதற்கு இருவரும் ஒத்து முயற்சித்தல் வேண்டும் என்பது ஏழடி வைத்தலின் அர்த்தமாகும். உணவுப்பொருள், உடற்பலம், கடவுள் வழிபாடு, மனஅமைதி, அறிவு, வாழ்வில் வரும் சுகங்கள், யாகத்திற்கு வேண்டிய பொருட்கள் என்பன அவ்வேழு பொருட்களாகும்.

### 14. அம்மி மிதித்தல் :

மணமகளது காலை மணமகன் தூக்கி அம்மி மீது வைப்பார். இதன் கருத்து, பெண்ணானவள் அந்தக் கல்லைப் போல மன உறுதியுடனும், கற்புடனும் வாழ வேண்டும் என்பதாகும்.

### 15. அருந்ததி பார்த்தல் :

இது ஒழுக்கம், அறிவு, பிறனில் விழையாமை, உறுதிப்பாடு ஆகியவற்றின் உயர்வு குறித்துக் காட்டப்படும். இது பெண்ணுக்கு மாத்திரமன்றி ஆணுக்கும் உரியதாகும்.



### 16. மோதிரம் எடுத்தல் :

மணமக்கள் கூச்சம் தெளியவும் சபைச் சிறப்புக்காகவும் மோதிரத்தை மஞ்சள் கலந்த நீரில் போட்டு, இருவரும் ஒரே சமயத்தில் வலது கைவிட்டு எடுக்க வேண்டும். மணமக்கள் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ வேண்டும் என்ற தத்துவத்தையே இது குறிக்கிறது. இறுதியாக ஆசாரியார் பூரணாகுதி செய்து மணமக்களை ஆசீர்வதிப்பார். அதன் பின்னர் பெரியோர் அறுகரிசி இட்டு ஆசீர்வதிப்பர். மணமக்கள் **'மரு'** உண்ணுதல் மரபு. மருவி உண்ணுதல் என்றால் கலந்து உண்ணல் என்பது பொருள். எங்கேயோ பிறந்து வளர்ந்த இருவர் திருமணத்தின் பின் ஒரே இடத்தில் கலந்து முதல் முதல் உண்ணுதல் **'மருவி உண்ணுதல்'** எனப்படும். இதுவே பூதாக்கலம்(கலத்தில் போடுதல்) எனப்படும். இந்துமதத்திருமணத்திலேயே இத்தகைய சடங்குகள் இடம்பெறுகின்றன. இவை ஒவ்வொன்றும் அர்த்தமுள்ள சடங்குகளாகவே அமைகின்றன.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. சடங்குகள் என்றால் என்ன?
2. நிச்சயதார்த்தம் என்றால் என்ன?
3. நவக்கிரக பூசை எதற்காக மேற்கொள்ளப்படுகிறது?
4. அம்மி மிதித்தல் என்பதன் அர்த்தம் என்ன?
5. பூதாக்கலம் என்றால் என்ன?

## செயற்பாடு

01) இந்துமதத் திருமணச்சடங்குகள் தொடர்பான தகவல்களைத் திரட்டி ஒப்படை ஒன்று தயாரிக்குக.

## பாடச்சுருக்கம்

- சடங்குகள் இனத்தின் பண்பாட்டுப் பிரதிபலிப்புகளாகும்.
- பல்வேறு வகையான சடங்குகள் மனித வாழ்க்கையில் இடம்பெறுகின்றன.
- ஆண், பெண் இருபாலாரையும் இல்லறம் எனும் வாழ்வியலில் இணைக்கும் சடங்கே திருமணச் சடங்காகும்.
- நிச்சயதார்த்தம் திருமணத்திற்கு முன் நடைபெறும் நிகழ்வாகும்.
- திருமண மேடையில் பவித்திரம் அணிதல், அங்குரார்ப்பணம், இரட்சாபந்தனம், கும்பபூசை, நவக்கிரக பூசை, ஓமம் வளர்த்தல் போன்ற கிரியைகள் நடைபெறும்.
- கன்னிகாதானம் என்பது கன்னியைத் தானமாக மணமகனுக்குக் கொடுத்தல் ஆகும்.

# 5 விரதங்கள்

மக்களின் மன வலிமையை அதிகரிக்கவும் நம்பிக்கை அடிப்படையில் அவர்கள் வாழ்வில் வளமும் நலமும் மிகுவதற்கும் விரதங்கள் உதவுகின்றன. குடும்ப நலம், உடல்நலம், விசுவாசம், தன்னம்பிக்கை, துணிவு, பணிவு, பக்தி, அன்னியோன்னியம் எனும் பண்புகளை அதிகரித்து வாழ்வில் ஒழுக்கம், நியமம், நேர்மை, தூய்மை என்பவற்றை விரதங்கள் அதிகமாக்குகின்றன. ஒவ்வொரு விரதமும் ஒவ்வொரு கோணத்தில் நின்று உடல் நலத்தையும், ஆயுள் விருத்தியையும் நல்குகின்றன.

விரத அனுட்டானங்களை நியம முறையுடன் அனுட்டிப்பது அவசியம். விரதங்களால் விஞ்ஞான ரீதியிலும், மெய்ஞ்ஞான ரீதியிலும், ஆன்மிக ரீதியிலும் கூட நலன்கள், பயன்கள் விளைகின்றன.

## விரத விதி

"விரதமாவது மனம் பொறிவழிப்போகாது நிற்றற்பொருட்டு, உணவை விடுத்தேனும், சுருக்கியேனும் மனம், வாக்கு, காயம் என்னும் மூன்றினாலும் கடவுளை மெய்யன்போடு விதிப்படி வழிபடல்" என்கிறார் நாவலர் பெருமான். அவசியமாக நித்தியம் செய்தே ஆக வேண்டியது நித்திய விரதம். ஒரு பலனை நாடிச் செய்வது காமிய விரதம் என வகைப்படுகின்றது.

## விரத வகைகள்

விரதங்களிலே பல வகைகளுள. இவற்றுள் சிவ விரதம், சக்தி விரதம், விநாயக விரதம், சுப்பிரமணிய விரதம் முதலானவை சிறப்பானவை. காலம், இடம், வாழ்க்கைக் கடமை, சிறப்பு நோக்கம் என்னும் அடிப்படைகளில் விரதங்களை வகைப்படுத்தலாம். ஆண்டு தோறும் மேற்கொள்ளப்படும் விரதங்கள் மகா சிவராத்திரி, நவராத்திரி, சாரத நவராத்திரி, ஆவணிச் சதுர்த்தி, திருக்கார்த்திகை விரதம் என்பன குறிப்பிடத்தக்கவை.

பல்வேறு மாவட்டங்கள், பிரதேசங்கள் என்னும் நிலப்பிரிவுகளில் வாழும் சைவ நெறியினர் தங்கள் பகுதியிலுள்ள ஆலயங்களில் திருவிழாக்கள், கும்பாபிடேகம், சங்காபிடேகம், சிறப்புப் பூசைகள் என்பன நடைபெறும் பொழுது விரதம் நோற்பர்.

வாழ்க்கைக் கடமை என்ற அடிப்படையில் நோற்கப்படும் விரதங்களில் தந்தையை இழந்தவர்களுக்கு ஆடிஅமாவாசை, மஹா அமாவாசை என்பவற்றையும் தாயை இழந்தவர்களுக்கு உரிய சித்திரைப்பூரணை, மாதப் பூரணைகள் என்பவற்றையும் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

## 1. ஆடிஅமாவாசை விரதம்

அமாவாசை என்பது அமா+வாசி என இருபிரிவாக நோக்கப்படுகிறது. "அமா" என்பது ஓரிடத்தில் பொருந்தியது என்றும், "வாசி" என்பது சேர்ந்திருப்பது அல்லது உறவாடுவது என்னும் பொருள்படும். அதாவது சூரியனும் சந்திரனும் ஓர் இராசியில் சேர்ந்திருக்கும் நாளே அமாவாசை என்பர்.

வானியலும், சோதிடமும், விஞ்ஞானமும் இணைந்த விளக்கங்களைக் கொண்டது ஆடிஅமாவாசை. சூரியனும் சந்திரனும் ஒரே பாகையில் பூமிக்கு நேராக வரும் போது அமாவாசைத் தினம் உண்டாகிறது. சந்திரன் சூரியனிலிருந்து பிரிந்து பூமியைச் சுற்றி வருகின்ற மார்க்கத்தில் ஆடிமாதத்தில் புவிக்கும் சூரியனுக்கும் 180 பாகையில் வரும் போது ஏற்படும் அமாவாசை திதி ஆடிஅமாவாசைத் தினம் எனப்படுகிறது.

சூரியனும் சந்திரனும் ஒரே இராசியில் வரும் புனிதமான அமாவாசை நாள் தந்தையை இழந்தவர்களால் நோற்கப்படவேண்டிய விரத தினம் ஆகும். உயிர்களுக்கு சுகபோகமாகிய மாறுதலை உணர்த்தும் நாள் என்றும் இந்நாள் குறிப்பிடப்படுகிறது. சகல தேவர்களும் அமாவாசைத் தினத்தில் அதிதிகளாவர். அன்று நோன்பு நோற்றலும் விரதம் காத்தலும் சிறந்ததும் இறைவனுக்கு மகிழ்ச்சியளிப்பதும் பெருமைதருவதுமான நன்நாளாகும்.

இறந்தவர்களின் தூலவுடம்பும், சூக்குமவுடம்பும் பிறவிக்குக் காரணமான வினை எல்லாம் தகனக்கிரியை, அந்தியேட்டிக் கிரியை, இவற்றால் நீங்கி விடும். அபுத்தி பூர்வமாகச் செய்தன, அந்தியேட்டி, தகனக் கிரியைகளால் மாறும். புத்திபூர்வமாகச் செய்தன, அனுபவித்தேயாக வேண்டும். உயிர் சபிண்டீகரணம் என்னும் கிரியையினாலே சிவலோகத்தை அடையும். அங்கு பிதாவினுடைய உயிர் ஸ்கந்த சொரூபமாக இருக்கும். பாட்டனுடைய உயிர் சபிண்டீகரண மண்டபத்திலே ஸ்கந்த சொரூபியாக இருக்கும். முப்பாட்டனுடைய உயிர் கணாதிப பதத்திலே காணாத சொரூபியாக இருக்கும். இவர்களுக்கு தலைவர்களாக ஸ்கந்த, சண்ட, கணாதீசர் என்னும் மூவர் அதி தெய்வங்களாக விளங்குவர். இவர்கள் தான் பிதிர்த்தேவதைகள் என்று அழைக்கப்படுகின்றனர். அத் தேவதைகளை ஆராதனை செய்து வழிபடுவது சிரார்த்தம் எனப்படும். நிர்வாண தீட்சை பெற்றவர்களின் பிதிர்த்தேவதைகள் ஈசர், சதாசிவர், சாந்தர் எனப்படுவர்.

இறக்கின்ற கால நேரங்களைப் பொறுத்ததாக உயிர்களை நற்பதவியடையச் செய்வதற்குச் சிரார்த்தம் இன்றியமையாததாகும். ஒவ்வொரு அமாவாசையும் தந்தை வழி பிதிர்க்கருமத்திற்கு விசேடமானது. எனினும் ஆடிஅமாவாசை மிகவும் புனிதமானதும் விசேடமானதுமாகும்.

அமாவாசை நாட்களில் கடலிலே தீர்த்தமாடுவது மிகவும் நல்லது. கடல் நீரை, பாவத்தைக் கழுவும் பரிசுத்த நீராகவும், இறைவனின் அருள் நீராகவும் நினைத்து காலம் சென்ற பிதிர்களை எண்ணி அவர்களின் பாவத்தைப் போக்கி அவர்களுக்கு முத்தியளிக்கும் வண்ணம் இறைவனை வேண்டி நீராடல் வேண்டும். புனிதத் தலங்களில் இவ்வாறு நீராடி விரதம் இருக்கும் மரபு பல ஆலயங்களில் விளங்குகிறது. நமது நாட்டில் யாழ்ப்பாணச் சைவ மக்கள் கீரிமலைத் தீர்த்தத்திலும், மட்டக்களப்பு பகுதி சைவ மக்கள் மாமாங்கத் தீர்த்தத்திலும் கொழும்பு சைவமக்கள் முகத்துவாரத்திலும் நீராடி தமது பிதிர்க் கடன்களை நிறைவேற்றுவர்.

## 2. சித்திரா பௌர்ணமி விரதம்

பூரணை விரதம் ஒரு பிதிர் விரதமாகும். சோதிடர்கள் சந்திரனை மாதுருகாரன் என்பர். பூரணை விரதம் சந்திரனைச் சார்ந்தது. தாயாரை இழந்தோரால் பூரணை அனுட்டிக்கப்படுகிறது.

சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரத்தோடு சந்திரன் நிற்கும் காலமாகும். அச்சமயம் பூமி மேட இராசியில் நிற்கிறது. சந்திரன் சித்திரையோடு கூடி சித்திரைக்குரிய துலா ராசியில் நிற்கிறது. மேடத்திலிருந்து துலாம் ஏழாம் இடமாதலால் பூமிக்கு ஏழாம் பாகையில் நின்ற சந்திரன் முழுவலிமை பெறுகிறது.



முழுவலிமையையும் சித்திரையில் கிரகணத்தோடு கூட்டிப் பூமிக்கு சித்திரா பௌர்ணமி அன்று தருகிறது. இந்த நாள் விசேடமாக இருத்தலால் சித்திரா பௌர்ணமி முக்கியமானது. இதே நாளில் சித்திரபுத்திரனார் விரதமும் வருகிறது. இத் தினத்தில் விரதமிருத்தல் மிகவும் சிறப்பானது எனத் **திருவிளையாடற் புராணம்** கூறுகிறது.

இந் நாளில் இந்திரன் சிவனை வணங்கித்தன் தீவினைகள் நீங்கப்பெற்றான் என்றும் இந்நாளை, தான் தொடர்ந்து பூசிக்க அருளுமாறும் சிவனை வேண்டிக் கொண்டான் என்றும் **திருவிளையாடற்புராணம்** கூறுகிறது. அப்போது சிவன் "ருதுக்களில் சிறந்த வசந்த ருதுவும், மாதங்களில் சிறந்த சித்திரை மாதமும், நட்சத்திரங்களில் சிறந்த சித்திரை நட்சத்திரமும், திதிகளில் சிறந்த பௌர்ணமித் திதியும் கூடும் இச் சித்திரையில் நம்மைப் பூசித்தால் முந்நூற்று அறுபத்தைந்து

நாட்களும் பூசை செய்த பயன் கிட்டும், நீ சுவர்க்கம் செல்வாய், மலபரிபாகம் உண்டாகும்'' என்று அருளினார் என்பது வரலாறு. அதன்படியே இந்திரன் அந்நாளைப் பூசித்து வரலானார்.

சித்திரா பௌர்ணமி விரதம் நம்மைப் பாவகாரியங்களிலிருந்து விலக்கி புண்ணிய சீவர்களாக்குவதற்கான பக்குவத்தை அளிக்கின்றது. எனவே சித்திரா பௌர்ணமித் தினத்தையும் அதன் தாற்பரியங்களையும் பெருமைகளையும் தெரிந்து கொண்டு இப் புண்ணிய தினத்தில் உபவாசமிருந்து விரதம் அனுட்டிப்பதனால் இறந்த தாயாரின் ஆன்மா நற்கதியை அடைகிறது. அத்துடன் இக்காலத்தில் சிவனைத் தியானித்து வழிபடுபவர்கள் தாமும் நற்பேறு எய்துவர் எனக் கூறப்படுகிறது.

இலங்கையிலும் பல ஆலயங்களிலும் இவ்விரதம் சிறப்பாகவே அனுட்டிக்கப்படுகிறது. இந் நன்நாளில் சித்திரைக்கஞ்சி வார்ப்பும் கோயில்களில் செய்யப்படுவது வழக்கம்.

**நாளென ஒன்றுபோற் காட்டி உயிரீரும்**
**வாளாது உணர்வார்ப் பெறின்**

-திருக்குறள்-

ஒவ்வொரு நாளும் நம் வாழ்வைக் கூரிய வாளென வந்து அழித்துக்கொண்டே போகிறது. இவ்வழிவுகள், பாவங்கள் போன்றவற்றிலிருந்து நம்மைச் சித்திரா பௌர்ணமி விரதம் காத்தருளும் என்பதாலும் இவ்விரதம் முக்கியமானதாகக் கொள்ளப்படுகிறது.



## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. சைவ சமயத்தவர் கடைப்பிடிக்கும் ஐந்து விரதங்களின் பெயர்களைத் தருக.

2. பிதிர்கள் என்றால் என்ன?

3. பூரணையினதும், அமாவாசையினதும் இயல்புகள் எவை?

4. ஆடிஅமாவாசை விரதம் யாரைக் குறித்து நோற்கப்படுகிறது?

5. சித்திரா பௌர்ணமியில் யாரைக்குறித்து விரதம் அனுட்டிக்கப்படும்?

## செயற்பாடு

01) சித்திரா பௌர்ணமி விரதம், ஆடி அமாவாசை விரதம் ஆகிய இரண்டு விரதங்களும் அனுட்டிக்கப்படும் ஒழுங்குமுறைமையை அட்டவணைப்படுத்திக் காட்டுக.

## பாடச்சுருக்கம்

- சைவ வாழ்வில் விரதங்கள் முக்கியமானவை.
- மக்கள் வாழ்வை மேம்படுத்த விரதங்கள் உதவும்.
- விரதங்கள் முறைப்படி அனுட்டிக்கப்பட வேண்டும்.
- இப்பிறப்பிலன்றி மறு பிறப்பிலும் உய்வு பெற விரதங்கள் உதவுகின்றன.
- மனம் பொறிவழிப்போகாது விரதம் அனுட்டிப்பது அவசியம்.
- ஆடிஅமாவாசை தந்தைக்காகவும், சித்திரா பௌர்ணமி தாய்க்காகவும் நோற்கும் விரதங்களாகும்.
- இறக்கும் உயிர்களின் முத்தியை நோக்கி பிதிர் விரதங்கள் நோற்கப்படுகின்றன.

# 6 எமது பண்டிகைகள்

பண்டிகைகள் சைவமக்களின் வாழ்வில் குதூகலத்தையும் மன நிறைவையும் இறை பக்தியையும் வளர்ப்பனவாக அமைந்துள்ளன. எனவேதான் பண்டிகைகள் சமய உணர்வுடன் சமூகம் சார்ந்த விழாக்களாகக் கொண்டாடப்படுகின்றன. உலகிலே பிறவி எடுத்த மனிதன் மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களினால் வினையாற்றுகிறான். அவ்வாறு ஆற்றப்படும் வினைகள் நல்வினை, தீவினை என இருவகைப்படும். திரிகரணசுத்தியோடு ஆற்றப்படும் வினைகள் நல்வினைகளாகும். நல்வினைகள் ஆற்றுவதன் மூலம் சாத்வீகக் குணங்கள் வளர்கின்றன. மனிதர்களிடையே சாத்வீகக் குணங்களை வளர்த்து நற்கருமங்கள் ஆற்றி இறை அருளைப் பெற நெறிப்படுத்துபவை பண்டிகைகளாகும்.

சைவர்கள் வாழ்வில் நடைபெறும் காரியங்கள் எல்லாவற்றிற்கும் இறைவனே துணை நிற்கிறான். அவன் அருளாலேதான் நல்லபடியாக வாழ முடியும் எனும் அடிப்படை உண்மையை உணர்ந்து சைவ மக்கள் பண்டிகைக் காலங்களில் இறைவனுக்கு முக்கியத்துவம் அளிக்கின்றனர். சைவ ஆசார அனுட்டானங்களை விரத காலங்களில் மட்டுமன்றிப் பண்டிகைக் காலங்களிலும் கடைப்பிடிக்கின்றனர்.

இவ்வகையில் தைப்பொங்கல், தீபாவளி, வருடப்பிறப்பு, ஆடிப்பிறப்பு என்பன சைவமக்களால் சிறப்பாகக் கொண்டாடப்படும் பண்டிகைகள் ஆகும்.

## அ. தீபாவளி

**"தீபம்"** என்பது விளக்கு. **"ஆவளி"** என்பது வரிசை. தீபங்களை வரிசையாக ஏற்றி வைத்துக் கொண்டாடுவதால் இப்பண்டிகை தீபாவளி எனப்பட்டது. இது ஐப்பசி மாதத்துக் கிருஷ்ணபட்ச சதுர்த்தசித் திதியில் கொண்டாடப்படுகிறது. இதனை நரக சதுர்த்தசி என்றும் கூறுவர். நரகாசுரன் என்ற கொடும் அசுரனைச் சத்தியபாமாவின் துணையோடு கிருஷ்ண பகவான் கொன்ற தினமே தீபாவளி ஆகும்.

நரகாசுரன் என்ற அசுரன் இறக்கும் போது அஞ்ஞான இருள் நீங்கி ஞானஒளி பெற்றமையால், தான் இறந்த இத்தினத்தைப் பூமியிலுள்ளோர் அனைவரும் மகிழ்ச்சியுடன் கொண்டாட வேண்டுமெனக் கிருஷ்ண பகவானிடம் வரம் கேட்டான். அவ்வாறே நரகாசுரன் கேட்ட வரத்தினை அளித்து கிருஷ்ணர்



அவனை ஆட்கொண்டதால் இப்பண்டிகை **நரக சதுர்த்தசி** எனப்பட்டது.

மேலும், மகாபலிச் சக்கரவர்த்தியிடம் மகாவிஷ்ணு வாமனாவதாரமாக வந்து தானம் பெற்று அவரை அழித்த தினமாகவும் தீபாவளி கொள்ளப்படுகிறது. விஷ்ணுவிடம், மகாபலிச் சக்கரவர்த்தி விடுத்த வேண்டுகோளின்படி ஆண்டிற்கு ஒருமுறை மகாபலிச் சக்கரவர்த்தி பூலோகம் வரும் நாளில் மக்கள் புத்தாடை உடுத்தி விளக்கேற்றி அவரை வரவேற்கும் தினமாகத் தீபாவளி விளங்குகிறது.

தீபாவளி நாளில் எண்ணெய் தேய்த்து உதயத்திற்கு முன்னர் வெந்நீரில் ஸ்நானம் செய்யவேண்டும். காரணம் அன்றைய தினத்தில் வெந்நீரில் கங்கையும், எண்ணெயில் இலக்குமியும் இருப்பதாக ஐதீகம் உள்ளது. இவ்வாறாக, நித்திய கர்மானுஷ்டானங்களை நிறைவேற்றிப் புத்தாடைகள் புனைந்து ஆலயங்களுக்குச் சென்று விசேட பூசை வழிபாடுகளில் கலந்து மகிழ்வுடன் கொண்டாடும் தினம் தீபாவளியாகும். இதனால் மக்கள் மத்தியில் தீபாவளித் தினத்தில் கடவுள் வழிபாடு செய்வது வலியுறுத்தப்படுகிறது.

இத்தினத்தில் இல்லங்களில் விசேட தீபாவளிப் பட்சணங்களும் அறுசுவை உணவும் தயாரித்து உறவினர் நண்பர்களுக்கு விருந்தளித்து மகிழ்ச்சியாக இருப்பது இந்துக்களின் மரபாக உள்ளது. சிலர் வேண்டியவர்களுக்கு தீபாவளி அன்பளிப்புக்களையும் வழங்கி மகிழ்வர். இதனால் மக்களிடையே ஒற்றுமை உணர்வும் கொடுத்துண்ணும் பண்பும் பரந்து வளர்கின்றன.

தீபாவளித் தினத்தில் காலையில் இல்லங்களுக்கு வெளியே தீபங்களை ஏற்றி வைத்தால் யமன் திருப்தியடைவான் என்று பவிஷ்யோத்தர புராணமும், உதயத்தில் தீபமேற்றினால் அவ்வொளிபடும் இடங்களில் இலக்குமி வாசம் செய்வாள் என்று விஷ்ணு புராணமும் கூறுகின்றன.

தீபங்களின் ஒளி சிற்சக்தியாகக் கொள்ளப்பட்டு, ஒளியானது இருளை நீக்குவது போல, சிற்சக்தி ஆன்மாவின் அக இருளை நீக்கி மலத்தைப் போக்கி ஞானத்தினை நல்குகிறது என்ற தத்துவத்தினையும் தீபாவளிப் பண்டிகை குறித்து நிற்கிறது.

## மேல் வரும் வினாக்களுக்கு விடை தருக.

01. திரிகரணங்களும் எவை?
02. நாம் கொண்டாடும் பண்டிகைகள் மூன்று தருக?
03. தீபாவளிப் பண்டிகை எப்போது கொண்டாடப்படுகிறது?
04. தீபாவளிப் பண்டிகையினால் உணர்த்தப்படும் தத்துவம் யாது?
05. நரகாசுரன் வதம் பற்றிச் சுருக்கமாக விளக்குக.

## செயற்பாடு

01) தீபாவளித் திருநாளைக் கொண்டாடும் முறை பற்றி அட்டவணை ஒன்றைத் தயாரியுங்கள்.

## பாடச்சுருக்கம்.

- பண்டிகைகள் சமயம், சமூகம் சார்ந்த விழாக்களாகும்.
- பண்டிகைகள் மக்களுக்குக் குதூகலத்தையும் இறை பக்தியையும் கொடுக்கின்றன.
- பண்டிகைகளை அக, புறத் தூய்மையுடன் கொண்டாடுதல் வேண்டும்.
- நரகாசுரன் வதத்துடன் தீபாவளிப் பண்டிகை தொடர்புபடுகிறது.
- தீபாவளி அஞ்ஞான இருளை நீக்கி மெய்ஞ்ஞான ஒளியை ஏற்படுத்துகிறது என்பது தத்துவம் ஆகும்.

# ஆ. ஆடிப்பிறப்பு

ஆடிமாதத்தின் முதல் நாளில் கொண்டாடப்படுவது ஆடிப்பிறப்பு ஆகும். மனிதர்களின் ஒரு வருடம் தேவர்களுக்கு ஒரு நாள் என்ற கணக்கின்படி தை முதல் ஆனி வரையிலான ஆறு மாதம் தேவர்களின் பகற்பொழுது. இது **உத்தராயணம்** எனப்படும். இக்காலத்தில் சூரியன் வடதிசை நோக்கிச் சரிந்து சஞ்சரிக்கும். ஆடி முதல் மார்கழி வரையிலான ஆறு மாதமும் தேவர்களின் இரவுப்பொழுது. இது **தெட்சிணாயனம்** எனப்படும். இக்காலத்தில் சூரியன் தென்திசை நோக்கிச் சாய்ந்து சஞ்சரிப்பான். பொதுவாக இக்காலம் நற்காரியங்களுக்கு உகந்ததல்ல என விலக்கப்படும்.

உத்தராயணம், தெட்சிணாயனம் எனக் கொள்ளப்படும் சூரிய சுழற்சிக் காலத்தினுள், இப்பண்டிகை தெட்சிணாயணத்தின் முதல்நாளாக அமைகிறது. உத்தரா்யண காலத்தின் முதல் நாளைச் சைவர்கள் தைப்பொங்கல் விழாவாகக் கொண்டாடுவர். அதே போன்று தெட்சிணாயனத்தின் முதல் நாளை ஆடிப்பிறப்பாகக் கொண்டாடுவது வழக்கம். ஆடிமாதம் மழை பொழிந்து வெப்பத்தைத் தணிப்பதோடு ஆறுகளில் நீர் பெருக்கெடுத்தும் ஓடும். இதனை ஆடிப்பெருக்கு என்று அழைப்பர். ஆடிமாதத்தின் பதினெட்டாவது நாள் ஆடிப்பெருக்கு விழா சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.



ஆடிப்பிறப்புத் திருநாளில் இல்லங்கள் தோறும் இனிப்புக் கூழ் காய்ச்சி, கொழுக்கட்டை அவித்து இறைவனுக்குப் படைத்து வழிபாடுகள் செய்தபின் உறவினர்களோடும் அயலவர்களோடும் கூடிக் குதூகலமாகக் கூழைக்குடித்துக் கொழுக்கட்டையை உண்டு மகிழ்வர். இதற்குக் காரணம் தை முதல் ஆனி வரை வெப்பகாலம். ஆடி முதல் மார்கழி வரை குளிர்காலம்.

வெப்ப காலத்தில் எமது தேகத்தில் சேர்ந்திருந்த கெட்டநீர், கபம், பித்தம் போன்றவை மாரியில் நோய் நொடிக்கு ஏதுவாக இருப்பவை. இதனை நீக்கவே ஆடிக்கூழ் அருந்தப்பட்டது.

பண்டிகைக் காலங்களில் கூடியிருந்து உண்டு மகிழ்வதன் மூலம் வேற்றுமை நீங்கி ஒற்றுமை மனநிலை வளர உதவும். அந்த வகையில் ஒரு கொண்டாட்டமாக நிகழ்த்தப்படும் ஆடிப்பிறப்புப் பண்டிகை பற்றி நவாலியூர்ச் சோமசுந்தரப் புலவரின் மேல்வரும் பாடல் மூலம் அறியலாம்.

ஆடிப்பிறப்புக்கு நாளை விடுதலை
ஆனந்தம் ஆனந்தம் தோழர்களே!
கூடிப் பனங்கட்டிக் கூழுங் குடிக்கலாம்
கொழுக்கட்டை தின்னலாம் தோழர்களே!

இப்பாடலில், ஆடிப்பிறப்பை முன்னிட்டுப் பாடசாலைகள் விடுதலை என்றும், அன்று கூழும் கொழுக்கட்டையும் உண்பதற்குத் தமது இல்லத்திற்கு வருமாறும் தோழர்களைச் சிறுவன் அழைக்கின்றான். எனவே, இத்திருநாள் சமூக ஒற்றுமையை வளர்க்கும் விழாவாக அமைந்துள்ளமையைக் காணமுடிகிறது. இவ்வாறாகச் சைவர்கள் கொண்டாடும் விழாக்கள் அனைத்தும் புராணக் கதையை அடிப்படையாகக் கொண்டோ அல்லது சமூக விழுமியங்களை அடிப்படையாகக் கொண்டோ அமைந்துள்ளன.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. ஆடிப்பிறப்பு எப்போது கொண்டாடப்படுகிறது?
2. ஆடிப்பிறப்பின் போது செய்யப்படும் உணவு வகைகள் யாவை?
3. ஆடிப்பிறப்பின் சிறப்புப் பற்றிப் பாடிய நம்நாட்டுப் புலவர் யார்?
4. ஆடிப்பிறப்பு வலியுறுத்தும் செயற்பாட்டுப் பண்பு யாது?

## செயற்பாடு

01 ஆடிப்பிறப்புப் பற்றிய பாடல்களைச் சேகரித்து அவற்றை வகுப்பறையிற் காட்சிப்படுத்துங்கள்.

## பாடச்சுருக்கம்.

- சூரியன் வடக்கிலிருந்து தெற்கு நோக்கி நகரும் தெட்சிணாயன காலமே ஆடிப்பிறப்பாகும்.
- ஆடிப்பிறப்பு வெளிப்படுத்தும் அடிப்படைக் கருத்தாக சமூக ஒற்றுமை அமைந்துள்ளது.
- ஆடிப்பிறப்பில் இனிப்புக் கூழும், கொழுக்கட்டையும் செய்து இறைவனுக்குப் படைப்பர்.
- இவ்விழாவை உறவினர், நண்பர்கள், அயலவர்களோடு சேர்ந்து மகிழ்வுடன் கொண்டாடுவர்.

# 7 சாக்கிய நாயனார்

சித்தத்தைச் சிவன் பால் கொண்ட சைவ நாயன்மார்கள் வாழ்ந்து காட்டிய வழியில் நமது சைவ நெறி வளர்ச்சி கண்டுள்ளது. அறுபத்து மூன்று நாயன்மார்களினது திவ்விய வரலாறுகளைச் சேக்கிழாரது பெரிய புராணத்தின் மூலம் நாம் அறிகிறோம். பெரியபுராணம் குறிப்பிடும் நாயன்மார்களுள் சாக்கிய நாயனாரும் ஒருவர்.

தென்னிந்தியாவில் காஞ்சிபுரத்தை அடுத்துள்ள **திருச்சங்க மங்கை** என்ற நகரத்தில் பிறந்த ஒருவர், உயிர்களிடத்தே பேரன்பு மிக்கவராக விளங்கினார். அவர் உயிர்களுக்கு ஏற்படுகின்ற பிறப்பு, இறப்புத் துன்பங்களைக் கண்டு மிகவும் கவலை அடைந்தார். அதற்கான காரணங்களைக் கண்டறிய ஆர்வம் கொண்டார்.

காஞ்சிபுரத்திலுள்ள பௌத்த மடத்திற்குச் சென்றார். அங்குள்ள பல பௌத்தத் துறவிகளோடு சேர்ந்து பல பௌத்த நூல்களைக் கற்றார். அந் நூல்கள் மூலம் தெளிவு பெறாத அவர் மேலும் பல சமய நூல்களைக் கற்றார். ஈற்றில் இறையருள் மூலமாகப் பிறவிப் பெருங்கடலைக் கடக்க **சிவநெறியே சாலச்சிறந்தது** என்ற நல்லறிவு வாய்க்கப்பெற்றுச் சைவ சமய நூல்களைக் கற்றார். அந் நூல்கள் மூலம், அறிவிக்க அறியும் தன்மை கொண்டவை ஆன்மாக்கள், அவ்வான்மாக்கள் மூலம் ஆற்றப்படுகின்ற புண்ணிய பாவச் செயல்கள், அக்கர்மங்களினால் விளையும் சுகதுக்க பலன்கள், அச் செயல்களை நல்குகின்ற வல்லவனாகிய பதி என்ற நான்குமே மெய்ப்பொருட்கள் என்பதை அறிந்து கொண்டார். அதனால் எந்நிலையில் நின்றாலும் எந்த வேடத்தை எடுத்தாலும் பரமசிவனது திருவடிகளை மறவாதவராக விளங்கினார்.

அவர் சாக்கியர்களது கோலத்தில் இருந்தமையால் தம்மைப் பிறர் அறியாத வண்ணம் சிவநாமத்தை நாள்தோறும் உள்ளத்திலேயே எண்ணி ஒழுகினார். திருமாலும், பிரம்மாவும் காணப்பெறாத பெருஞ்சோதிப்பிழம்பு ஒடுங்கி நின்ற அருவுருவத் திருமேனியாகிய 'சிவலிங்கத்தைப் பிறர் அறியா வண்ணம் பூசித்து வழிபட்டார். அவர் சாக்கிய (பௌத்த) வேடத்துடன் இருந்து சிவனருள் பெற்றமையால் **சாக்கிய நாயனார்** என அழைக்கப்பட்டார்.

சாக்கிய நாயனார் காஞ்சிபுரத்திற்கு அண்மையிலுள்ள பரந்தவெட்ட வெளியினூடாகச் சென்று கொண்டு இருக்கும் போது, அங்கே சிவலிங்கம் ஒன்று எவ்வித பூசை வழிபாடுகளுமின்றிக் காணப்பட்டதைக் கண்டு மனம் வருந்தினார். சாக்கியநாயனார் சிவலிங்கப் பெருமானைத் தூய நீரால் நீராட்டி நறுமலர்கள் தூவி வழிபட்டு மகிழத் திருவுள்ளம் கொண்டார். ஆனால் அந்தப்



பரந்த வெளியில் சாக்கிய நாயனாருக்கு நீரும், மலரும் கிடைக்கப்பெறவில்லை. இறைவனிடத்தில் அவர் கொண்ட பக்தி மட்டும் தான் மிகுந்திருந்தது. அதனால் அருகிலிருந்த கல்லையெறிந்து ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதியபடியே சிவலிங்கப் பெருமானை வழிபட்டார். இறைவன் அரிய மலர்களாக அக்கற்களை ஏற்றுக்கொண்டார். குழந்தையானது தம் பெற்றோருக்குச் சிறு குறும்பாகச் செய்யும் விளையாட்டாக எண்ணிச் சாக்கிய நாயனாரின் இப்பூசையை சிவன் ஏற்று அங்கீகரித்தார்.

மறுநாளும் சிவலிங்க வழிபாட்டுக்காக அவ்விடத்தை அடைந்த சாக்கிய நாயனார் சிவலிங்கத்தைக் கண்டு உவகையடைந்து "சாக்கியர் வேடத்தில் இருக்கும் நான், மலரால் சிவனை வழிபடுதலைப் பிறர் கண்டால் ஏசுவர். அதே வேளை கல்லால் எறிவதை யாரும் பார்ப்பார்களாயின் வெறுப்பின் மிகுதியால் தான் இவற்றை செய்கிறார் என்று எண்ணுவர்" இதுவும் இறைவனின் திருவருட் செயலே என எண்ணிப் பெருமிதம் கொண்டார். அதனால் நாள்தோறும் சிவலிங்க வழிபாட்டினை மேற்கொண்ட பின்னரே திருவமுது உண்பதை வழக்கமாக்கிக் கொண்டார்.

ஒருநாள் சாக்கிய நாயனார் இறைவன் மீதுகொண்ட பக்தியின் நிமித்தம் சிவலிங்க வழிபாட்டினைச் சற்று மறந்த நிலையில் அவர் திருவமுது உண்ண அமர்ந்து விட்டார். திடீரென இறைவனது நினைவு வாய்க்கப்பெற்ற அவர் " எம்பெருமானே! இது என்ன சோதனை! எவ்வளவு தவறான செயலைப்புரிந்து விட்டேன்! அண்ணலே, ஏழையின் பிழை பொறுத்தருள்வீர்! என்று புலம்பி வெட்டவெளியிலிருக்கும் சிவலிங்கப் பெருமானைத் தரிசிப்பதற்காக ஓடோடிச் சென்றார். சிறு கல் ஒன்றினை எடுத்து ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி இறைவன் மீது எறிந்தார். அப்போது சாக்கிய நாயனாரின் அன்புக்குக் கட்டுப்பட்ட சிவன் விண்ணிலே உமாதேவியார் சமேதராக இடபவாகனத்தில் காட்சியளித்து அருள் பாலித்து அவரைத் தமது திருவடியில் சேர்த்தார்.

சாக்கிய நாயனார் மார்கழிப் பூராடத்தில் இறையடி சேர்ந்தமையால் அவரது குரு பூசைத்தினம் மார்கழி மாதத்தில் வரும் **பூராட** நட்சத்திரத்தில் அனுட்டிக்கப்படுகிறது. சாக்கிய நாயனாரது பக்தி மேம்பாட்டினைக் கண்டு வியந்த சுந்தரமூர்த்தி நாயனார் தனது **திருத்தொண்டத் தொகையில்**

**வார் கண்ட வனமுலையாள் உமைபங்கன் கழலே**
**மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கும் அடியேன்............**

என்றவாறு போற்றுகிறார்.

அறுசமயத் தலைவராய் நின்றவருக் கன்பராய்
மறுசமயச் சாக்கியர்தம் வடிவினால் வருந்தொண்டர்
உறுதிவரச் சிவலிங்கம் கண்டு உவந்து கல்லெறிந்து
மறுவில் சரண் பெற்ற திறம் அறிந்தபடி வழுத்துவாம்

என்ற பெரிய புராணப் பாடல் மூலம் சாக்கிய நாயனாரின் சிறப்பினைச் சேக்கிழாரும் சிறப்பித்திருப்பதை அவதானிக்க முடிகிறது.

## மேல் வரும் வினாக்களுக்கு விடை தருக

1. சாக்கிய நாயனார் எங்கு பிறந்தார்?
2. சாக்கிய நாயனார் எதனைக் கண்டு மிகவும் வருந்தினார்?
3. சைவ சமயம் உணர்த்தும் உண்மைப் பொருட்கள் நான்கும் எவை?
4. சாக்கிய நாயனார் தமது சாக்கிய(பௌத்த) சமய கோலத்தினை நீக்காமல் இறைவனை வழிபட்டதற்குக் காரணம் யாது?
5. சாக்கிய நாயனாரது பக்திவெளிப்பாட்டினைப் போற்றும் இரு நூல்களையும் அவற்றின் ஆசிரியர்களையும் தருக.

## செயற்பாடு

01. நீங்கள் கற்ற நாயனார் ஒருவருடன் சாக்கிய நாயனாரை ஒப்பிட்டு அவர்கள் இருவருக்கிடையிலும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகளைப் பட்டியல் படுத்துக.
02. சாக்கிய நாயனாரது குருபூசைத்தினத்தைக் கொண்டாடும் முகமாக உங்களால் மேற்கொள்ளக்கூடிய முன்ஆயத்தங்களை ஒழுங்குபடுத்துக.

## பாடச்சுருக்கம்

- பெரியபுராணம் குறிப்பிடும் நாயன்மார்களுள் ஒருவராகிய சாக்கிய நாயனார் திருச்சங்கமங்கையில் அவதரித்தார்.
- மெய்ப்பொருள் ஆய்வில் ஈடுபட்ட இவர் பல சமயச் செயற்பாடுகளை அறிந்து அவற்றின் வாயிலாகச் சைவசமயமே உண்மைச்சமயமென ஏற்றுக் கொண்டார்.
- தான் சார்ந்த சமயமும், பூண்ட கோலமும் சிவவழிபாட்டுக்குத் தடையல்ல என்பதனை நிலைநாட்டினார்.
- இலிங்க வழிபாட்டின் பின்னரே உணவுண்பது என்பதனை வாழ்வின் இறுதிவரை கடைப்பிடித்தார்.
- அன்புடன் இறைவனுக்குச் செய்யும் எச் செயலையும் இறைவன் அங்கீகரித்து அவர்களை முத்திப்பேறடையச் செய்வான் என்பதனைச் சாக்கிய நாயனாரின் வரலாற்றின் மூலம் உணரலாம்.

# 8 நாலாயிரத் திவ்விய பிரபந்தம்

சைவ சமயத்தவர்களுக்குப் பன்னிரு திருமுறைகள் எவ்வாறு முக்கியமாக விளங்குகின்றதோ அவ்வாறே வைணவர்களுக்கு நாலாயிரத் திவ்விய பிரபந்தம் முக்கியம் வாய்ந்த நூலாகும்.

நாலாயிரத் திவ்விய பிரபந்தம்; ஸ்ரீ திவ்வியபிரபந்தம், எனும் பெயரால் வழங்கப்படுகிறது. வைணவ ஆழ்வார்கள் பன்னிருவர் பாடிய பாசுரங்களைக் கொண்டு ஸ்ரீ நாத முனிவரால் தொகுக்கப்பட்டதே நாலாயிரத் திவ்விய பிரபந்தம் ஆகும்.

வைணவ ஆழ்வார்கள் பன்னிருவருள் தொண்டரடிப் பொடியாழ்வாரும் ஒருவர். விப்ரநாயனார் என அழைக்கப்பட்ட இவர், விஷ்ணுபெருமானின் சிறப்பைப் போற்றித் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்னும் பாசுரங்களைப் பாடியுள்ளார். இவர் பாடிய திருமாலையில் உள்ள "குடதிசை முடியை வைத்து" என்ற பாசுரத்தைக் கற்போம்.

குடதிசை முடியை வைத்து
குணதிசை பாதம் நீட்டி
வடதிசை பின்பு காட்டித்
தென்திசை யிலங்கை நோக்கி
கடல்நிறக் கடவு ளெந்தை
அரவணைத் துயிலு மாகண்டு
உடலெனக் குருகு மாலோ!
என்செய்கேன் உலகத்தீரே!

## பதவுரை:-

குடதிசை- மேற்குத் திசை: முடி- தலை, கிரீடம்: குணதிசை- கிழக்குத் திசை; பின்பு- பின்புறம்; நோக்கி- பார்த்து; கடல் நிறம்- நீல நிறம்; எந்தை- எனது தந்தை; அரவணை- (அரவு+அணை) பாம்பணை; துயிலுதல்-நித்திரை செய்தல், பள்ளி கொள்ளுதல்; உருகுதல்- நெகிழ்தல்

### பொழிப்புரை:

எனது தந்தை போன்றவரான விஷ்ணு பகவான் நீல நிறத்தை உடையவர். அவர் மேற்குத் திசையில் முடியையும் கிழக்குத் திசையில் பாதங்களையும் வைத்துக்கொண்டு, வட திசைப்பக்கம் பின்புறம் காட்டித் தென்திசையிலுள்ள இலங்கையைப் பார்த்துக்கொண்டும் பாம்பணையிலே பள்ளி கொள்கிறார். அந்தக் காட்சியைப் பார்க்கும் போது எனது உடல் புளகாங்கிதத்தால் நெகிழ்கிறது. இத்தகைய சிறப்பினைக் காண்பதற்கு என்ன புண்ணியம் செய்தேனோ? உலக மக்களே கூறுங்கள்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடையளிக்க.

1. வைணவ சமயத்தாரின் முதன்மையான தமிழ்த் தோத்திர நூல் எது?
2. ஸ்ரீ திவ்வியபிரபந்தம் என அழைக்கப்படும் நூல் எது?
3. தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய நூல்கள் எவை?

## செயற்பாடு

01. "குடதிசை முடியை வைத்து" என்ற திருமாலையை மனனம் செய்து இசையுடன் பாடுக.
02. தரப்பட்ட திருமாலைப் பாசுரத்தையும், அதன் பொழிப்புரையையும் எழுதி வகுப்பில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

- வைணவ சமயத்தவர்களின் முதன்மை நூல் நாலாயிரத் திவ்விய பிரபந்தம் ஆகும்.
- நாலாயிரத் திவ்விய பிரபந்தம் பன்னிரு ஆழ்வார்களும் பாடிய பாசுரங்களைக் கொண்டு தொகுக்கப்பட்டதாகும். அதனைத் தொகுத்தவர் ஸ்ரீ நாத முனிவர் ஆவார்.
- தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை, திருப்பள்ளியெழுச்சி என்பவற்றைப் பாடியுள்ளார். **குடதிசை முடியை வைத்து** என்ற பாசுரம் திருமாலையிலுள்ள பாசுரமாகும்.

# 9 தோத்திரப்பாடல்கள்

பன்னிரு திருமுறைகளுக்குப் பின்னர் இறை அடியார்கள் இறைவன் மீது பிரபந்தங்களாகவும் தனிப்பாடல்களாகவும் பல தோத்திரப் பாடல்களைப் பாடியுள்ளனர்.

தோத்திரம் என்பது திருமுறைகளுள் அடங்காது இறைவனைப் போற்றிப் பாடும் ஏனைய பாடல்கள் ஆகும். தோத்திரப் பாடல்களைப் பிற்காலத் தோத்திரப்பாடல்கள், திருமுறைகளுக்குப் பின்னர் எழுந்த தோத்திரப்பாடல்கள் போன்ற பெயர்களாலும் அழைப்பர்.

தோத்திரப்பாடல்கள் எனும் பிரிவில் கந்தபுராணம், திருப்புகழ், கந்தர் அனுபூதி, சகலகலாவல்லிமாலை, அபிராமி அந்தாதி, பராபரக்கண்ணி முதலானவை அடங்குகின்றன.

## (அ) கந்தபுராணம்

கந்தபுராணம் வடமொழியிலுள்ள சிவசங்கர சங்கிதையைத் தழுவி பதின் நான்காயிரத்திற்கு மேற்பட்ட பாடல்களால் தமிழில் பாடப்பட்டதாகும். இதனை **கச்சியப்ப சிவாச்சாரியார்** தமிழ் இலக்கிய மரபுகளைப் பேணிப் பாடியுள்ளார்.

முருகனின் பிறப்பு, வளர்ப்பு, திருவிளையாடல், சூரபத்மனுடன் நிகழ்த்திய போர், தெய்வயானை திருமணம், வள்ளி திருமணம் பற்றி விரிவாகப் பாடிய புராணம் கந்தபுராணம் ஆகும். இது தொடர்பான மேலதிக விடயங்களைச் சமய இலக்கியம்(கந்த புராணம்) என்ற பகுதியில் கற்போம்.

கந்தபுராணத்தின் உற்பத்திக் காண்டத்தில் உள்ள "அருவமு முருவு மாகி" என்ற பாடலை இங்கு கற்போம்.

**"அருவமு முருவு மாகி அநாதியாய்ப் பலவா யொன்றாய்**
**பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்**
**கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே**
**ஒருதிரு முருகன் வந்தாங் குதித்தனன் உலக முய்ய".**

**பதவுரை:** அருவம்- உருவம் அற்றது, உருவம் இல்லாதது; உருவம்- வடிவம்; சோதி- ஒளி; மேனி- திருமேனி; கருணை-இரக்கம், அருள்; கரம்-கை; உதித்தல்- தோன்றுதல்.

**பொழிப்புரை:** (கண்ணுக்குத் தெரியாத) உருவமற்ற அருவமாகவும் (கண்ணுக்குத் தெரியும்) வடிவமாகவும் அநாதியாகவும் பலவாகவும் ஒன்றாகவும் பிரமமாகவும் நின்ற ஒளிப்பிழம்பு ஒரு திருமேனியாக (உடம்பாக) வடிவெடுத்து அது அருள் பொழியும் ஆறு திருமுகங்களையும் பன்னிரு கைகளையும் உடையதாய் உலகம் உய்யும் பொருட்டு ஒப்பற்ற திருமுருகனாக வந்து தோன்றியது.

## (ஆ) திருப்புகழ்

தோத்திரப் பாடல்களுள் திருப்புகழும் அடங்கும். இந்நூல் சந்தப்பாடல்களால் பாடப்பட்ட 16,000 பாடல்களைக் கொண்டதாகும்.

அருணகிரிநாதரால் பாடப்பட்ட திருப்புகழ் முருகக் கடவுளின் பெருமைகளை விரிவாகப் போற்றுகிறது.

'வாக்கிற் கருணகிரி' என்னும் சிறப்பு திருப்புகழால் அருணகிரிநாதருக்கு ஏற்பட்டது. ஆழ்ந்த பொருள் அமைதி, பொருளுக்கேற்ற சந்தம், தடையில்லா நடை, இசையின்பம், தாளக்கட்டு ஆகிய இத்தனைக்கும் திருப்புகழ் நிலைக்களமாக உள்ளது.

**தத்தனா தானனத் தனதான**

**"பக்தியால் யானுனைப் பலகாலும்**
**பற்றியே மாதிருப் புகழ்பாடி**
**முத்தனா மாறெனப் பெருவாழ்வின்**
**முத்தியே சேர்வதற் கருள்வாயே**
**உத்தமா தானசற் குணநேயா**
**ஒப்பிலா மாமணிக் கிரிவாசா**
**வித்தகா ஞானசத் திநிபாதா**
**வெற்றிவே லாயுதப் பெருமாளே."**

**பதவுரை:** பலகால்- எப்பொழுதும்; முத்தியே- மோட்சம்; பெருவாழ்வு- சிறந்த வாழ்வு; சேர்தல்- அடைதல் சற்குணம்- நற்குணம்; ஒப்பில்லா- நிகரில்லாத; வித்தகன்- ஞானி.

**பொழிப்புரை:** பக்தி பூண்டு நான் உன்னை எப்பொழுதும் உள்ளத்தில் தியானித்து சிறப்பு வாய்ந்த உனது திருப்புகழ்களைப் பாடுகிறேன். ஞானநிலை பெற்றவனாக மாற்றி, என்னை பெருவாழ்வாகிய முத்தி நிலையை அடைய அருள் புரிவாயாக. உத்தமனே! ஈகைக்குணமுள்ள நற்குணத்தவர்களுக்கு நேசனே! நிகரில்லாத சிறந்த மணிக்கிரி வாசனே! வித்தகா! ஞான பக்குவம் அடைந்தவர்களுக்கு அனுக்கிரக சக்தியாய்ப் பதிகின்றவனே! வெற்றி வேலாயுதத்தை ஏந்தும் பெருமாளே! முத்தியை அடைய அருள் புரிவாய்.

## (இ) கந்தர் அநுபூதி

அருணகிரிநாதரால் பாடப்பட்ட மற்றுமொரு பாடற்றொகுதி கந்தர் அநுபூதியாகும். முருகப் பெருமானிடம் இம்மை, மறுமைப் பேறுகளை வேண்டாது வெறுத்து, மெய்யுணர்வும், வீடுபேறும் வேண்டிப் பாடிப் பரவுதலை நோக்காகக் கொண்டு இந்நூலை அருணகிரிநாதர் பாடியுள்ளார்.

இந்த நூலின் இறுதிப்பாடலாக அமையும் **"உருவாய் அருவாய்"** என்னும் பாடல் முருகனின் அருள் வேண்டிப் பாடுவதற்கு உகந்ததாகும்.

**"உருவாய் அருவாய் உளதாய் இலதாய்**
**மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்**
**கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்**
**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே"**

**பதவுரை:** உருவாய்- உருவத் திருமேனி உடையவரும்; அருவாய்- அருவத் திருமேனி உடையவரும்; உளதாய்- உண்டென்று போற்றுபவர்களுக்கு உள்ள பொருளாக உணரப்படுபவரும்; இலதாய்- இல்லை என்று கூறுபவர்களுக்கு இல்பொருளாக இருப்பவரும்; மருவாய் மலராய்- மணமாயும் இணைந்துள்ள மலர் போலவும் (உயிரும் உணர்வுமாய் ஒருங்குற்று நிற்பவரும்); மணியாய் ஒளியாய்- மணி(மாணிக்கம்)யும் அதன் ஒளியும் போலவும் எல்லாவற்றிலும் அகலாது நின்று பிரகாசிப்பவரும்; கருவாய் உயிராய்க்- கருவில் உருவமாகவும் அதன் உயிருமாகவும்; கதியாய்- உயிர் உடலை விட்டுப் பிரிந்த பின் செல்லும் நரகம், பூமி, சுவர்க்கம் முதலான கதிகளாகவும்; விதியாய்- மேற்படி இடங்களுக்கு உயிரைச் செலுத்தும் விதியெனும் காரணராகவுள்ளவரும்; குருவாய் வருவாய்- உயிர்களின் பக்குவம் பார்த்து குருவின் வடிவமாகவும் வருபவரும்; அருவாய்- மல பந்தங்களில் உள்ள உயிர்களுக்கு

வினைப்பயனாகவும் மல பந்தங்களில் நீங்கிய உயிர்களுக்கு முத்திப் பேறாகவும் அருள் புரிபவனே; குகனே- உயிர்களின் உள்ளக் குகையில் இருக்கும் முருகப்பெருமானே!

**பொழிப்புரை:** உருவத் திருமேனியுடன் தோன்றுபவரும் அதனைத் தவிர அருவமாய், சர்வ வியாபியாக உள்ளவரும், உண்டென்று போற்றுபவர்களுக்கு உள்ள பொருளாக உணரப்படுபவரும் இல்லை என்று கூறுபவர்களுக்கு இல் பொருளாக மறைந்து நிற்பவரும் மணியும் அதன் ஒளியும் போலவும் அனைத்திலும் சேர்ந்து நின்று பிரகாசிப்பவரும் கருவும் அதனுடனுள்ள உயிர் போலவும், உயிர் செல்லும் நரகம், பூமி, சுவர்க்கம் முதலான கதிகளாகவும் பிறப்பும் அதற்கு ஏதுவான விதி என்னும் காரணராக உள்ளவரும் பக்குவமடைந்த உயிர்களுக்குக் குருவாக வருபவரும், வினைப் பயனையும் இறுதியிலே முத்திப் பேற்றையும் அருள் புரியும் குகனே, எமக்கும் வேண்டத்தக்கது அருள்வாயாக.

## (ஈ) சகலகலாவல்லி மாலை

சகலகலாவல்லிமாலை, சரஸ்வதி தோத்திரம் எனவும் வழங்கப்படும். இப்பிரபந்தம் குமரகுருபரரால் கலைமகளின் அருளை வேண்டிப் பாடப்பட்டது. மாணவர்களாகிய நீங்களும் சரஸ்வதி தேவியைப் போற்றும் இப்பாடலைப் படித்துப் பயன் பெற வேண்டும்.

சகலகலாவல்லிமாலைப் பிரபந்தத்தின் ஆறாவதாக அமைவது 'பண்ணும் பரதமும்' என்ற பாடலாகும்.

**"பண்ணும் பரதமும் கல்வியுந்**
**தீஞ்சொற் பனுவலும்யான்**
**எண்ணும் பொழுதெளி தெய்தநல்**
**காயெழு தாமறையும்**
**விண்ணும் புவியும் புனலுங்**
**கனலும் வெங்காலுமன்பர்**
**கண்ணுங் கருத்தும் நிறைந்தாய்**
**சகல கலாவல்லியே."**

**பதவுரை:** பண்- இசைக்கலை; பரதம்- நாடகம், நடனக்கலை; யான்- அடியேன்; எண்ணுதல்- நினைத்தல்; நல்குதல்- அருள் செய்தல்; எழுதாமறை- வேதம்; விண்-ஆகாயம்; புவி- மண்; புனல்- நீர்; கனல்- நெருப்பு; வெங்காலும்- கொடிய காற்றும்; கருத்து- எண்ணம்; நிறைந்தாய்- கலந்து நிறைந்திருத்தல்; நல்குதல்- அருள் செய்தல்; சகலகலாவல்லி- சகல கலைகளும் தனது திருவுருவமாக அமையப் பெற்ற பூங்கொடி போன்ற சரஸ்வதி.

**பொழிப்புரை:** கலைவடிவமாக விளங்கும் சகலகலாவல்லியே! வேதங்களிலும், விண், மண், நீர், நெருப்பு, கொடிய காற்று என்னும் ஐம்பூதங்களிலும், அன்பர்களின் கண்களிலும், எண்ணங்களிலும், (எல்லாப் பொருள்களிலும்) நிறைந்துள்ளவளே! இசை, நாடகம், நடனம், என்பவற்றுடன் ஏனைய கலைகளும், ஆகியவற்றை விளக்கும் இனிய சொற்களால் அமைந்த நூல்களும், அவற்றை அடியேன் வேண்டுமென நினைக்கின்ற வேளையில் எளிதாக அடையும்படி எமக்கு அருள் செய்வாயாக.

**விளக்கம்:** கலை வடிவமாகக் கடவுளை நினைத்து வணங்குபவர்களுக்குக் கலைகள் கைகூடும். அதனை நாமும் பின்பற்றிப் பயன் பெறுவோம்.

## (உ) அபிராமி அந்தாதி

தேவி பக்தரான **அபிராமிப்பட்டர்** என்பவரால் பாடப்பட்ட பாடற்தொகுதி அபிராமி அந்தாதி ஆகும். அதில் அந்தாதித் தொடராக நூறு பாடல்கள் உள்ளன. அவை சொல்நயம், பக்தி நயம் மிக்கவை. அபிராமி அந்தாதிப் பாடல்களை ஓதுதலினால் கிடைக்கும் பயனை அதன் இறுதிப்பாடல் கூறுகிறது.

**"ஆத்தாளை யெங்க ளபிராம**
**வல்லியை யண்டமெல்லாம்**
**பூத்தாளை மாதுளம் பூநிறத்**
**தாளைப் புவியடங்கக்**
**காத்தாளை யங்குச பாசாங்**
**குசமுங் கரும்புமங்கை**
**சேர்த்தாளை முக்கண்ணியைத்தொழு**
**வார்க்கொரு தீங்கில்லையே."**

**பதவுரை:** ஆத்தாளை- உலக மாதா; அண்டம்- உலகம்; பூத்தாள்- படைத்தவள்; அம்குசம்- அழகிய தாமரை மலர்; பாசம்- கயிறு; அங்குசம்- தோட்டி; காத்தவள்- காக்கின்றவள்; முக்கண்ணி- மூன்று கண்களை உடையவள்.

**பொழிப்புரை:** அபிராமவல்லி எங்கள் தாய். அவள் எல்லா உலகங்களையும் படைத்தவள். மாதுளம் பூப்போலும் நிறமுடையவள். உலகம் எல்லாவற்றையும் காப்பவள். அழகிய கரங்களில் தாமரை மலர், பாசம், அங்குசம், கரும்பு, வில் என்பவற்றை வைத்திருப்பவள். அவள் மூன்று கண்களை உடையவள். அந்த அம்பிகையைத் தொழுகின்ற அடியவர்களுக்கு ஒரு தீங்கும் உண்டாக மாட்டாது.

## (ஊ) பராபரக் கண்ணி

பராபரக்கண்ணி என்னும் தோத்திரப்பாடலைத் தாயுமானவர் பாடியுள்ளார். அவர் தென் இந்தியாவில் விஜயரங்க சொக்கநாதரிடம் அமைச்சராக இருந்தவர். அந்தப் பதவியையும் பொருட்படுத்தாது ஞானநிலை பெற்றார், பதவியைத் துறந்தார்.

தாயுமானவர் பராபரக்கண்ணியில் சைவசமய, தத்துவ உண்மைகளைக் குறிப்பிடுகிறார். அவரது பாடல்கள் மிக உயர்ந்த நிலையில் நின்று பாடப்பட்டவையாகும். அத்துடன் மிக நுட்பமான உண்மைகள் எல்லாம் இரண்டு அடிப்பாடல்களில் தெளிவாக விளங்குமாறும் பாடப்பட்டுள்ளது. பராபரக்கண்ணியிலிருந்து தெரிவு செய்யப்பட்ட ஐந்து கண்ணிகளைக் கற்போம்.

1. **சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ**
   **வந்த கருணை மழையே! பராபரமே!**

**பதவுரை:** சிந்தித்தல் - நினைத்தல் , சிந்தை - மனம், கருத்து, உதவ- அருள, கருணை- அருள்.

**பொழிப்புரை:** அடியேன் நினைத்த எல்லாவற்றையும் எனது கருத்தறிந்து அருள் செய்யும் பொருட்டு எழுந்தருளி வந்த அருள் மழையே! பராபரமே!

2. **வந்தித்து நின்னை மறவாக் கடனாகச்**
   **சிந்திக்க நின்னதருள் செய்யாய்! பராபரமே!**

**பதவுரை:** வந்தித்தல் - வணங்குதல், கடன் - கடமை, சிந்திக்க - நினைக்க, அருள்- திருவருள்.

**பொழிப்புரை:** தேவரீரை வணங்கி மறவாதிருத்தலையே கடனாகக் கொண்டு, தேவரீரையே நினைந்திருக்கத் திருவருள் செய்ய வேண்டும் பராபரமே!

3. **எவ்வுயிரு மென்னுயிர்போ லெண்ணி யிரங்கவுநின்**
   **றெய்வ வருட்கருணை செய்யாய் பராபரமே!**

**பதவுரை:** எவ்வுயிர் - எத்தன்மையான சிற்றுயிர், எண்ணுதல் - நினைத்தல், இரக்க - அவ்வுயிர்களுக்கு இரங்க.

**பொழிப்புரை:** பராபரமான இறையே! எத்தகைய சிற்றுயிர்களையும் எனது உயிர் போன்று நினைத்து, அவ்வுயிர்களுக்கு இரங்குமாறு தெய்வத்தன்மை பொருந்திய திருவருளாகிய கருணை செய்தல் வேண்டும்.

4. கெட்டவழி யாணவப்பேய் கீழாக மேலான
சிட்டருனைப் பூசை செய்வார். பராபரமே!

பதவுரை: கெட்டவழி- தீயநெறி, ஆணவம்- மும்மலங்களில் ஒன்றான மூல மலம், கீழாக- அதன் சக்தி கெட, சிட்டர்- மேலான அடியார்.

பொழிப்புரை: உயிரினைக் கீழான நெறியில் செலுத்தும் ஆணவ மலப் பேய்(தனது சக்தி) கெட மேலான அடியவர்கள் உன்னைப் பூசனை(பூசை) செய்வார்கள்.

5. மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே!

பதவுரை: மூர்த்தி- சிவலிங்கப் பெருமான், முறையால்- முறையே, முறைப்படி, தொடங்குதல்- ஆரம்பித்தல், வார்த்தை- ஒப்பற்ற சித்தாந்த மகாவாக்கியம், சொல்ல- உபதேசிக்க, சற்குரு- நல்ல குரு, ஆசாரியார்.

பொழிப்புரை: (யாத்திரை மேற்கொண்டு ஆங்காங்கே உள்ள) சிவலிங்கப் பெருமானையும் புண்ணிய தலங்களையும் தீர்த்தங்களையும் முறையே(தரிசிக்க) ஆரம்பித்து வருபவர்களுக்கு ஒப்பற்ற சித்தாந்த மகாவாக்கியத்தினை உபதேசிப்பதற்கு நல்ல குருவும் வந்து வாய்க்கப் பெறுவர்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக

1. தோத்திரம் என்றால் என்ன?
2. உங்களுக்குத் தெரிந்த தோத்திரப் பாடல் நூல்களைக் குறிப்பிடுக?
3. கந்தபுராணம், ‘உதித்தனன் உலகம் உய்ய’ என எக்கடவுளை குறிப்பிடுகின்றது?
4. கந்தர் அநுபூதியின் இறுதிப் பாடல் எது?
5. மாணவர், கலைமகளின் அருளைப் பெறுவதற்கு பாட வேண்டிய தோத்திரப் பாடல்நூல் எது?
6. அந்தாதி என்றால் என்ன?

## செயற்பாடு

01) மேல்வரும் அட்டவணையைப் பூர்த்தி செய்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

| தோத்திரப் பாடல் | ஆசிரியர் பெயர் | குறிப்பிடும் விடயம் |
|---|---|---|
| 1 கந்த புராணம் | | |
| 2 திருப்புகழ் | | |
| 3 கந்தர் அநுபூதி | | |
| 4 சகலகலாவல்லி மாலை | | |
| 5 அபிராமிஅந்தாதி | | |
| 6 பராபரக்கண்ணி | | |

02) தரப்பட்ட தோத்திரப் பாடல்களைச் சந்தத்துடனும் இசையுடனும் வகுப்பறையில் பாடுக.

03) தோத்திரப்பாடல்களை அடிமுறை தவறாது எழுதுக. அவற்றின் பொழிப்பையும் எழுதி அவற்றை வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

- திருமுறைகளுள் அடங்காத இறைவனைப் போற்றிப் பாடும் ஏனைய பாடல்கள் தோத்திரப்பாடல்கள் எனப்படும்.
- கந்தபுராணம், திருப்புகழ், கந்தர் அநுபூதி, சகலகலாவல்லிமாலை, அபிராமி அந்தாதி, பராபரக்கண்ணி முதலியன தோத்திரப்பாடல்கள் ஆகும்.
- திருப்புகழ் சந்தத்துடனும், தோத்திரப்பாடல்கள் இசையுடனும் பாடப்பட வேண்டும். தோத்திரப் பாடல்களைப் பக்தியுடன் ஓதினால் இறை அருள் கிடைக்கும்.

# 10 சமய இலக்கியங்கள்

எமது சமயத்தின் உண்மைகளை அறிந்து கொள்வதற்குச் சமய இலக்கியங்கள் பெரிதும் உதவுகின்றன. இவ்விலக்கியங்கள் பெரும்பாலும் உரைநடை வடிவிலோ அல்லது செய்யுள் வடிவிலோ அமைந்திருக்கும். இவ்வாறான சமய இலக்கியங்கள் என்ற வகையில் புராணங்களும் இதிகாசங்களும் முதன்மையானவையாகக் காணப்படுகின்றன.

இந்த இரண்டு சமய இலக்கியங்களும் காலத்தால் முந்தியவையாகும். அவை முறையே பழைய வரலாறு, இப்படி முன்பு இருந்தவை என்ற பொருட்களைக் கொண்டுள்ளன. இதனால் இவை இரண்டும் எமது வாழ்க்கையுடன் இணைந்தும் உள்ளன. புராணங்கள் என்னும் போது அவை மகாபுராணங்கள், சைவபுராணங்கள், தலபுராணங்கள் என்று வேறுபடுகின்றன. இதனடிப்படையில் அவை கூறும் விடயங்களும் வேறுபட்ட தன்மைமைகளைக் கொண்டனவாகும். இருந்தும் இவற்றுக்கிடையே தொடர்புகள் இல்லாமலுமில்லை. இதே போல் இதிகாசங்கள் என்ற வகையில் மகாபாரதம், இராமாயணம் ஆகியவற்றை உள்ளடக்கிக் கொள்ளலாம்.

இந்த இரண்டு சமய இலக்கியங்களிலும் பல்வேறுபட்ட பண்புகளையும் இனங்கண்டு கொள்ளலாம். அவையாவன-

1. உயரிய கருத்துக்களை எளிய நடையில் கூறும் முறை.
2. சாதாரண பாமரர்களும் விளங்கும் வகையில் அமைந்த மொழிநடை.
3. இறைவன் அருட்சக்திகாட்டப்படல்.
4. வாழ்வின் பக்குவத்தையும் தேவைகளையும் உணர்த்தல்.
5. வாழ்வியல், அரசியல், தர்மம், சகோதரபாசம், ஒற்றுமை, நன்றிமறவாமை, நட்பு,பொறுமை போன்ற இன்னோரன்ன விழுமியங்களை வெளிக்கொணர்தல்.
6. நாட்டார் வழக்காறுகளை ஏற்படுத்தல்.

போன்றவற்றைக் கூறிக்கொள்ளலாம். இப்பண்புகள் யாவும் இன்று எமது சமயத்துடன் இணைந்து காணப்படுகின்றன. மேலும் இவற்றிலே ஒருவனே தேவன், உயிர்கள் பல, இறைவன் திருவிளையாடல், இறைவனை நம்பினோர் கைவிடப்படார் என்பன போன்ற விடயங்களும், கிரியைகள், சடங்குகள் என்பவற்றின் தத்துவங்களும் கூறப்பட்டுள்ளன. அவற்றுள் நாட்டார் கலைகளான கூத்து, நாட்டியநாடகம் மற்றும் நுண்கலைகள் என்பன காணப்படுகின்றன.

ஆலயங்களைச் சூழ மக்கள் குடியிருப்புக்கள், அவர்களது சொற்பதங்கள் என்பன காணப்பட்டமையால் அவை இன்றும் எமது சமய வாழ்வுடன் இணைந்து காணப்படுகின்றன.

சைவத்தமிழ் மக்களால் பெரிதும் போற்றப்பட்ட தமிழ் மொழிப் புராணங்களாக பெரியபுராணமும், கந்த புராணமும் காணப்படுகின்றன.இவற்றுள் அன்பால் நிறைந்த அமுத சுரபியாக விளங்குவது பெரியபுராணம்; அறிவால் நிறைந்த களஞ்சியமாக விளங்குவது கந்தபுராணம். இந்த இரண்டு புராணங்களும் சைவ இலக்கியங்களுள் இரண்டு கண்களாகத் திகழ்கின்றன. அன்பை அள்ளி வழங்குவதனால் பெரியபுராணம் தாய் போலவும், அறிவை வழங்குவதனால் கந்த புராணம் தந்தை போலவும் எமைப் புரந்து வருகின்றன.



சமய இலக்கியமாகவும், சைவக்காப்பிய மாகவும் கருதப்படுவது பெரியபுராணமாகும். இதனைச் சேக்கிழார் இயற்றினார். இது பன்னிரண்டாம் திருமுறைக்குள் அடக்கப்பட்டுள்ளது. கி.பி 12ஆம் நூற்றாண்டிலே சோழப் பேரரசை ஆண்ட அநபாயன் எனப்படும் இரண்டாம் குலோத்துங்க சோழ மன்னன் வேண்டிக் கொண்டதற்கிணங்க சேக்கிழாரால் பாடப்பட்டது.

சங்ககாலம் தொடக்கம் சோழர் காலம் வரையான காலப்பகுதியில் தமிழ் நாட்டில் வாழ்ந்து சைவப்பணிகள் பல ஆற்றிய நாயன்மார்களின் திவ்விய வரலாற்றினை, பக்திச் சுவை நனி சொட்டும் வகையில் **சேக்கிழார்** பாடியுள்ளார். இந்நூலுக்கு முதல் நூலாக சுந்தரமூர்த்தி சுவாமி அருளிய **திருத்தொண்டர் தொகையும்** வழி நூலாக நம்பியாண்டார் நம்பி அருளிய **திருத்தொண்டர் திருவந்தாதியும்** அமைகின்றன. பெரிய புராணம் அறுபத்து மூன்று தனியடியார்கள் பற்றியும், ஒன்பது தொகையடியார்கள் பற்றியும் கூறுகின்றது. இது 4,250 செய்யுள்களை உடையது.

சேக்கிழார், பெரியபுராணத்தில் நாயன்மார்களுள் ஒருவரான சுந்தரரைக் காவிய நாயகனாகக் கொண்டு இதனைப்படைத்துள்ளார். இறைவன் **உலகெலாம்** என அடியெடுத்துக் கொடுக்க **உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்.........** என்ற காப்புச் செய்யுளுடன் ஆரம்பமாகிறது. இப்புராணத்தில் பல்வகை விடயங்களைச் சேக்கிழார் விபரித்துள்ளார்.

முருகப் பெருமானது தோற்றம், ஆடல், வீரம், அருள் என்பனவற்றைத் தமிழில் கூறும் புராணமாக கந்தபுராணம் அமைகிறது. காஞ்சிபுரத்துக் குமரக் கோட்டத்தில் பூசகராக இருந்த **கச்சியப்ப சிவாச்சாரியாரால்** இது அருளப்பட்டது. வடமொழியில் அமைந்த சிவசங்கர சங்கிதையைத் தழுவி தமிழில் பாடப்பட்டதாகும். இப்புராணம் உற்பத்தி காண்டம், அசுர காண்டம்,

மகேந்திர காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம் எனும் ஆறு காண்டங்களையும் 10,346 விருத்தப்பாக்களையும் உடையது. சைவசித்தாந்தம் கூறும் பதி, பசு, பாச இயல்புகளை ஆங்காங்கே தெளிவாக விளக்கி நிற்கிறது. இப்புராணம் நவில்தொறும், நவில்தொறும் நூல் நயம் பயப்பது.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. சமய இலக்கியங்கள் என்றால் என்ன?

2. புராணங்கள் எத்தனை வகைப்படும்?

3. புராண இதிகாசங்கள் மூலம் வெளிக் கொணரப்பட்ட விழுமியங்கள் இரண்டைத் தருக.

4. பெரியபுராணத்தின் முதல் நூலும், வழி நூலும் யாவை?

5. கந்தபுராணம் எத்தனை காண்டங்களை உடையது? அவை யாவை?

## செயற்பாடு.

01) உமது பாடசாலை நூலகத்திலுள்ள சைவ சமய இலக்கிய நூல்கள் ஐந்தினையும் அவற்றின் ஆசிரியர்களையும் அவை கூறும் முக்கிய விடயங்களையும் சேகரியுங்கள்.

## பாடச்சுருக்கம்.

- சமய இலக்கியங்கள் சமய உண்மைகளை வெளிக் கொணரச் செய்தன.
- புராணங்கள், இதிகாசங்கள் என்பன பிரதான சமய இலக்கியங்கள்.

# கந்தபுராணத்தில் ஒரு காட்சி

## திருப்பெருவடிவம்

### கதைச்சுருக்கம்



கந்தபுராணத்தின் யுத்த காண்டத்தில் இடம்பெறும் பகுதி திருப்பெரு வடிவம் ஆகும். இது முருகனின் சிறப்புகளைக் கூறுவதாகும். தேவர்கள் அசுரர்களால் பட்ட துன்பங்களைப் போக்குவதற்காகவே இவ்வடிவத்தை முருகப் பெருமான் எடுத்தார். இவ்வடிவத்தின் மூலம் சூரனை வதம் செய்த பகுதி சிறப்புப் பெறுகிறது. ஆன்மாவைப் பீடித்துள்ள மும்மலங்கள் இறையருளால் நீக்கமடைந்து ஆன்மா ஞானத்தைப் பெறும் என்னும் தத்துவத்தை இக்கதைப்பகுதி மூலம் அறியலாம். இதில் சூரன் ஆணவமலமாகவும், சிங்கமுகன் கன்ம மலமாகவும், தாரகன் மாயா மலமாகவும் கொள்ளப்படுகின்றனர். முருகப் பெருமான் ஞானமாகிய வேலைக் கொண்டு மும்மலங்களாகிய அசுரர்களை அழித்துத் தேவர்களைப் பாசங்களிலிருந்து காத்தருள் செய்கிறார்.

முருகப் பெருமானது திருப்பெருவடிவம் இருபது பாடல்களில் காட்டப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாடலும் பக்தியை முன்னெடுத்துச் செல்கின்றது. சூரன் சினத்துடன் போர் செய்கின்றான். அவனது முகத்தைப்பார்த்து பின்வருமாறு முருகப்பெருமான் கூறுகிறார். "நீ மாய வடிவங்களை எடுத்தாய் அதன் மூலம் என்னுடன் போர் செய்தாய்; இனி என் பரமேஸ்வர வடிவத்தைக் காட்டுகிறேன்" என்று முருகன் கூறும் கூற்றானது, அவர் எல்லை கடந்தவர், மேலானவர் என்பதைக் காட்டுகிறது.

முருகப் பெருமானின் இவ்வடிவம் பிரபஞ்சப் பொருட்கள் அனைத்தையும் கொண்டதாகும். இதனைக்கண்ட சூரன் அதிசயிக்கிறான். இந்த வடிவமானது விஷ்ணு, பிரம்மா, தேவர்கள் அனைவருக்கும் மூலகாரணமான பரமசிவ வடிவமாகும். சிவனே முருகனாக வந்தவர் என்பதை நான் அறியவில்லை என சூரன் எண்ணுகிறான். இவனின் இந்த வடிவத்தின் மொத்த உருவை எக்காலம் சென்றாலும் காணமுடியாது, எனது ஆணவம் கெட்டது, எல்லாப் பொருட்களிலும் இவ்வடிவத்தையே காண்கின்றேன், எனது கால்கள் இவ்வடிவத்தையே வலம்வர விரும்புகின்றன, நா துதிபாட விரும்புகிறது. மனம் விரும்பினாலும் என் மானம் இவற்றைச் செய்ய விடவில்லை.

இவனோடு நான் போர் புரிந்தது, அவனது திருவிளையாடலால்தான். என்னைக் கொல்ல வேண்டும் என அவன் நினைத்தால் யாரும் தடுக்கவும் முடியாது, என்று சூரன் நினைக்கின்ற போது முருகப்பெருமான் மயில் வாகனத்தில் பாலகனாகத் தோன்றி ஞானத்தைக் கொடுக்க முற்படுகிறார். அவ்வேளையில் சூரன் மாய மாமரமாகிறான். இவ்வேளை சூரனது மார்பை முருகப்பெருமானது வேலாயுதம் பிளக்கிறது. அப்போது முருகப்பெருமான் அவனது ஆணவத்தை அடக்கி ஞானத்தைக் கொடுக்கின்றார்.

முருகப் பெருமானது இத் திருப்பெரு வடிவத்தின் சிறப்பை கச்சியப்பர் பாடல்கள் மூலம் நாமும் அறிகிறோம். ஆதலால், பதியாகிய முருகப் பெருமான் மேலானவர் என்பதையும், அவரைமீறி நான் எனது என்ற அகங்கார மமகாரம் கொண்டால் இறுதியில் பதியால் அடக்கப்படுவோம் என்பதையும் இப்பகுதி உணர்த்துகின்றது.

1. உடல்சின மோடு சூரன் ஒருவனாய் அங்கண் நின்றான்
   அடல்வலி கொண்ட வாளி அந்தர நெறியால் மீண்டு
   புடையுறு சரங்க ளோடு பொள்ளெனத் தூணி புக்க
   சுடர்நெடுந் தனிவே லண்ணல் அவன்முகம் நோக்கிச்
   சொல்வான்.

**பதவுரை :** உடல் சினமோடு சூரன் - சூரபன்மன் மாறுபட்டுப் போர் செய்யும் கோபத்தோடு, ஒருவனாய் அங்கண் நின்றான் - மாய வடிவங்கள் யாவும் அழிந்து போகத் தான் ஒருவனாய்த் தனித்து நின்றான், அடல்வலி கொண்ட வாளி – அம்மாயங்களை வெற்றி பெற்ற வலிய அம்புகள், அந்தர நெறியால் மீண்டு – ஆகாய வழியாய்த் திரும்பி, புடைஉறு சரங்களோடு – பக்கத்தே உள்ள மற்றைய அம்புகளோடும், பொள்ளென – விரைவாக, தூணிபுக்க – அம்புக் கூட்டினுள் – புகுந்த போது, சுடர் நெடும் தனிவேல் அண்ணல் பிரகாசிக்கின்ற மேதக்க இணையற்ற வெற்றி வேலாயுதப் பொருமான், அவன் முகம் நோக்கிச் சொல்வான் - அச்சூரபன்மனது முகத்தைப் பார்த்துக் கூறினார்.

**பொழிப்புரை :** சூரன் மாறுபட்டுப் போர் செய்யும் வகையில் சினத்துடன் நிற்க, அம்புகள் மீண்டு வான்வழிச் சென்று ஏனைய பாணங்களோடும் அம்புக் கூட்டினுள் புக்கனவாக வெற்றி வேலாயுதப் பெருமான் அச்சூரபன்மனது முகத்தைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார்.

2. வெம்புய லிடையில் தோன்றி விளிந்திடு மின்னு வென்ன
இம்பரில் எமது முன்னம் எல்லையில் உருவங் கொண்டாய்
அம்பினில் அவற்றை யெல்லாம் அட்டனம் அழிவிலாத
நம்பெரு வடிவங் கொள்வ நன்றுகண் டிடுதி யென்றான்.

பதவுரை : வெம்புய இடையில் தோன்றி விளிந்திடு மின்னு என்ன – முகிலுக்கு இடையே தோன்றி மறைந்து போகின்ற மின்னலைப்போல, இம்பரில் - இந்த யுத்தகளத்தில், எமது முன்னம் - எம் முன்னே, எல்லை இல் உருவங்கொண்டாய் - எல்லையற்ற பல மாய வடிவங்களைக் கொண்டாய், அம்பினில் அவற்றை எல்லாம் அட்டனம் - அவ்வடிவங்களை எல்லாம் மிக இலகுவாக அஸ்திரங்களினாலே அழித்தோம். அழிவிலாத நம்பெரு வடிவம் கொள்வம் - எனது அழிவற்ற பெரிய பரமேஸ்வர வடிவத்தைக் கொள்வோம், நன்று – அதனால் உனக்குப் பெரும் நன்மை உண்டாம், கண் டிடுதி என்றான் - தரிசித்துக்கொள் என்றார்.

பொழிப்புரை : முகிலுக்கு இடையிலே தோன்றி அழிகின்ற மின்னலைப் போல இவ் யுத்தகளத்தில் என் முன்னே மாய வடிங்களைக் கொண்டாய் அவற்றை எல்லாம் நான் பாணங்களினாலேயே அழித்தேன். இனி எனது பரமேஸ்வர வடிவத்தைக் கொள்கிறேன்; தரிசித்துக்கொள்; இதனால் உனக்கு மேலும் பெரிய நன்மை உண்டாகும் என்றார்.

3. கூறிமற் றினைய தன்மை குரைகடல் உலகந் திக்கு
மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்
ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி
வேறிலை என்ன ஆங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்.

பதவுரை : கூறிமற்ற இனைய தன்மை - இங்ஙனம் திருவாய் மலர்ந்தருளி, குரைகடல் - ஒலிக்கின்ற சகல சமுத்திரங்களும், உலகம் - சகல உலகங்களும், திக்கு – எல்லாத்திசைகளும், மாறு இலாப் புவனம் - மாறுபாடற்ற சகல புவனங்களும், அண்டம் - எல்லா அண்டங்களும், வானவர் - எல்லாத் தேவர்களும், உயிர்கள் யாவும் - சகல ஜீவராசிகளும், ஆறுமாமுகத்து வள்ளல் மேனியில் அமைந்தது அன்றி – மகிமை மிக்க ஆறுமுகப்பெருமானின் மேனியில் அமைந்து

இருப்பதே அல்லாமல், வேறுஇலை என்ன – வேறாக ஒன்றேனும் இல்லையென்று கண்டோர் கூறுமாறு, அங்கு ஓர் வியன்பெரு வடிவங்கொண்டான் - அங்கேயொரு வியக்கத் தக்க பெரிய திருமேனியைக் கொண்டார்.

பொழிப்புரை: முருகப்பெருமான் இங்ஙனம் கூறி, எல்லாப் பிரபஞ்சப் பொருள்களும் தம் திருமேனியில் அமைந்து இருக்கின்ற பரமேஸ்வர வடிவத்தைக் கொண்டார்.

4. **இறுதியும் முதலும் இல்லா இப்பெரு வடிவந் தன்னைக்**
**குறைவிட முறழுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தின் நிற்ப**
**அறிவரும் உணர்தல் தேற்றா ஆறுமா முகத்து வள்ளல்**
**சிறிதுநல் லுணர்ச்சி நல்க இனையன செப்ப லூற்றான்.**

பதவுரை : இறுதியும் முதலும் இல்லா – அடிமுடி காண்பதற்கு அரிதான, இப்பெரு வடிவந் தன்னை - இந்த விசுவரூபத்தை, கறைவிடம் உறழும் சூரன் கண்டு – கரிய நஞ்சையொத்த சூரபன்மனும் கண்டு, விம்மிதத்தின் நிற்ப – அதிசயத்து நின்றானாக, அறிவரும் உணர்தல் தேற்றா – அறிஞர்களும் அறிந்து கொள்வதற்கு அரிய, ஆறுமா முகத்து வள்ளல் - அழகிய ஆறுதிருமுகங்களையுடைய அருள்வள்ளலாம் முருகப்பெருமான், சிறிது நல் உணர்ச்சி நல்க – சிறிதளவு ஞான உணர்ச்சியைக் கொடுக்க, இனையன செப்பல் உற்றான் - இங்ஙனம் கூறுவான்.

பொழிப்புரை: நஞ்சை ஒத்த சூரபன்மன் அடிமுடியற்ற இவ்விஸ்வ ரூபத்தைக் கண்டு அதிசயித்து நிற்க, அறிஞர்கள் தாமும் அறிதற்கரிய ஆறுமுகனின் உண்மை ஞானத்தைக் கொடுக்கப் பின்வருமாறு கூறுவார்.

5. **கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்**
**பாலனென் றிருந்தேன் அந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்**
**மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்**
**மூலகா ரணமாய் நின்ற மூர்த்தி அன்றோ?**

பதவுரை : கோலமா மஞ்சை தன்னில் - அழகிய மயில்வாகனத்தின் மீது, குலவிய குமரன் தன்னை – வீற்றிருக்கும் முருகப்பெருமானை, பாலன் என்று இருந்தேன் - சாதாரண சிறுவன் என்று எண்ணியிருந்தேன். அந்நாள் பரிசு இவை உணர்த்திலேன் யான் -முன்னையகாலத்து பரமேஸ்வர மூர்த்தியே இவர் என்று நான் அறியவில்லை, மால் அயன் தனக்கும் - விஷ்ணு பிரம்மாவுக்கும், ஏனைவானவர் தமக்கும் - ஏனைய தேவர்களுக்கும், யார்க்கும் - எவருக்கும், மூல காரணமாய் நின்ற மூர்த்தி - மூல காரணமாயுள்ள பரமேஸ்வரனும், இம் மூர்த்தி அன்றோ - இவனும் ஒன்றன்றோ.



பொழிப்புரை : அழகிய மயில் வாகனத்தின் மீது எழுந்தருளிய முருகப்பெருமானை யான் அரசு வீற்றிருந்த காலத்தில் ஒரு சிறுவன் என்றே எண்ணியிருந்தேன். இப்பொழுது பார்க்கும் பரமேஸ்வர மூர்த்தியே அச்சிறுவன் என அறிந்திலேன். இப்போது பார்க்கும் போது விஷ்ணு, பிரம்மா, தேவர்கள் அனைவருக்கும் மூலகாரணனான பரமசிவனே அவன் என்பது விளங்குகிறது.

6. ஒற்றென முன்னம் வந்தோன் ஒருதனி வேலோன் தன்னைப்
பற்றிக லின்றி நின்ற பராபர முதல்வன் என்றே
சொற்றனன் சொற்ற எல்லாந் துணிபெனக் கொண்டி லேனால்
இற்றையிப் பொழுதில் ஈசன் இவனெனுந் தன்மை கண்டேன்.

பதவுரை: ஒற்று என முன்னம் வந்தோன் - முன்பு என் அரண்மனைக்குத் தூதாக வீரவாகு, ஒரு தனி வேலோன் தன்னை - இணையற்ற வெற்றி வேலாயுதப் பெருமானை, பற்று இகல் இன்றி நின்ற பராபர முதல்வன் என்றே சொற்றனன் - விருப்பு வெறுப்பற்ற பரமசிவன் என்றே கூறினான். சொற்ற எல்லாம் - அவ்வாறு அவன் கூறியதை துணிபு எனக் கொண்டிலேன், இற்றை இப்பொழுதில் ஈசன் இவன் எனும் தன்மை கண்டேன் - இன்று பரமசிவனே இவன் என்ற உண்மையைக் கண்டு கொண்டேன்.

**பொழிப்புரை:** சில நாட்களுக்கு முன் என்னிடம் தூதாக வந்த வீரவாகு, சிவன் என்றே எனக்கு வற்புறுத்திக் கூறினான். அதனை எனது அகங்காரத்தினால் உண்மையென நான் ஏற்றுக் கொள்ளவில்லை. இன்று இப்பாலகனே பரமசிவன் என்பதை புரிந்துள்ளேன்.

**7. சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னில்**
**ஏர்க்குறும் ஒளியுஞ் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்**
**ஆர்க்குள வுலகில் அம்மா அற்புதத்தோடும் பல்காற்**
**பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை இன்னுமென் பார்வை தானும்.**

**பதவுரை:** சீர்க் குமரேசன் கொண்ட திருப்பெரு வடிவம் தன்னில் - செல்வம் மிக்க முருகப் பெருமான் கொண்ட தெய்வீக மயமான அந்தப் பரமேஸ்வர வடிவத்தை, ஏர்க்கு உறும் ஒளியும் - அழகு விளங்குவதற்குக் காரணமான ஒளிகளும், சீரும் இளமையும் எழிலும் எல்லாம் - சிறப்பும் இளமையும் வனப்பும் ஆகிய அனைத்தும், ஆர்க்கு உள உலகில் - உலகத்தில் வேறு யாருக்கு உண்டு? அம்மா அற்புதத் தோடும் பல்கால் பார்க்கினும் - அதிசயத்தோடு பலமுறை பார்த்தாலும், தெவிட்டிற்று இல்லை இன்னும் என் பார்வை தானும் இன்னமும் என் கண்களுக்கு அலுக்கவில்லை.

**பொழிப்புரை:** செல்வம் மிக்க முருகப் பெருமான் கொண்ட இவ்விசுவரூபத்தில், அழகு விளங்குவதற்கு காரணமான ஒளியும், சிறப்பும் இளமையும் வனப்பும் ஆகிய அனைத்தும் உலகத்தே வேறு யாரிடம் உண்டு? என அதிசயத்தோடு பலமுறை பார்த்தாலும் என் மனமும் கண்ணும் திருப்தியடையவில்லையே.

**8. அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடியின் காறும்**
**எண்ணிலா வூழிகாலம் எத்திறன் நோக்கி னாலுங்**
**கண்ணினால் அடங்கா துன்னிற் கருத்தினால் அடங்கா தென்பால்**
**நண்ணினால் அமருங் கென்கை அருளேன நாட்டலாமே.**

**பதவுரை:** அண்ணல் ஆர் குமரன் மேனி - பெருமை பொருந்திய முருகப் பெருமான் இந்த விசுவ ரூபத்தில் அடிமுதல் முடியின் காறும் - அனைத்து

உறுப்புக்களையும், எண் இலா ஊழி காலம் - எண்ணற்ற ஊழிக் காலமாக, எத்திறம் நோக்கினாலும் - எவ்வாறு நுட்பமாகப் பார்த்தாலும்,கண்ணினால் அடங்காது – கண் பார்வைக்கு உட்படாது, உன்னில் கருத்தினால் அடங்காது – நினைத்தாலும் கருத்துக்கும் உட்படாது, என்பால் நண்ணினான் அமருக்கு என்கை – என்னுடன் போர் புரிய வந்தான் என்று சொல்வது. அருள் நாட்ட லாம் - என் மீது வைத்த கருணை என்றே சொல்ல வேண்டும்.

பொழிப்புரை : பதித்துவப் பெருமைமிக்க முருகன் கொண்ட இவ் விசுவரூபத்தின் அடிமுதல் முடி வரையுள்ள அங்கங்களை, எத்தகைய நுட்பமாகப் பல காலம் பார்த்தாலும் கண் பார்வையால் முழுதாகக் காண முடியாது, மனத்தாலும் முழுமையாக் கணிக்க முடியாது. அத்தகைய பெரியோன் என்னுடன் போரிட வந்தது என் மீது வைத்த கருணை என்றே கூறவேண்டும்.

9. திருகிய வெகுளி முற்றுந் தீர்ந்தன செருவின ஊக்கம்
அருகிய துரோமம் புள்ளி ஆயின விழியில் தூநீர்
பெருகிய திவன்பால் அன்பு பிறந்தன தமியேற் குள்ளம்
உருகிய தென்பு தானம் உலைமெழு காகும் அன்றே.

பதவுரை : திருகிய வெகுளி முற்றும் தீர்ந்தன – என் மனத்தில் எழுந்த பெருஞ் சீற்றம் எல்லாம் தீர்ந்தது, செருவின் ஊக்கம் அருகியது – போர் புரிய வேண்டும் என்ற எண்ணமும் சோர்ந்தது, உரோமம் புள்ளி ஆயின – உரோமங்களும் சிலிர்த்தன, விழியில் தூநீர் பெருகியது. கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது, இவன்பால் அன்பு பிறந்தன - இவன் மீது அன்பு ஏற்பட்டது, தமியேற்கு உள்ளம் உருகியது – தனித்தவனான எனக்கு உள்ளம் உருகியது, என்பு தானும் உலைமெழு காகும் அன்றே – கடினமான எலும்புகள் தாமும் நெருப்பில் பட்ட மெழுகு போல் நெக்குருகும் அன்றோ.

பொழிப்புரை : தனித்தவனான எனக்கு உள்ளத்தின்கண் முதிர்ந்த கோபமும் தீர்ந்தது, யுத்தம் செய்ய வேண்டும் என்ற மன எழுச்சியும் சோர்ந்தது. உரோமங்களும் சிலிர்த்தன. ஆனந்தக் கண்ணீரும் பெருகிற்று. அன்பும் தோன்றியது. மனமும் உருகியது. என்பு நெருப்பில் பட்ட மெழுகு போன்று உருகுகின்றதல்லவோ.

10. போயின அகந்தை போதம் புகந்தன வலத்த தான
தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயனீ தன்றே.

பதவுரை : போயின அகந்தை – எனக்கு அகங்காரம் அடங்கிவிட்டது, போதம் புகந்தன – உண்மை ஞானம் உதயமாயிற்று, வலத்ததான தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன – சிறந்தனவான வலத்தோளும் வலக்கண்ணும் துடித்தன, புவனம் எங்கும் மேயின பொருள்கள் மற்றம் - சகல அண்ட புவனங்களிலும் காணப்படும் பொருட்கள் அனைத்தும், வெளிப்படுகின்ற விண்ணோர் நாயகன் வடிவங் கண்டேன் - வெளிப்பட்டுத் தோன்றும் தேவ நாயகன் முருகனின் பரமேஸ்வர வடிவத்தைத் தரிசித்தேன், நல் தவப்பயன் ஈது அன்றோ - இது நான் செய்த நல்ல தவப்பயனல்லவா.

பொழிப்புரை: எனக்கு அகங்காரம் அடங்கிவிட்டது. எனக்கு ஞானம் பிறந்துள்ளது(உண்டாயிற்று). வலது தோளும் வலது கண்ணும் துடித்தன. எல்லா அண்டங்களும் அவற்றிலுள்ள எல்லாப் பொருட்கள் அனைத்தும் வெளிப்படுவதற்கு இடமாகிய தேவநாயகராம் முருகவேளின் திருப்பெருவடிவத்தைத் தரிசிக்கும் பேறு பெற்றேன். இது நான் முன்பு செய்த தவத்தின் பயனாகும்.

11. சூழுதல் வேண்டுந் தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை
தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டுத் தாலு
ஆழுதல் வேண்டுந் தீமை அகன் றுநான் இவற்கா ளாகி
வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.

பதவுரை: சூழுதல் வேண்டும் தாள்கள் - எனது கால்கள் இப்பெருமானை வலம்வர விரும்புகின்றன. தொழுதிடல் வேண்டும் அங்கை – எனது கைகள் வணங்க விரும்புகின்றன, தாழுதல் வேண்டும் சென்னி – என் தலையும் வணங்க விரும்புகிறது, துதித்திடல் வேண்டும் தாலு – எனது நாவும் துதிக்க விரும்புகின்றது, அழுதல் வேண்டும் தீமை அகன்று – பாவச்செயல்களை ஒழித்து, நான் இவற்கு ஆள் ஆகி – நான் இப்பெருமானுக்கு ஆட்பட்டு, வாழுதல் வேண்டும், நெஞ்சம் - வாழ்தலை விரும்புகிறது. என் மனம், தடுத்தது மானம் ஒன்றே – மானம் என்னும் ஜீவகுணம் இவற்றை எல்லாம் தடுத்து நின்றது.

பொழிப்புரை :

என் கால்கள் இப்பெருமானை வலம்வர விரும்புகிறது. கைகள் வணங்க விரும்புகின்றன. தலை தாழ்ந்து வணங்க விரும்புகிறது. நாவும் துதிக்க விரும்புகிறது. மனம் கீழ்மையான பாவச்செயல்களை விட்டு ஆட்பட்டு வாழ விரும்புகின்றது. ஆனால், தன்மானம் இவற்றை எல்லாம் தடுத்து நிற்கிறது.

12. ஏடவிழ் அலங்கல் மார்பான் என்னுடன் இந்நாள் காறும்
நீடிய இகற்போர் ஆற்றி நீங்கலான் நின்ற தெல்லாம்
ஆடலின் இயற்கை யென்றே அறிந்தனன் அ∴தான் றன்னான்
சாடிய வேண்டு மென்னின் யாரது தாங்கற் பாலார்.

பதவுரை : ஏடு அவிழ் அலங்கல் மார்பன் - இதழ் மலர்ந்து விரிந்த கடம்பமாலை அணிந்த மார்பையுடைய முருகன், என்னுடன் இந்நாள் காறும் - என்னோடு இன்று வரையும், நீடிய இகல்போர் ஆற்றி – நீண்ட பகைமை மிக்க போரைச் செய்து, நீங்கலான் நின்றது எல்லாம் - விட்டு நீங்காதவராய் நின்ற தன்மை எல்லாம், ஆடலின் இயற்கை என்றே அறிந்தனன் - அவனின் திருவிளையாடல் என்றே தெளிந்தேன், அ∴தான்று – அவ்வாறன்றி, அன்னான் சாடிய வேண்டும் என்னின் - அப்பெருமான் என்னைச் சம்ஹாரம் செய்ய வேண்டும் என்றால், யாரது தாங்கற் பாலார் - யாரால் அதனைத் தடுத்து நிறுத்த முடியும்?

பொழிப்புரை : கடம்ப மாலையை அணியப்பெற்ற மார்பை உடையவராகிய முருகப்பெருமான் என்னோடு இன்று வரை போர் செய்து கொண்டு என்னை விட்டு நீங்காது நின்ற தன்மைகள் எல்லாம், அவனின் திருவிளையாடலே என்று புரிந்து கொண்டேன். தவிர அவன் என்னைக் கொல்லவேண்டும் என்று எண்ணினால் அதனை யார் தான் தடுக்க முடியும்? யாராலும் முடியாது.

13. **ஒன்றொரு முதல்வ னாகி உறைதரு மூர்த்தி முன்னம்**
**நின்றமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினித் தளரேன் அம்மா**
**நன்றிதோர் பெருமை பெற்றேன் வீரனும் நானே யானேன்**
**என்றுமிப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்ப துண்டோ.**

பதவுரை: ஒன்று ஒரு முதல்வன் ஆகி உறைதரு மூர்த்தி முன்னம் - பிரபஞ்சப் பொருள்கள் அனைத்தும் பொருந்திய இணையற்ற திருமேனியையுடைய முதற்பரம் பொருளாம் இப் பெருமானுடைய திருக்கோவில், நின்று அமர்செய்தேன் இந்நாள் - இன்று வரை அவரை எதிர்த்துப் போர் செய்தேன், நெஞ்சு இனி தளரேன் - இனி மனம் தளரமாட்டேன், நன்று இது ஓர் பெருமை பெற்றேன் - நல்ல இந்த ஒரு பெருமையையும் பெற்றேன், வீரனும் நானே ஆனேன் - நானே சிறந்த வீரனும் ஆகினேன், என்றும் இப்புகழே நிற்கும் - எக்காலத்திலும் இந்தப் புகழ் நிற்கத்தக்கது, இவ் உடல் நிற்பது உண்டோ - இந்த பூத உடல் நிற்காதல்லவா?

பொழிப்புரை : இன்றுவரையும் ஒப்புயர்வற்ற பரம்பொருளாய் என்றுமுள்ள இப்பெருமானுக்கு முன்னே நின்று போராடினேன். இனி மனம் தளரேன். நல்ல ஒரு பெருமையையும் பெற்றேன். நானே மகா வீரனும் ஆனேன். என்றும் இப்புகழ் நிற்குமே அல்லாமல் இவ்வுடம்பு நிற்காதல்லவா?

14. **என்னஇத் தகைய பன்னி நிற்றலும் எவர்க்கும் மேலோன்**
**உன்னருந் தகைத்தாய் நின்ற ஒருபெருந் தோற்றம் நீத்து**
**மின்னிவர் கலாபம் ஊர்ந்த வியனுருக் கொண்டு நண்ணித்**
**துன்னலன் போத மாற்றித் தொன்மைபோ லாகச் செய்தான்**

பதவுரை : என்ன இத்தகைய பன்னி நிற்றலும் - இங்ஙனம் சூரபன்மன் கூறிநின்ற போது, எவர்க்கும் மேலோன் எவ்வகைப்பட்ட தேவர்க்கும் தலைவனான முருகப்பெருமான், உன்ன அருந்தகைத்து ஆய் நின்ற ஒரு பெருந்தோற்றம் நீத்து – மனத்தால் நினைத்ததற்கும் அரிதாய விசுவரூபத்தை மறைத்து, மின் இவர் கலாபம் ஊர்ந்த – பசிய ஒளிமிக்க மயில்வாகனத்தில் ஏறியூர்த்த, வியன் உருக்கொண்டு நண்ணி – வியக்கத்தக்க பாலகன் வடிவில் தோன்றி, துன்னலன் போதம் மாற்றி – பகைவனான சூரனுக்குத் தோன்றச் செய்த ஞானத்தை மறைத்து, தொன்மை போல் ஆகச் செய்தான் - முன்பு போல அஞ்ஞான வசமடையச் செய்தான்.

பொழிப்புரை : இவ்வாறு சூரபன்மன் கூறிநிற்க, ஆறுமுகப்பெருமான் நினைத்தற்கரிய தம் பரமேஸ்வர வடிவத்தை மறைத்து, மயிலேறி விளையாடும் திருமேனியைக் காட்டி நின்று அப்பகைவனது ஞானத்தை மாற்றி, மறுபடியும் அஞ்ஞான வசத்தனாகும்படி செய்தார்.

**15. ஆயது துணிவாக் கொண்ட அவுணர்கள் மன்னன் பின்னும்**
**தீயதோர் தொல்லை மாயச் சீர்கொண்மந் திரத்தைப் பன்னி**
**ஞாயிறு மருட்கை கொள்ள ஞாலமுங் ககன முற்றும்**
**மாயிருள் உருவங் கொண்டு மறைந்துநின் றார்க்க லுற்றான்.**

பதவுரை : ஆயது துணிவாக் கொண்ட – அவ்வாறு தேவர்களை அழித்தலைத் தீர்மானமாகக்கொண்ட, அவுணர்கள் மன்னன் - அசுரர் அரசனாகிய சூரபன்பமன், பின்னும் தீயதோர் தொல்லை மாயச் சீர்கொள் மந்திரத்தைப் பன்னி மறுபடியும் தீமை மிக்க சிறந்த ஓர் மாய மந்திரத்தை உச்சரித்து, ஞாயிறும் மருட்கை கொள் - இருள் அகற்றும் தொழில் செய்யும் சூரியனும் மயங்கும்படி, ஞாலமும் ககனம் மற்றும் மா இருள் உருவங்கொண்டு – பூமி ஆகாயம் எங்கும் பெரிய இருள் வடிவு கொண்டு, மறைந்து நின்று – அதனுள் மறைந்து நின்று, ஆர்க்கலுற்றான் - ஆர்ப்பரவஞ் செய்தான்.

பொழிப்புரை : அங்ஙனம் துணிந்த சூரபன்மன், மறுபடியும் தீமை மிக்க ஒரு மாய மந்திரத்தை உச்சரித்துச் சூரியனும் மயங்கும்படி, பூமி ஆகாயம் எங்கும் பெரிய இருள் வடிவு கொண்டு, அதனுள் மறைந்து நின்று ஆர்ப்பரவம் செய்தான்.

16. ஏயென முருகன் தொட்ட இருதலை படைத்த ஞாங்கர்
ஆயிர கோடி என்னும் அருக்கரில் திகழ்ந்து தோன்றித்
தீயழற் சிகழி கான்று சென்றிட அவுணன் கொண்ட
மாயிருள் உருவ முற்றும் வல்விரைந் தகன்ற தன்றே

பதவுரை : ஏயென முருகன் தொட்ட – மிக விரைவாக முருகப்பெருமானால் எய்யப்பட்ட, இருதலைபடைத்த ஞாங்கர் - இருமருங்கும் அலகுகளைக் கொண்ட வேலானது, ஆயிரகோடி என்னும் அருக்கரில் திகழ்ந்து தோன்றி – ஆயிரம்கோடி பிரகாசத்தையுடையதாகத் தோன்றி, தீ அழல் சிகழி கான்று சென்றிட – சுடுகின்ற அக்னிச் சுவாலையை யாண்டும் வீசிக்கொண்டு செல்ல, அவுணன் கொண்ட மா இருள் உருவம் முற்றும் - சூரபன்மன் கொண்டிருந்த மாய இருள் வடிவம் அனைத்தும், வல்விரைந்து அகன்றது – மிக்க விரைவாக நீங்கிற்று.

பொழிப்புரை : முருகப்பெருமான் விரைவாக விட்ட வேல் ஆயிரம் கோடி சூரியப்பிரகாசத்தோடு தோன்றி, யாண்டும் தீச்சுவாலையை வீசிச்செல்ல, சூரபன்மன் கொண்ட இருள் வடிவம் அனைத்தும் நீங்கிற்று.

17. அத்தியின் அரசு பேர ஆலமும் தெரிக்கில் ஏங்க
மெய்த்திறல் வாகை வன்னி மெலிவுற வீரை யாவுந்
தத்தம திருப்பை நீங்கத் தாதவிழ் நீபத் தாரோன்
உய்த்திடு தனிவேல் முன்னர் ஒருதனி மாவாய் நின்றான்.

பதவுரை : அத்தியின் அரசு பேர – மழையரசனாகிய வருணன் தன்னிலை நீங்கவும், ஆலமும் தெரிக்கில் ஏங்க – ஆலகால விஷம் மாறுபட்டெழுந்தால் ஏங்கத் தக்கதாகவும், மெய்த்திறல் வாகை வன்னி மெலிவுற – எதையும் எரிக்கும் இயல்புடைய அக்கினி மெலியவும், வீரையாவும் தத்தமது இருப்பை

நீங்க – சமுத்திரங்கள் யாவும் தத்தமது நிலையிலிருந்து மாறவும், தாது அவிழ் நீபத் தாரோன் உய்த்திடு தனிவேல் முன்னர் - இதழ் விரிந்து மலர்ந்த கடம்பமாலையை அணிந்த முருகப்பெருமான் எய்த வேற்படைக்கு எதிராக, ஒருதனி மாவாய் நின்றான் - இணையற்ற பெரிய மாய மாமர வடிவத்தில் நின்றான்.

பொழிப்புரை : வருணன் நிலை மாறவும், நஞ்சு தானும் அச்சமுறவும், அக்னி மெலியவும், சமுத்திரங்கள் எல்லாம் தத்தமது நிலைமாறவும், முருகப்பெருமான் விட்ட வேற்படைக்கு எதிரே மாய மாமர வடிவமாய் சூரபன்மன் நின்றான்.

18. செங்கதிர் அயில்வாள் கொண்டு செருமுயன் றுரமின் ஆர்த்துத்
துங்கமொ டெதிர்ந்து சீறுஞ் சூருரங் கிழித்துப் பின்னும்
அங்கம திருகூ றாக்கி அலைகடல் வரைப்பில் வீட்டி
எங்கணும் மறைகள் ஆர்ப்ப எ.்.கம்வான் போயிற் றம்மா.

பதவுரை : செங்கதிர் அயில்வாள் கொண்டு – செவ்வொளி மிக்க கூரிய வாட்படையைக் கொண்டு, செரு முயன்று – போர்த்தொழில் முயன்று உருமின் ஆர்த்தி - இடியேறு போல ஆர்ப்பரித்து, துங்கமொடு எதிர்த்து சீறும் - பெருமையோடு எதிர்ந்து கோபித்து, சூர் உரம் கிழித்து – சூரபன்மனது மார்பைப் பிளந்து, பின்னும் அங்கம் அது இரு கூறாக்கி – பின்னிக்கொண்டிருந்த அவ்வுடலை இரண்டாகச் செய்து, அலைகடல் வரைப்பில் வீட்டி – அலைகள் மிக்க கடலிலே எறிந்துவிட்டு, எங்கணும் மறைகள் ஆர்ப்ப – எல்லா இடத்திலும் வேதங்கள் முழங்க, எ.்.கம் - வேற்படையானது, வான் போயிற்று – ஆகாய மார்க்கமாகப் பாய்ந்து போனது.

பொழிப்புரை :

கூரிய வாட்படை கொண்டு போர்த்தொழில் செய்து இடிபோலார்த்து எதிர்த்து நின்ற சூரபன்மனது மார்பை வேலாயுதமானது பிளந்து பின்னியிருந்த சூரன், பதுமன் என்பவரது இரு உடலையும் வேறுபடுத்திக் கடலில் எறிந்து விட்டு, எங்கும் வேதம் முழங்க வேலானது வான் வழியாகச் சென்றது.

19. மருள்கெழு புள்ளே போல வந்திடு சூர எந்தை
அருள்கெழு நாட்டஞ் சேர்த்த ஆங்கவன் இகலை நீங்கித்
தெருள்கழு மனத்த னாகி நின்றனன் சிறந்தார் நோக்கால்
இருள்கெழு கரும்பொன் செம்பொன் னாகிய இயற்கை யேபோல்.

பதவுரை : மருள்கெழு புள்ளே போல வந்திடு சூரன் - மயக்க உணர்வுடைய பட்சி வடிவுற்று வந்த சூரபன்மன், எந்தை அருள்கெழு நாட்டம் சேர்த்த – எம் நாயகனாம் முருகப்பெருமான் தமது திருவருட் பார்வையை நல்க, ஆங்கவன் இகலை நீங்கி – அச்சூரபன்மன் தனது பகைமை விட்டு, தெருள்கெழு மனத்தன் ஆகி நின்றனன்- தெளிந்த மனத்தினன் ஆகி நின்றான், சிறந்தார் நோக்கால் - சிறந்த சித்தர்களின் தரிசன வேதிகளின் பார்வையால், இருள்கெழு கரும்பொன் - கரிய இரும்பு என்னும் உலோகம், செம்பொன் ஆகிய இயற்கையேபோல் - சிவந்த மாற்றுயர்ந்த பொன்னாய் மாறிய தன்மையைப் போலும்.

பொழிப்புரை : மயக்க உணர்வுடைய பட்சி வடிவுற்று வந்த சூரபன்மன் முருகப் பெருமானது அருட்பார்வையில் பட்டு பகை தீர்ந்து தெளிவுற்று நின்றான். அது தரிசன வேதிகளின் பார்வையிற் பட்டு இரும்பு பொன்னானது போலிருந்தது.

20. தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவர் என்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமர் இந்நாட் செய்த
மாயையின் மகனும் அன்றோ வரம்பிலா வருள்பெற் றுய்ந்தான்.

பதவுரை : தீயவை புரிந்தாரேனும் - பெரிய பாவங்களைச் செய்தாரேனும், குமரவேள் திருமுன் உற்றால் - முருகப்பெருமானின் திருச்சந்நிதியில் சேர்வராயின், தூயவர் ஆகி – பாவநாசம் பெற்ற பரிசுத்தராய், மேலைத் தொல் கதி அடைவர் என்கை – மேன்மையான முத்திப்பேற்றை அடைவர் என்று சொல்வது, ஆயவும் வேண்டும் கொல்லோ – ஆராய்ந்து பார்க்கவும் வேண்டுமோ, அடுசமர்-கொடிய போர்த்தொழிலை, இந்நாள் செய்த மாயையின் மகனும் அன்றோ - இந்நாட்களில் செய்த தீய மாயவள் மைந்தனாம் சூரபன்மனும் அல்லவா, வரம்பு இலா அருள் பெற்று உய்ந்தான் - எல்லையில்லா திருவருளைப் பெற்று உய்வடைந்தான்.

**பொழிப்புரை :** பெரிய பாவிகள் எனினும் முருகப்பெருமானின் திருச்சந்நிதியை அடைந்தால் பாவ நீக்கம் பெற்று வீடுபேறு எய்துவர் என்பது ஆராய வேண்டியதொன்றல்ல. ஏனெனில், பெரிய தீச்செயலான போர்த்தொழிலை இந்நாட்களில் செய்த சூரபன்மனும் அல்லவா அப்பெருமானது திருவருட் பேறெய்தி உய்வடைந்தான்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. கந்தபுராணத்தில் உள்ள காண்டங்களின் எண்ணிக்கை யாது, திருப்பெருவடிவம் எக்காண்டத்தில் இடம்பெறுகிறது?
2. கந்தபுராணத்தில் மும்மலங்களால் குறிக்கப்படுபவர்கள் யாவர்?
3. முருகப்பெருமானது திருப்பெருவடிவத்தைக் கண்ட சூரபன்மன் எவ்வாறு வியந்து கூறுகிறான்?
4. சூரபன்மன் முருகப் பெருமானோடு மீண்டும் யுத்தம் புரிவதற்கான காரணம் யாது?
5. கந்த புராணத்தின் மூலம் உணர்த்தப்படும் தத்துவக்கருத்து யாது?

## செயற்பாடு

01) கந்த புராணத்தின் ஏனைய காண்டங்களில் காணப்படும் புராணக் கதைகளை அறிந்து கொள்ளுங்கள்.

02) உங்கள் பிரதேசத்தில் உள்ள முருகன் ஆலயமொன்றில் நடைபெறும் சூரன் போர் விழாவைப் பார்த்து சூரன் போர் பற்றிய விவரணமொன்றை எழுதுங்கள்.

## பாடச்சுருக்கம்

- வடமொழியில் அமைந்த ஸ்கந்த புராணத்தின் சிவரகசிய காண்டத்தையே தமிழில் கச்சியப்ப சிவாச்சாரியார் கந்த புராணமாகப் பாடினார்.
- இது முருகப்பெருமானின் தோற்றம், சூரசம்ஹாரம், வள்ளி திருமணம் போன்றவற்றைக் கூறுகிறது.
- திருப்பெருவடிவம் கந்தபுராணத்தின் யுத்தகாண்டத்தில் இடம் பெறுகிறது.
- பாலன் என்று எண்ணி இருந்த முருகப்பெருமானது திருப்பெருவடிவத்தைக் கண்ட சூரபத்மன் பலவாறு மெய் சிலிர்த்து வியந்து இருக்கின்றான்.
- சூரபத்மன் தனது ஆணவ மிகுதியால் மீண்டும் முருகப் பெருமானோடு யுத்தம் புரிகின்றான்.
- முருகப் பெருமானது வேலாயுதம் சூரபத்மனுடைய மார்பை இரு கூறாகப் பிளந்து கடலில் வீசுகின்றது.
- இந்நூலில் பதியின் இயல்பு, ஆன்ம இயல்பு, மும்மலம் போன்ற சித்தாந்தக் கருத்துக்கள் கூறப்படுகின்றன.

# 11 தலயாத்திரை

நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் இறைவன் ஆன்மாக்களுக்கு, அருள்பாலிக்கும் பொருட்டு ஆலயங்களில் எழுந்தருளியுள்ளான். அதனால்தான் ஆலயங்களும் ஆலயச் சூழல்களும் புனிதமான இடங்களாகக் கருதப்படுகின்றன. அப்புனித இடங்களுக்குத் தலயாத்திரைகள் மேற்கொள்வதன் மூலம் இறை உணர்வும் இறை பக்தியும் ஏற்பட்டு இறுதியில் ஆன்மா விடுதலை அடைய முடியும் என்பது சைவர்களின் நம்பிக்கையாகும். வாழ்த்துவதற்கு வாயையும், நினைப்பதற்கு நெஞ்சையும், வணங்குவதற்குத் தலையையும் தந்த தலைவனாகிய இறைவனை இவ்வுலகில் பிறந்த ஒவ்வொருவரும் பூவும் நீருங்கொண்டு வணங்குதல் வேண்டும் எனக் கூறிய திருநாவுக்கரசு நாயனார், கால்களின் பயன் பற்றி,

**கால்களாற் பயன்என் -கறைக்**
**கண்டன் உறை கோயில்**
**கோலக் கோபுரக் கோகரணம் சூழாக்**
**கால்களாற் பயன் என்**

என்று தனது பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலம் ஆலய தரிசனச் சிறப்பினையும் வழிபாட்டின் முக்கியத்துவத்தினையும் உணரமுடிகிறது.

சங்க காலத்தில் வளமுடைய புரவலர்கள், வள்ளல்கள், மன்னர்கள் போன்றவர்களைப் புலவர்கள் நாடிச்சென்று, அவர்களைப் போற்றிப் பாடிப் பரிசில் பெற்றனர். இதன் அடிப்படையிலேயே ஆற்றுப்படை நூல்கள் தோற்றம் பெற்றன. அவற்றில் **திருமுருகாற்றுப்படை** நூல் முருகனிடம் ஆற்றுப்படுத்துவதாகப் பாடப்பட்டுள்ளது. காலப்போக்கில் இறைவன் உறையும் தலங்களுக்குச் சென்று தங்கள் குறைகளைப் போக்கிக் கொள்ளமுயன்றனர்.

இறையனுபூதி பெற்ற அருளாளர்கள் தலயாத்திரை சென்று பாடல்களைப் பாடி மகிழ்ந்தனர். குறிப்பாக திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் முதலிய சைவ சமய குரவர்கள் பாடி மகிழ்ந்த திருத்தலங்களைத் **திருமுறைத் திருத்தலங்கள்** என்றும் ஆழ்வார்கள் போற்றிப் பாடிய திருத்தலங்களை **மங்களாசனம்** செய்யப் பெற்ற திருத்தலங்கள் என்றும் கூறுவர். இவர்களால் பாடப் பெற்ற தோத்திரப்பாக்களும், பாசுரங்களும் திருக்கோயில்களை மையமாகக் கொண்டே எழுந்தன. பன்னிரு திருமுறைகள், நாலாயிரத் திவ்விய பிரபந்தம் போன்ற பனுவல்களிற் கூறப்படும்

திருத்தலங்களோடு புராண இதிகாச மாந்தர்கள் கொண்டுள்ள தொடர்பு பற்றிய செய்திகளுங் காணப்படுகின்றன. பிரம்மா, விஷ்ணு, திருமகள், உமை முதலிய தெய்வங்களும், இந்திரன், பிரகஸ்பதி, சந்திரன் முதலிய தேவர்களும், இராமன், இலக்குவன், அர்ச்சுனன் முதலிய காப்பிய நாயகர்களும், யானை, சிலந்தி, குரங்கு, ஜடாயு முதலிய ஐந்தறிவு உயிரினங்களும் வழிபட்டதாகப் பல திருத்தலங்கள் குறிப்பிடப்படுகின்றன. வரலாற்றுத் தொன்மையும், ஆன்மிகச் சிறப்பும் பெற்ற இத்தகைய திருத்தலங்களுக்குச் சென்று வழிபட்டால் பாவங்கள் நீங்கி புண்ணியங்கள் கிட்டும் என்பது சைவ மக்களின் நம்பிக்கையாகும்.

சைவ சமயத்தில் ஆன்மாக்கள் முத்திபெறக் காரணமான மூர்த்தி, தலம், தீர்த்தம் என்னும் மூன்றின் வடிவாக சிவன் விளங்குகிறான். அவற்றை முறையோடு வழிபடுவோர் உண்மை ஞானம் பெற்று முத்தி அடைவர் என்பதனை,

**மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க் கோர்**
**வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே!**

என்று தாயுமானவர் பாடுகின்றார். இவ்வகையில் பிறக்க முத்தி தருவது **திருவாரூர்த் தலம்** என்றும், இறக்க முத்தி தருவது **காசித் தலம்** என்றும், தரிசிக்க முத்தி தருவது **சிதம்பரத் தலம்** என்றும், நினைக்க முத்தி தருவது **திருவண்ணாமலைத் தலம்** என்றும் கூறப்படுகிறது. இந்நம்பிக்கையே சைவ மக்களிடையே தலயாத்திரை செய்வதற்குக் காரணமாக அமைந்தது.



காசி

இந்தியாவில் காசி, இராமேஸ்வரம். சிதம்பரம், மதுரை போன்ற திருத்தலங்கள், முருகனின் ஆறு படைவீடுகள், இலங்கையில் கதிர்காமம் மற்றும் பாடல் பெற்ற திருத்தலங்கள் மட்டுமல்ல வெவ்வேறு பிரதேசங்களில் உள்ள ஆலயங்களுக்கும் நாம் தலயாத்திரை செய்து இறை அருளைப் பெறலாம்.



கங்கை நதி

தலயாத்திரை மேற்கொள்ளும் போது உடல், உளத் தூய்மையுடன் செல்ல வேண்டும். யாத்திரை செல்லும் காலத்தில் இறை சிந்தனையுடன் இறை நாமங்களைப் பாடிக்கொண்டு யாத்திரையை மேற்கொள்வது சிறந்தது. ஆலயங்களைச் சென்று தரிசிப்பதன் மூலம் ஆலய வரலாறுகள், தலத்தின் மகிமை, ஆலயச் சூழல் ஆகியவற்றையும், அங்கு காணப்படும் சிற்ப, ஓவியங்கள் கூறும் புராணக் கதைகளையும், கலை நுட்பங்களையும் அறிய முடிகின்றது. தலயாத்திரையானது தனிமனித வழிபாடாக

# யாத்திரைத் தலங்கள்



அக்கினித் தீர்த்தமும் இராமேஸ்வர ஆலயமும்



சிதம்பரம் நடராஜர் ஆலயம்



மதுரை மீனாட்சி அம்மன் ஆலயம்



திருவாரூர் தியாகராஜ சுவாமிகள் ஆலயம்



திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர் ஆலயம்



கதிர்காமம்

மட்டுமன்றி அடியவர்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வதனால் சமூக ஒருமைப்பாடு, சமய கலாசார உணர்வுகள் என்பன வளர்கின்றன. பல்வேறு தலங்களைத் தரிசிப்பதன் மூலம் இறை பக்தியும் மன அமைதியும் சாந்தியும் உருவாகின்றது. இறுதியில் ஆன்மா ஈடேற்றம் அடைய வழிவகுக்கிறது.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. திருமுறைத் தலங்கள் என அழைக்கப்படுபவை எத்தகைய தலங்களாகும்?
2. தலயாத்திரையை எவ்வாறு மேற்கொள்ள வேண்டும்?
3. தலயாத்திரையை மேற்கொள்வதன் மூலம் ஏற்படும் நன்மைகள் நான்கு தருக.

### செயற்பாடு.

01. உமது பாட ஆசிரியரின் உதவியுடன் தலயாத்திரை மேற்கொண்டு அங்கு நீர் பெற்ற அனுபவங்களை எழுதிக் காட்சிப்படுத்துங்கள்.

02. பல தலங்களுக்குத் தலயாத்திரை செய்யும் போது மேற்கொள்ள வேண்டிய முன் ஆயத்தங்களைப் பட்டியற் படுத்துங்கள்.

### பாடச்சுருக்கம்.

- இறைவன் அருள் பாலிக்கும் இடம் ஆலயம்.
- நாயன்மார்கள் தலயாத்திரை செய்து தலங்களைப் போற்றிப்பாடியுள்ளனர்.
- தலயாத்திரையில் முத்தித் தலங்கள், பாடல்பெற்ற தலங்கள், ஆறுபடைவீடுகள் முக்கிய இடம் பெறுகின்றன.
- தலயாத்திரையை இறை சிந்தனையுடன் மேற்கொள்ள வேண்டும்.
- தலயாத்திரை செய்வதன் மூலம் சமய, சமூக, கலை, பண்பாடு, கலாசாரம் என்பன வளர்கின்றன.
- தலயாத்திரையானது மனதிற்கு அமைதியையும் சாந்தியையும் ஏற்படுத்துகின்றது.

# 12 சமயகுரவர் பணிகள்

## 1. திருஞானசம்பந்தர்

**புனலில் ஏடெதிர் செல்லெனச் செல்லுமே**
**புத்தனார் தலை தத்தெனத் தத்துமே**
**கனலின் ஏடிடப் பச்சென்றிருக்குமே**
**கதவுமாமறைக் காட்டில் அடைக்குமே**
**பனையில் ஆண்பனை பெண்பனை ஆக்குமே**
**பழைய என்பு பொற் பாவைய தாக்குமே**
**சினவராவிடம் தீரெனத் தீருமே**
**செய்ய சம்பந்தர் செந்தமிழ்ப் பாடலே.**

என்று திருஞானசம்பந்தரது அற்புதங்களைப் பழம் பாடல் ஒன்று கூறுகின்றது. கி.பி 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் ஞானசம்பந்தர் அக்காலச் சைவ சமய வளர்ச்சிக்குப் பெரிதும் பங்காற்றி உள்ளார்.

### அ. திருஞானசம்பந்தரது சைவசமயப்பணிகள்

பாண்டிய நாட்டின் அரசனாகிய கூன் பாண்டியன் சமண சமயத்தைத் தழுவினான். மக்களும் அவனைப் பின்பற்றிச் சமண சமயத்தைத் தழுவினர். அதனால் பாண்டிய மன்னனின் மனைவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சரான குலச்சிறையாரும் வருந்தினர். ஞானசம்பந்தருக்குத் தமது நிலையைத் தெரியப்படுத்தினர். எனவே அவர்கள் இருவரும் வரவேற்க ஞானசம்பந்தர் பாண்டிய நாட்டுக்கு வந்து திருமடத்தில் தங்கி இருந்தார். அவரது வருகையை அறிந்த சமணர்கள் மடத்துக்குத் தீ வைத்தனர். அத்தீயில் நின்றும் தப்பிய ஞானசம்பந்தர் அத்தகைய கொடியவர்கள் வாழும் நாட்டை ஆளும் வேந்தனின் குற்றம் தான் கொடியது எனக் கூறி **"செய்யனே திருஆலவாய் மேவிய ஐயனே ......"** என்ற பதிகத்தினைப் பாடினார். பாண்டிய அரசனுக்கு வெப்புநோய் ஏற்பட்டது. சமணர்கள் பாண்டியனின் வெப்புநோய் நீக்கப் பலவாறு முயன்று பயனின்றி நின்றனர். பாண்டிய மன்னன் தனது தவறை உணர்ந்தான். ஞானசம்பந்தர் **"மந்திரமாவது நீறு...."** என்ற பதிகத்தைப் பாடி மன்னனின் வெப்பு நோயை நீக்கினார். பாண்டிமாதேவியின் நற்பண்புகளைக் கண்டு வியந்த ஞானசம்பந்தர் **"மங்கையர்கரசி வளவர் கோன் பாவை...."** மற்றும் **"மானினேர்விழி மாதராய்..."** என்ற பதிகங்களைப் பாடி மங்கையர்க்கரசியாரின் பணிகளைப் போற்றினார். அவ்வாறு பாண்டிய மன்னன் மீண்டும் சைவ சமயத்தைத்

தழுவியமையால் பாண்டிய நாடு முழுவதும் மீண்டும் சைவசமயத்தைத் தழுவ திருஞானசம்பந்தரே வழிவகுத்தார்.

திருஞானசம்பந்தரது சமயப்பணிகளுள் முக்கியமானது சமணர்களை வாதில் வென்று சைவ சமயமே மேலானது என நிரூபித்தமையாகும். அவர் சமணர்களோடு அனல்வாதம் செய்யும் பொருட்டு **போகமார்த்த பூண்முலையாள்....** என்ற பதிகம் எழுதப்பட்ட ஏட்டைத் தீயில் இட்டு **தளிரிள வளரொளி....** எனும் பதிகத்தைப் பாடினார். அப்போது சமணர்களது ஏடு தீயில் எரிந்து சாம்பலாக இவரது ஏடு எரியாமல் காணப்பட்டது. அது கண்ட சமணர்கள் புனல்வாதத்திற்கு வருமாறு சம்பந்தரை அழைத்தனர். **வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்...** என்ற திருப்பாசுரம் எழுதிய ஏட்டை வைகை ஆற்றில் ஞானசம்பந்தர் விட்டார். ஏடு நீரில் எதிர்த்துச் சென்று கரை ஏறியது. சமணர்களது **அத்தி நாத்தி.....** எனும் வாசகமுடைய ஏடு நீரலைகளால் அடிக்கப்பட்டு சீர்குலைந்தது.

**“வேந்தனும் ஓங்குக...”** என்று எழுதியிருந்தமையின் காரணமாகவும், பாண்டிய மன்னனது முதுகுக் கூன் நிமிர்ந்தது. மன்னனது முதுகு கூன் நிமிர்ந்தது போன்று பாண்டிய நாட்டில் குன்றிய சைவம் ஞானசம்பந்தரது அத்தகைய பணிகள் மூலம் மீண்டும் தலைநிமிர்ந்தது.

ஆலய வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்த ஞானசம்பந்தர் ஆலயங்கள் தோறும் யாத்திரை மேற்கொண்டு அவ்வாலயங்களில் எழுந்தருளியிருக்கும் இறைவனதும் இறைவியினதும் சிறப்புக்களைத் தேவாரப் பதிகங்கள் மூலம் வெளிப்படுத்தினார். அதனால் ஆலயங்களுக்கு அடியவர்கள் செல்லத் தலைப்பட்டனர்.

வேதாரணியத்தில் மறைகளால் பூட்டப்பட்டு, அடியவர்கள் வழிபட முடியாதிருந்த ஆலயத்தின் கதவை நாவுக்கரசர் திறக்கும் படி பாட ஞானசம்பந்தர் **“சதுரம் மறை தான்துதி....”** என்ற பதிகம் பாடிக் கதவை மூட வழிவகுத்தார். அதன் மூலம் ஆலய வழிபாட்டின் முக்கியத்துவம் புலனாகின்றது. ஞானசம்பந்தர் சமணர்களை வாதில் வென்று சைவ சமய உண்மைகளை நிரூபித்தது போன்று பௌத்தர்களையும் வாதில் வென்று அவர்களைச் சைவர்களாக்கிச் சைவசமயத்தினை உயர்வடையச் செய்தார். ‘‘புத்தநந்தி’’ என்ற பௌத்த சமயத் தலைவனை **“புத்தர் சமண் கழுக்கையார்”** எனும் பதிகத்தை பாடி அவனை வாதில் வென்று அவனது தலையில் இடி விழுந்து இறந்த பின்னர் ‘‘சாரி புத்தன்’’ தலைமையில் மீண்டும் வாதிட வந்த பௌத்தர்களை வாதில் வென்று அவர்களைச் சைவர்களாக மாற்றினார்.

ஞானசம்பந்தர் பாடிய தேவாரங்களின் தொகை 14000 என நம்பியாண்டார் நம்பி கூறியுள்ளார். ஆயினும் நமக்குக் கிடைத்துள்ள தேவாரங்களின் எண்ணிக்கை 4145 ஆகும். இவற்றுள் முதலாம் திருமுறையில் 136 பதிகங்களும்,

இரண்டாம் திருமுறையில் 122 பதிகங்களும், மூன்றாம் திருமுறையில் 125 பதிகங்களுமாக மொத்தம் 383 பதிகங்கள் காணப்படுகின்றன.

### ஆ. திருஞானசம்பந்தரது சமூகப்பணிகள்

ஞானசம்பந்தர் சைவ சமயப் பணிகளை ஆற்றிச் சைவத்தினை உயர்வடையச் செய்தது போன்று சைவ சமய சமூகப் பணிகளை மேற்கொண்டு சைவ சமயத்தினை மேல்நிலைப்படுத்தியதாக அவரது வாழ்க்கை வரலாறு மூலம் அறிகின்றோம். சோழ நாட்டிலே **கொல்லி மழவன்** என்ற அரசனது மகள் வலிப்பு நோயினால் அவதியுற்ற போது **“துணிவளர் திங்கள்....”**என்ற பதிகத்தினைப் பாடி அவளது நோயைக் குணப்படுத்தினார். அது போல் ஞானசம்பந்தர் கொடிமாடச்செங்குன்றூருக்கு வருகை தந்த போது அங்கு பனியின் கொடுமையால் வருந்திக்கொண்டு இருந்த மக்களுக்காக இரங்கி **“அவ்வினைக்கு இவ்வினை...”** என்ற பதிகத்தினைப் பாடி இறை அருளால் அவர்களது துன்பத்தை நீக்கத் திருஞானசம்பந்தர் வழிவகுத்தார்.

திருமருகல் என்ற இடத்திற்கு வணிகனும் அவனது காதலியும் வரும்போது வணிகன் பாம்பினால் கடியுண்டு இறந்தான். தனது காதலனைப் பிரிந்து தனித்து நின்று வருந்துகின்ற காதலியின் புலம்பலைக் கண்டு ஞானசம்பந்தர் இரங்கினார். **“சடையாயெனுமால்.....”** எனும் பதிகத்தைப் பாடி வணிகனை உயிர்ப்பித்து அவர்களிருவருக்கும் திருமணம் நடக்க ஆசீர்வதித்தார்.


பூம்பாவையை உயிர்ப்பித்தல்

திருவீழிமிழலையில் மழையின்மையால் அவர்களது பஞ்சத்தைக் கண்டு மனம் வருந்திய ஞானசம்பந்தர் **“வாசி தீரவே காசு நல்குவீர்.....”** என்ற பதிகத்தினைப் பாடினார். இறைவனிடத்தில் பொற்காசு பெற்று மக்களது பசி தீர உணவு வழங்கினார். சிலநாட்களில் மழை பொழிய பஞ்சம் தீர்ந்தது.

அது போன்று திருவோத்தூரில் திருத்தொண்டர் என்னும் அடியார் நட்ட பனைகள் காய்க்காது காணப்பட்டன. அதுகண்ட சமணர்கள் **“ஆண்பனைகள் எங்கேனும் காய்ப்பதுண்டா...”** என ஏளனம் செய்தமையால் வருந்திய திருத்தொண்டரின் வேண்டுகோளுக்கு இணங்கி சம்பந்தர் **“பூத்தேர்ந்தாயன......”** எனத் தொடங்கும் பதிகத்தினைப் பாடி ஆண் பனைகளெல்லாம் பெண் பனைகளாக மாறிக் காய்த்துக் குலுங்க வழி செய்தார்.

திருமைலாப்பூருக்குச் சென்ற ஞானசம்பந்தர் அங்கு சிவநேசன் என்னும் அடியவர் ஒருவர் தனது மகளாகிய பூம்பாவை என்பவள் பாம்பு தீண்டி இறந்தமையால் மிகவும் வருந்தி நின்றார். அவரது துயரை நீக்கும் பொருட்டு பானையில் இடப்பட்ட பூம்பாவையின் எலும்புகளிலிருந்து அவளை உயிர்ப்பிக்க **"மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலை..."** என்ற பதிகத்தினைப் பாடினார். பூம்பாவை அழகிய பெண்ணாக உயிர் பெற்று எழுந்தாள்.

ஞானசம்பந்தரது சமூகப் பணிகளுள் பிரதானமானது அவர் தொண்டர் குலமே தொழுகுலம் என்பதற்கமைய அனைத்து அடியவர்களிடத்தும் அன்பு கொண்டு ஒழுகியமையே ஆகும். திருநீலநக்க நாயனார் எனும் அந்தணர் வீட்டில் ஞானசம்பந்தரும் பாணர் வகுப்பைச்சேர்ந்த திருநீலகண்டரும் அவரது மனைவி மதங்கசூளாமணியும் தங்கினர். சம்பந்தரது சமூகசமரச நோக்கும், பேதங்களெவையும் கொள்ளாத உளப்பாங்கும், பக்திலயிப்பினால் அனைவரும் சிவனடியார்களே என்னும் தெளிவும் சம்பந்தரது சமூக நோக்காக அமையப்பெற்றமை குறிப்பிடத்தக்கது.

## 2. திருநாவுக்கரசர்

**தலைகொள் நஞ்சமுதாக விளையுமே**
**தழல் கொள் நீறு தடாகம தாகுமே**
**கொலை செய் ஆனை குனிந்து பணியுமே**
**கோளராவின் கொடுவிடம் தீருமே**
**கலைகொள் வேத வனப்பதி தன்னிலே**
**கதவு தானுங் கடுகத் திறக்குமே**
**அலைகொள் வாரியில் கல்லும் மிதக்குமே**
**அப்பர் செப்பும் அருந்தமிழ்ப் பாடலே.**

என்று நாவுக்கரசரது அற்புதங்களை பழம் பாடல் ஒன்று கூறுகின்றது. ஞானசம்பந்தரது சம காலத்தில் வாழ்ந்தவராகக் கருதப்படும் நாவுக்கரசரும் சைவசமய வளர்ச்சிக்காக ஆற்றிய பலதரப்பட்ட பணிகள் சிறப்பானவை.

### அ. திருநாவுக்கரசரது சைவசமயப் பணிகள்

நாவுக்கரசரது சைவசமயப் பணிகளுள் முதன்மையானது ஆலய வழிபாட்டுக்கு முதன்மை அளித்தமையாகும். பழையாறையை அடுத்துள்ள வடதளி என்னும் இடத்தில் விளங்கிய சிவாலயத்தை சமணர்கள் சமணப்பள்ளியாக மாற்றியதோடு அங்குள்ள சிவலிங்கத்தையும் மறைத்து வைத்தனர். அதனை அறிந்த நாவுக்கரசர்

மனம் வருந்தி இறைவனைத் துதித்தார். இறைவன் சோழமன்னனது கனவிலே தோன்றித் தம்மை வெளிப்படுத்துமாறு கட்டளையிட்டார். மறுநாள் சோழ மன்னன் வடதளிக்குச் சென்று சமணப்பள்ளியாக மாற்றப்பட்ட ஆலயத்தைப் புனருத்தாரணம் செய்து மறைத்து வைத்திருந்த சிவலிங்கத்தையும் வெளிப்படுத்தி வழிபட வழிவகுத்தான்.

அதனைப் போன்று திருமறைக்காட்டில் மறைகளால் பூட்டப்பட்டிருந்த சிவாலயக் கதவினைத் திறந்து, அடியார்கள் வழிபாடு செய்வதற்கு வழிவகுத்தார். நாவுக்கரசர் ஆலய வழிபாட்டினை முதன்மைப்படுத்தியது போன்று ஆலயங்களைத் தூய்மையாகப் பேண வேண்டும் என்பதிலும் முன்மாதிரியாக வாழ்ந்து காட்டினார். கையில் **"உழவாரப்படை"**யை வைத்துக்கொண்டு, செல்கின்ற ஆலயங்களின் வீதிகளில் காணப்படும் புற்களை உழவாரத்தின் மூலம் செதுக்கி வீதிகளைத்தூய்மைப்படுத்தினார். திருச்சக்திமுற்றம், திருப்புகலூர் முதலான ஆலயங்களில் உழவாரப்பணி புரிந்தமையால் நாவுக்கரசரை **உழவாரப்படையாளி** என்றும் **தொண்டுக்கு அப்பர்** எனவுஞ் சிறப்பித்துக் கூறினர்.



**என் கடன் பணி செய்து கிடப்பதே, தன்கடன் அடியேனையுந் தாங்குதல்** எனக் கூறி ஆலயங்கள் தோறும் சரியைத் தொண்டாற்றிய நாவுக்கரசர் உலகப்பற்றற்ற நிலையில் நின்றே செயற்பட்டார். பூம்புகாரில் உழவாரத்தொண்டு செய்யும் பொழுது தன்முன்னே தென்பட்ட பொன்னையும் மணிகளையும் கற்களாக எண்ணி ஒதுக்கியதோடு, தன்முன்னே தோன்றி நடனமாடிய தேவலோக அரம்பையர்களது அழகில் மயங்காது உறுதியுடன் நின்று **"பொய்மாயப் பெருங்கடலிற் புலம்பா நின்ற ......."** என்ற பதிகத்தினைப் பாடினார். அவர்கள் அவரைத் தொழுது அகன்றனர்.

நாவுக்கரசரது தேவாரங்கள் **திருவிருத்தம், திருத்தாண்டகம்** ஆகிய பாடல் வகைகளைச் சேர்ந்தவையாகும். இவர் பாடிய தேவாரங்களில் 3066 பாடல்களே இன்று நமக்குக் கிடைத்துள்ளன. நான்காம் திருமுறையில் 113 பதிகங்களும், ஐந்தாம் திருமுறையில் 100 பதிகங்களும், ஆறாம் திருமுறையில் 99 பதிகங்களுமாக 312 பதிகங்களை இவர் அருளியுள்ளார். அத்தகைய அப்பரடிகளது தேவாரப் பாடல்களில் கழிவிரக்க உணர்வே அதிகமாகக் காணப்படுகின்றது.

## ஆ. திருநாவுக்கரசரின் சமூகப்பணிகள்.

திருநாவுக்கரசர் சைவசமய வளர்ச்சியின் பொருட்டு சமூகப்பணிகள் பல ஆற்றியதை அவர்தம் வரலாற்றினூடாக அறிய முடிகின்றது. திருவீழிமிழலையில் பசிப் பிணியால் வருந்திய மக்களுக்காக இறைவனிடம் படிக்காசு பெற்று அவர்களது பசிப்பிணியைப் போக்கினார்.

திங்களூரில் பாம்பினால் கடியுண்டு இறந்த அப்பூதியடிகளது மகனாகிய மூத்த திருநாவுக்கரசு என்னும் சிறுவனை **"ஒன்று கொலாமவர் சிந்தை...."** என்ற பதிகத்தினைப்பாடி உயிர்ப்பித்தார். அத்தோடு வாகீசர் அமுது செய்யாதிருந்ததைக் கண்டு அப்பூதியடிகள் தளர்வெய்தியதனால் அவரது மனத் தளர்ச்சியை நீக்கும் பொருட்டு **"சொன்மாலை"** எனத்தொடங்கும் பதிகத்தைப்பாடி அதில் **"அழலோம்பு மப்பூதி குஞ்சிப் பூவாய் நின்ற சேவடியாய்..."** என்று அப்பூதியடிகளையும் புகழ்ந்துள்ளார்.

## 3. சுந்தரமூர்த்தி நாயனார்

**மோகம் அறுத்திடின் நாம் முத்தி கொடுப்பதென**
**ஆகமங்கள் சொன்ன அவர்தம்மைத் - தோகையர்பால்**
**தூதாகப் போகவிடும் வன்தொண்டன் தொண்டுதனை**
**ஏதாகச் சொல்வே னியான்.**

என்று சுந்தரமூர்த்தி நாயனாரது செயற்கரிய செயல்களைச் சித்தாந்த சாத்திர நூல்களுள் ஒன்றான திருக்களிற்றுப்படியார் கூறுகின்றது. கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் வாழ்ந்தவராகக் கருதப்படும் சுந்தரமூர்த்தி நாயனார் சைவசமய வளர்ச்சிக்குப் பெரிதும் பங்காற்றியுள்ளார்.

### அ. சுந்தரமூர்த்தி நாயனாரது சைவசமயப் பணிகள்

ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் எங்ஙனம் இறைவனுக்கும் இறைவன் எழுந்தருளியுள்ள ஆலயங்களுக்கும் முக்கியத்துவம் அளித்தனரோ அது போன்று சுந்தரரும் அவற்றுக்கு முக்கியத்துவம் அளித்ததோடு அவர்களை விட ஒருபடி அப்பால் சென்று இறையடியார்களது வழிபாட்டிற்கும் முக்கியத்துவம் வழங்கினார்.

திருவாரூர் கோயிலுக்கு வந்த சுந்தரர் அங்கு கூடியிருந்த சிவனடியார்களை மதிக்காது சென்றபோது அவ்வடியார்களுள் விறன்மிண்ட நாயனார் சுந்தரரது செயல் கண்டு சினம் கொள்ள, சுந்தரர் தம் தவறை உணர்ந்து சிவனடியார்களைப் போற்றும் முகமாகத் "திருத்தொண்டத் தொகை" யைப் பாடினார்.

தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க்கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமாமிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில் சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்- கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

எனும் பாடல் திருத்தொண்டத் தொகையின் முதலாவது பாடலாகும். இறைவனே அந்தணர் வடிவில் வந்து **"தில்லைவாழ் அந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்..."** என மேற்படி அடியை எடுத்துக் கொடுத்ததாகக் கூறப்படுகிறது.

சைவ உலகில் அடியார்களை வணக்கத்திற்குரியவர்களாக ஆக்கிய சிறப்பில் திருத்தொண்டத் தொகைக்கு உயரிய பங்குண்டு. நம்பியாண்டார் நம்பி **திருத்தொண்டர் திருவந்தாதி** பாடுவதற்கும், சேக்கிழார் **பெரிய புராணம்** பாடுவதற்கும் பெருந்துணை புரிந்த நூல் திருத்தொண்டத் தொகையாகும்.

சுந்தரர் இறைவனைத் தோழராகக் கொண்டு தனது லௌகீக வாழ்வின் தேவைகளுக்கெல்லாம் இறைவனைத் துணைபோகக் கேட்டு யோக மார்க்கத்தில் வாழ்ந்து யோகநெறி தழைக்க வழிவகுத்தவராவார். சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய தேவாரங்களுள் நமக்குக் கிடைத்த தேவாரங்கள் 1026 ஆகும். அவை 100 பதிகங்களாக ஏழாம் திருமுறையில் காணப்படுகின்றன. சுந்தரரின் பாடல்கள் சொன்னயமும் பொருள் நயமும் மிக்கவை.

### ஆ. சுந்தரமூர்த்தி நாயனாரது சமூகப் பணிகள்

சுந்தரமூர்த்தி நாயனாரது சமயப் பணிகளைப் போன்று அவரது சமூகப்பணிகளும் சைவசமய வளர்ச்சிக்கு வலுவூட்டுவனவாக அமைந்திருந்தன. திருப்புக்கொளியூரில் மறையோர் வாழும் வீதி வழியாகச் சுந்தரர் சென்று கொண்டிருக்கையில் ஒரு வீட்டில் மங்கல ஒலியும் எதிர் வீட்டில் அழுகை ஒலியும் கேட்டன. அதைக் கேட்டு வியப்புற்ற சுந்தரர் அதற்கான காரணத்தை வினவ, "ஐந்து வயது நிரம்பிய இந்த இரண்டு வீட்டுப் பிள்ளைகளும் நீராடுவதற்காக குளத்திற்குச் சென்றனர். அவர்களுள் ஒருவனை முதலை விழுங்கிற்று. மற்றையவன் வீடு சேர்ந்தான். அவனுக்கு இன்று பூணூற் சடங்கு. எதிர்வீட்டில் முதலை விழுங்கிய தம் மகனை நினைத்து பெற்றோர் வருந்துகின்றனர்" என்றனர். சுந்தரர் குளக்கரைக்குச் சென்று திருப்புக்கொளியூர் அவிநாசிப் பெருமானை நினைந்து வணங்கி **"ஏற்றான் மறக்கேன்...."** என்ற

பதிகத்தைப் பாடினார். இறைவன் திருவருளால் முதலை அப்பிள்ளையைக் கரையிற் கொணர்ந்து உமிழ்ந்தது. பின்பு அப்பிள்ளைக்கு சுந்தரர் பூணூற் சடங்கு செய்வித்தார்.



## 4. மாணிக்கவாசக சுவாமிகள்

பெருகும் வையை தனை அழைப்பிக்குமே
பிரம்படிக்குப் பிரான் மேனி கன்றுமே
நரியெல்லாம் பரியாக நடத்துமே
நாடி மூகைதனைப் பேசுவிக்குமே
பரிவிற் பிட்டுக்கு மண் சுமப்பிக்குமே
பரமன் ஏடெழுதக் கோவை பாடுமே
வருகும் புத்தரை வாதில் வெல்லுமே
வாதவூரர் வழங்கிய பாடலே.

என்று மாணிக்கவாசகரது அற்புதங்களைப் பழம் பாடலொன்று கூறுகின்றது. மாணிக்கவாசகரது காலம் பற்றி ஆராய்ச்சியாளர்களுக்குக்கிடையே வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. ஆயினும் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலேயே மாணிக்கவாசகர் வாழ்ந்திருந்ததாகப் பெரும்பாலான அறிஞர்கள் கருதுகின்றனர்.

### அ. மாணிக்கவாசகரின் சைவசமயப் பணிகள்.

மாணிக்கவாசகரது சைவப்பணிகளுள் சிறப்பானது அவர் நமக்களித்த **திருவாசகமாகும்.** மாணிக்கவாசகரது பாடல்களை அந்தண வடிவில் வந்த சிவபெருமான் மாணிக்கவாசகர் கூற எழுதி அருளினார். அதாவது **“வாதவூரன் விளம்பிட அம்பலவன் எழுதியது”** என்று வரையப்பட்டும் **“அழகிய சிற்றம்பலமுடையான்”** என இறைவன் ஒப்பமிட்டும் திருவாசக ஏட்டினை நிறைவு செய்து இருந்தார்.

திருவாசகத்தில் **சிவபுராணம்** முதல் **அச்சோப்பதிகம்** ஈறான ஐம்பத்தொரு பதிகங்கள் அமைந்துள்ளன. இவற்றுள் **திருஅம்மானை, திருஉந்தியார், திருவெம்பாவை, திருச்சாழல், திருத்தெள்ளேணம், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொற்சுண்ணம், திருப்பொன்னூஞ்சல்** என்பன நாட்டுப்புறப் பெண்கள் பாடும் பாடல்கள் வடிவில் அமைக்கப்பட்டுள்ளன.

**"திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்துக்கும் உருகார்"** என்று போற்றத்தக்க அளவுக்கு திருவாசகப்பாடல்கள் எளிமை நயம் மிக்கவையாகக் காணப்படுகின்றன. இதேபோன்று இறைவனைத் தலைவனாகவும் தன்னைத் தலைவியாகவும் எண்ணி அன்பு கலந்துருகப் பாடிய பாடல்கள் **திருக்கோவையார்** ஆகும். இது தமிழிலுள்ள கோவை நூல்களுக்கெல்லாம் தலை சிறந்ததாகப் போற்றப்படுகின்றது. மாணிக்கவாசகர் பாடிய **திருவாசகம் 656** பாசுரங்களையும் **திருக்கோவையார் 400** பாசுரங்களையும் கொண்டு எட்டாம் திருமுறையாக அமைந்துள்ளன.

மாணிக்கவாசகர் தமது காலத்தில் ஏனைய சமயத்தவர்களை வாதில் வென்று சைவசமய உண்மைகளே மேலானவை என நிரூபித்துள்ளார். தில்லைக்கு வருகை தந்த பௌத்த மன்னனும் பௌத்த குருமாரும் புத்தசமயமே மேலானது என வாதிட்டனர். மாணிக்கவாசகர் சைவசமய உண்மைகளை எடுத்துக் கூறி அவர்களை மௌனிகளாக்கினார். பின்னர் தமது தவறுகளை உணர்ந்த பௌத்த குருமார்களும் பௌத்த மன்னனும் சைவ சமயத்தைத் தழுவினர்.

### ஆ. மாணிக்கவாசகரின் சமூகப்பணிகள்.

மாணிக்கவாசகர் இறைவனது திருவருளுடன் குறிப்பிடத்தக்க சமூகப்பணிகளை ஆற்றியதை அறியமுடிகின்றது. அரிமர்த்தன பாண்டியனது முதலமைச்சராக விளங்கிய போது திருப்பெருந்துறைக்கு குதிரைகள் வாங்குவதற்காகச் சென்ற வாதவூரர், மன்னன் தமக்களித்த பொற்காசுகளனை த்தையும் சமூக நன்நோக்கில் நின்று சிவனடியார்களது பசியைப் போக்க உணவு வழங்கியும், திருமடங்கள் அமைக்கவும் செலவிட்டார். தில்லையில் சைவசமய உண்மைகள் சார்பாக வாதிடவந்த பௌத்த மன்னன் மகளின் ஊமைத் தன்மையை இறை திருவருளினால் நீக்கி அவளைப் பேசச்செய்தமை இவரது சமூகப்பணிக்குச் சான்றாகும்.



## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. பாண்டிய நாட்டில் சைவசமயம் மீண்டும் வளருவதற்குக் காரணமாக அமைந்தவர்கள் யாவர்?
2. நமக்குக் கிடைத்துள்ள ஞானசம்பந்தரது தேவாரங்களின் எண்ணிக்கை யாது?
3. ஞானசம்பந்தரும் நாவுக்கரசரும் இணைந்து ஆற்றிய சமயப்பணிகள் யாவை?
4. நாவுக்கரசரது பாடல்கள் எவ்வகையைச் சேர்ந்தன?
5. இறைவன் அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தரமூர்த்தி நாயனாராற் பாடப்பெற்ற நூல் எது?
6. சுந்தரமூர்த்தி நாயனாரது சமூகப்பணிகள் யாவை?
7. திருவாசகத்தின் முதல் பகுதியையும் இறுதிப் பகுதியையும் குறிப்பிடுக.
8. மாணிக்கவாசகர் சிவபெருமானைத் தலைவராகவும் தம்மைத் தலைவியாகவும் கொண்டு பாடிய பாடல்கள் எவ்வாறு அழைக்கப்படும்?

## செயற்பாடு.

01) சமயகுரவர் நால்வரதும் சமய, சமூகப்பணிகளை தனித்தனியாக அட்டவணை ஒன்றில் பூர்த்தி செய்து வகுப்பறையில் காட்சிப்படுத்துங்கள்.

## பாடச் சுருக்கம்.

- சமயகுரவர் நால்வரும் இறையருளுடன் சமய, சமூகப் பணிகளை ஆற்றினர்.
- அவர்களது இப்பணிகள் மூலம் சைவசமயம் வளர்ச்சியுற்றது.
- சமயகுரவர்கள் அருளிய திருமுறைப்பாடல்கள் இறை பக்தியை மெருகூட்டவல்லன.
- நாமும் சமயகுரவர்களது பணிகளைக் கற்று, அவற்றுக்கு மதிப்பளித்து எமது பிரதேசங்களிலும் அவை போன்ற பணிகளுக்கு முதன்மையளிப்போம்.

# 13 சந்தான குரவர் பணிகள்

அன்பு, பக்தி நெறியை எவ்வாறு நாயன்மார்கள் வளர்த்தார்களோ அது போன்று அறிவு நெறியை வளர்த்தவர்கள் சந்தான குரவர்கள் ஆவர். சந்தான குரவர்களது வரலாற்றை தரம் பத்தில் கற்றுள்ளோம். சைவநெறியின் வளர்ச்சிக்கு சந்தான குரவர்கள் ஆற்றிய பணிகளை நோக்குவோம்.

## அ. மெய்கண்ட தேவர்




திருக்கைலாய ஞான பரம்பரையில் வந்த புறச் சந்தான குரவர்களுள் முதல்வராக மெய்கண்ட தேவர் காணப்படுகின்றார். அவர் 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராவார். மெய்கண்ட தேவர் ஆற்றிய சைவசமயப் பணிகளுக்கெல்லாம் தலையாயது சைவ சித்தாந்தம் சார்பான முப்பொருளுண்மையை முதன்முதல் நிறுவியமையாகும். வடமொழி நூல்களான வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள் ஆகியவற்றிலும் திருமந்திரம், தேவாரம், திருவாசகம் ஆகிய நூல்களிலும் தொன்று தொட்டு வலியுறுத்தப்பட்டு வந்த முப்பொருளாகிய இறைவன், உயிர், உலகு என்பவற்றுக்குக் கோட்பாட்டு ரீதியிலான விளக்கத்தினை அளித்தவர் மெய்கண்ட தேவர் ஆவார்.

மெய்கண்ட தேவர் தாம் கண்ட சித்தாந்த உண்மைகளை **"சிவஞான போதம்"** என்னும் நூல் ஊடாக வெளிப்படுத்தியுள்ளார். இந்நூல் சித்தாந்த சாத்திர நூல்கள் பதின்நான்கிற்கும் மணிமுடியாய் திகழ்கிறது. அத்தோடு சிவஞான போதம் பிரமாணஇயல், இலக்கணஇயல், சாதனஇயல், பயன் இயல் என நான்காக வகுக்கப்பட்டு ஒவ்வோர் இயலும் மும்மூன்று சூத்திரங்களைக் கொண்டு காணப்படுகின்றது.

சிவஞான போதத்தின் பன்னிரண்டு சூத்திரங்களும் உயிர் பற்றிய விளக்கம், உயிர்கள் தம் கரும வினைக்கு ஏற்ப அமையும் நிலை, உடம்பிலிருந்து உயிர் வேறுபடும் பாங்கு, ஆணவத்தால் உயிர் பீடிக்கப்பட்டுள்ள பாங்கு, ஆன்மா தானாக அறியாது, இறைவனின் உயர்ந்த நிலை, ஆன்மா முத்தி

நிலைபெறும் வழி, அறிவினால் மாத்திரம் இறைவனை அடைதல், புலன்களின் வழியன்றி ஞானவழியில் இறைவனைக் காணுதல், பரிபக்குவ நிலை எய்தும் போது இறைவன் ஆட்கொள்ள வருதல், எல்லாம் இறைவன் செயல் என எண்ணும் நிலை, இறைவன் திருவருள் கூடினால் ஒரு தீங்குமில்லை, இறை இன்பம் பெற்ற ஆன்மா திரும்பவும் இறையின்பத்தையே நாடுதல் என தத்துவ விசாரணைகளை விபரிக்கின்றன.

மெய்கண்டதேவர் சைவசித்தாந்த தத்துவங்களை நிறுவியதோடு மாத்திரமல்லாது வேதாந்தம் முதலிய தத்துவங்களின் தத்துவ விசாரணைகளில் நின்று சைவ மெய்யியலைக் காப்பாற்றினார். உபநிடத மகா வாக்கியங்களுக்கு சங்கரர் அத்வைத வேதாந்தக் கருத்துகளை முன்வைத்தது போன்று மெய்கண்ட தேவர் முன்வைத்த தத்துவக்கருத்துகள் "**சுத்தாத்துவித சைவசித்தாந்தம்**" என அழைக்கப்படுகின்றது.

மெய்கண்டதேவரது சைவப்பணிகளுள் அடுத்து முக்கியத்துவம் பெறுவது தனக்கென்ற ஓர் சீடர் பரம்பரையை உருவாக்கியமையாகும். அவரிடம் நாற்பத்தொன்பது சீடர்கள் சைவசித்தாந்தக் கருத்துக்களைக் கற்றுத் தெளிவுற்றனர். அவர்களுள் **அருணந்திசிவாச்சாரியார்** முதன்மையானவர். சிவஞான போத நூலுக்கு விளக்க நூலொன்றை எழுதுமாறு மெய்கண்ட தேவர் வேண்டிக்கொண்டார். அத்தோடு திருக்கைலாய ஞானபரம்பரையினரது பணிகளைத் தொடரவும் அருணந்திசிவாச்சாரியாரிடம் வேண்டிக் கொண்டார்.

## ஆ. அருணந்தி சிவாச்சாரியார்


அருணந்தி சிவாச்சாரியார்

புறச்சந்தான குரவர்களில் மெய்கண்டாரை அடுத்து முக்கியத்துவம் பெறுபவர் அருணந்தி சிவாச்சாரியார். இவர் மெய்கண்டதேவரது சம காலத்தவர். மெய்கண்டதேவரைப் போன்று சைவ சமய வளர்ச்சியின் பொருட்டு பல பணிகளை அருணந்திசிவாச்சாரியார் ஆற்றியுள்ளார்.

மெய்கண்டதேவரது தந்தையாகிய **அச்சுதகளப்பாளரின்** குருவாக விளங்கிய அருணந்திசிவாச்சாரியார் தனது சீடனின் மகனாகிய மெய்கண்டதேவரிடம் ஞான உபதேசம் பெற்றார். வயதில் முதுமை பெற்ற திருநாவுக்கரசர் எவ்வாறு ஞானசம்பந்தரை வணங்கிச் சேவை செய்தாரோ அதே போல் வயதில் முதியவராகிய அருணந்தி சிவாச்சாரியார், தம்மிலும் வயதில் குறைந்த மெய்கண்டதேவரைக் குருவாகக் கொண்டார். மெய்கண்ட தேவர் தமக்கு உபதேசித்த சிவஞானபோதத்தை மறவாத அருணந்தி

சிவாச்சாரியார் **"மெய்கண்டான் நூல் சென்னியிற் கொண்டு சைவத்திறமை தெரிகல் உற்றோம்"** எனவும் **"எமக்குருநாதன்.... தீதகல எமக்களித்த ஞான நூலைத் தேர்ந்துரைப்பேன் சிவஞான சித்தி"** எனவும் கூறியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

அருணந்தி சிவாச்சாரியாரது பணிகளில் அடுத்து முக்கியத்துவம் பெறுவது, சைவ சித்தாந்த தத்துவங்களை ஏனைய புறச்சமயங்களின் தத்துவங்களோடு ஒப்பிட்டு மேலானது என நிறுவியமையாகும். அகச்சமயங்கள், அகப்புறச்சமயங்கள், புறச்சமயங்கள், புறப்புறச்சமயங்கள் என்ற சமயப்பிரிவுகளின் தத்துவங்களோடு வாதிட்டு சித்தாந்த சைவமே மேலானது என நிரூபித்தார்.

மெய்கண்ட தேவரது வேண்டுதலுக்கு அமைய அவரது சிவஞானபோத நூலுக்கு விளக்கம் கூறும் முகமாக **"சிவஞான சித்தியார்"** என்ற வழிநூலை அருணந்தி சிவாச்சாரியார் உருவாக்கினார். இந்நூல் பதினான்கு சித்தாந்த சாத்திர நூல்களுக்குள் விரிவானது. 301 விருத்தப்பாக்களைக் கொண்டதோடு பரபக்கம், சுபக்கம் என்னும் இரண்டு பிரிவுகளை உடையது. இவற்றுள் பரபக்கம் என்பது உலகாயதம், சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்தியமிகம், வைபாடிகம், நிகண்டவாதம், ஆசீவகம், பட்டாசரியம், பிரபாகரம், சத்தப்பிரமவாதம், மாயாவாதம், பாற்கரியம், நிடிச்சுரசாங்கியம், பாஞ்சராத்திரம் ஆகிய சமய வாதிகளது கொள்கைகளை எடுத்துக்கூறி அவற்றை அளவை முறையினால் மறுப்பது ஆகும். சுபக்கம் என்பது சாத்திர நூல்களுக்குரிய அளவை கூறிய பின் முப்பொருள்களின் உண்மை அவற்றின் பொதுவியல்பு, சிறப்பியல்பு, பாசத்தினின்றும் நீங்கி கடவுளை அடைவதற்கான வழிகள், கடவுளை அடைந்தோர் தன்மை ஆகிய பொருள்களை விபரித்துக் கூறுவதாகும்.

அருணந்தி சிவாச்சாரியாரின் சிவஞானபோத நூலை அறிஞர்கள் பலவாறு போற்றியுள்ளனர். **"சிவத்தின் மேல் தெய்வமில்லை, சிவஞான சித்திக்கு மேல் ஒரு சாத்திரமில்லை"** என்றும் **"பார் விரிந்த நூலெல்லாம் பார்த்தறியச் சித்தியிலே ஒரு விருத்தப் பாதி போதும்"** என்பன அவையாகும்.

சைவ சித்தாந்த சாத்திர விருத்திக்கு அருணந்தி சிவாச்சாரியார் ஆற்றிய பணிகளுள் மற்றொன்று **"இருபா இருப.்.து"** எனும் சாத்திர நூலை உருவாக்கியமையாகும். இதில் அருணந்தி சிவாச்சாரியார் தமது குருவாகிய மெய்கண்ட தேவரை முன்னிலைப்படுத்தி அவரை நோக்கி, தாம் வினாக்களை வினாவுவதாகவும், அதற்கு மெய்கண்ட தேவர் விடையளிப்பது போலவும் சைவ சித்தாந்தக் கருத்துக்களை இருபது செய்யுட்கள் மூலம் விபரிக்கின்றார்.

அருணந்தி சிவாச்சாரியார் தனது சொத்துக்களைக் கூட சைவப்பணிக்காக தானமாக வழங்கியதை அறிய முடிகின்றது. தமிழகத்தின் திருத்துறையிலுள்ள அவரது நிலங்களை சைவ மெய்யியல் வளர்ச்சியின் பொருட்டு நன்கொடையாக வழங்கினார். இன்று அந்த நிலத்தை திருக்கைலாய ஞான பரம்பரையினரால்

உருவாக்கப்பட்ட திருவாவடுதுறை ஆதீனம் பொறுப்பேற்று ஆண்டு தோறும் அவரது குருபூசை விழாவை நடாத்துகின்றது.

### இ. மறைஞானசம்பந்தர்




சந்தானகுரவர் மரபில் அருணந்தி சிவாச்சாரியாரின் சீடராக விளங்குபவர் மறைஞான சம்பந்தர். மெய்கண்டாரைப் போன்று பக்குவ நிலையை எய்திய மறைஞானசம்பந்தர் சைவ சித்தாந்த வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்துள்ளார்.

மறைஞான சம்பந்தரது சைவப்பணிகளுள் பிரதானமானது சைவசித்தாந்த தத்துவ உண்மைகளை எளிமையான வடிவில் போதித்தமையாகும். தனக்கு முன்னர் வாழ்ந்த மெய்கண்டதேவர், அருணந்திசிவாச்சாரியார் என்போர் அருளிய சித்தாந்த நூல்களாகிய சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருப∴து ஆகிய நூல்களைக் கற்று அவை கூறும் சித்தாந்த உண்மைகளை தம் மாணாக்கருக்குக் கற்பித்தார்.

மறைஞான சம்பந்தர் சிதம்பரத்திற்கு அண்மையிலுள்ள **திருக்காளாஞ்சேரியில்** இருந்து சைவ சித்தாந்த உண்மைகளை மாணவர்களுக்குப் போதித்துக் கொண்டு இருந்தார். அப்போது உமாபதி சிவம் சோழமன்னர் தமக்களித்த பல்லக்கிலேறி பகற்பொழுதில் தீவர்த்தி, ஆலவட்டம், குடை, சாமரை முதலான பரிசனங்கள் புடைசூழப் பெரிய ஊர்வலமாக சென்றுகொண்டு இருந்தார். அப்போது மறைஞானசம்பந்தரிடம் கற்றுக்கொண்டிருந்த மாணவனொருவன் அவ் ஊர்வலத்தைத் திரும்பிப் பார்த்தான், பராக்குப் பார்த்த மாணவனை பாடத்தில் ஈடுபடுத்துவதற்காக மறைஞான சம்பந்தர் **"பட்ட கட்டையிற் பகற்குருடு போகிறது"** என்று குறிப்பிட்டார். பட்ட கட்டை என்பது காய்ந்த மரத்திலான பல்லக்கினையும், பகற்குருடு என்பது நண்பகலில் தீவர்த்தியுடன் நடுத் தெருவில் உமாபதிசிவம் சென்றமையையும் குறிக்கின்றது.

அச் சம்பவத்தின் மூலம் மறைஞானசம்பந்தர் மூன்று சிந்தனைகளை மாணவர்களுக்கு முன் வைத்தார்.

1. **ஆடம்பர வாழ்வு ஆன்மீக மேம்பாட்டுக்கு ஆகாது.**
2. **அகக்கண் திறந்தவரே கண்ணுடையார்; அல்லாதோர் 'பகற்குருடு' என மதிக்கப்பட வேண்டியவர்கள்.**
3. **என்றோ ஒரு நாள் இறப்பு எவருக்கும் நேரிடும்.**

மறைஞானசம்பந்தர் தனது சீடர்களின் பரிபக்குவ நிலையை உலகத்தவர்களுக்கு காண்பிப்பதற்காக பல சோதனைகளுக்குள் அவர்களை உட்படுத்தினார். உமாபதி சிவத்தை தனது சீடராக ஏற்றுக்கொள்ள முன் அவரது பரிபக்குவ நிலையை வெளிப்படுத்த மறைஞானசம்பந்தர் எண்ணினார். வீதி வழியே ஓடினார், ஓடியவரை உமாபதி சிவமும் பின் தொடர்ந்தார். மறைஞான சம்பந்தர் களைத்தவர் போல் அருகிலுள்ள நெசவாளர்களது சேரிக்குச் சென்று இரு கைகளையும் நீட்டினார். அப்பொழுது நெசவாளர் நெசவுக்காக காய்ச்சி வைத்திருந்த கஞ்சியை அவர் கையில் ஊற்றியதும் அவர் அதனை உண்டார். அவ்வாறு உண்டபோது அவரது முழங்கை வழியாக வழிந்த கஞ்சியை உமாபதிசிவம் ஏந்திப் பருகினார். உமாபதி சிவத்தின் பக்குவநிலையினை மெச்சிய மறைஞான சம்பந்தர் தனது தலைமைச் சீடராக ஏற்றுக்கொண்டு தனக்கு பின்னர் திருக்கைலாயஞான பரம்பரையைத் தொடர உமாபதி சிவாச்சாரியாருக்கு வழிகாட்டினார்.

மறைஞான சம்பந்தரது பெருமைகளையும், அவரது சைவ சித்தாந்தப் பணிகளையும், உமாபதி சிவாச்சாரியார் தனது நூல்கள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளார். சந்தான குரவர் நால்வருள் மறைஞானசம்பந்தர் மட்டுமே சித்தாந்த நூல்கள் எதுவும் எழுதவில்லை எனக் கூறப்படுகிறது. ஆயினும் அண்மைக் காலங்களில் அறிஞர்கள் பலரால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வு முடிவுகளின் படி மறைஞான சம்பந்தர் **"சதமணிக்கோவை"** என்ற பிரமாண நூலை எழுதியதாகவும் அது **"சித்தாந்தஞானபோதம்"** என அழைக்கப்பட்டதாகவும் கூறுவர். அத்தோடு தஞ்சை சரஸ்வதி மஹால் நூல் நிலையத்தில் காணப்படும் **"சகஸ்ர நாம பாஷ்யம்"** என்னும் உரை நூலையும் இவரே எழுதினார் என அறிஞர்கள் கருதுவர்.

## ஈ.உமாபதி சிவாச்சாரியார்


உமாபதி சிவாச்சாரியார்.

சந்தான குரவர் நால்வருள் இறுதியாக விளங்குபவர் உமாபதிசிவாச்சாரியார். அவர் மறைஞான சம்பந்தரது சமகாலத்தில் வாழ்ந்தவராவர். சைவ சமய வளர்ச்சிக்கு உமாபதிசிவாச்சாரியார் பல நிலைகளில் பணியாற்றியுள்ளார்.

வயதில் முதிர்ந்த அருணந்தி சிவாச்சாரியார் எவ்வாறு தம்மிலும் வயதிற் குறைந்த மெய்கண்டதேவரை தமது குருவாக ஏற்றாரோ அதுபோன்று வயதில் முதிர்ந்த உமாபதிசிவாச்சாரியார் வயதில் குறைந்த மறைஞானசம்பந்தரிடம் ஞான உபதேசம்

பெற்றார். மறைஞானசம்பந்தரால் பரிபக்குவ நிலையை அடைந்த உமாபதி சிவாச்சாரியார், மறைஞானசம்பந்தர் காட்டிய வழியில் நின்று சைவசித்தாந்த தத்துவ வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றினார்.

பதினான்கு மெய்கண்ட சாத்திர நூல்களில் எட்டு நூல்களை உமாபதி சிவாச்சாரியாரே ஆக்கியுள்ளார். **சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் ப∴றொடை வெண்பா, கொடிக்கவி, உண்மை நெறி விளக்கம், நெஞ்சுவிடு தூது, சங்கற்ப நிராகரணம்** என்பவையே அவையாகும். அந்நூல்களுடாக சைவசித்தாந்தம் வலியுறுத்தும் முப்பொருட்களான பதி, பசு, பாசம் என்பவற்றின் இயல்பு நிலை, அவற்றின் வியாபக நிலை, நித்தியத்தன்மை, முத்திநிலை என்பவற்றை எளிமையான குறள்கள் வாயிலாகவும் வினா விடைகள் மூலமாகவும் விபரித்துள்ளார்.

உமாபதி சிவாச்சாரியார் தனது குருவாகிய மறைஞான சம்பந்தரின் அருமை, பெருமைகளையும் தனது நன்றி மறவாப் பண்பினையும் வெளிப்படுத்துவதாக **போற்றிப் ப∴றொடை வெண்பா, நெஞ்சுவிடு தூது** என்பன அமைகின்றன. அகச்சமயக் கொள்கைகளை மறுதலித்து சைவ சித்தாந்தக் கொள்கைகளை முதன்மைப்படுத்தும் முகமாக உமாபதி சிவாச்சாரியாரால் அமைக்கப்பட்ட நூல் **"சங்கற்ப நிராகரணம்"** ஆகும்.

உமாபதி சிவாச்சாரியார் பல அற்புதங்களையும் செய்து ஆண்டவனுக்குப் பணி செய்துள்ளார். அவர் சிவனடியார்களை சாதி அடிப்படையில் நோக்கக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தார். தில்லை நடராஜருக்குப் பூசை செய்யும் அந்தணராக விளங்கிய உமாபதி சிவாச்சாரியார் நெசவாளரிடம் கூழ் வாங்கியுண்டார். அதனால் தில்லைவாழ் அந்தணர்கள் அவரை தகுதி குறைந்தவராகக் கருதி ஒதுக்கியபோதும் மனம் சோர்வின்றி, தில்லைக்கு அருகிலுள்ள **"கொற்றவன் குடி"**யில் திருமடமொன்றை அமைத்து அங்கேயே தங்கினார்.

**பெற்றான் சாம்பான்** என்னும் விறகு வெட்டிக்கு உமாபதி சிவாச்சாரியார் முத்தியளித்தமை அவரது அற்புதங்களில் சிறப்பானதாகும். தில்லைவாழ் அந்தணர்களது மடப்பள்ளிக்கு நாள்தோறும் விறகு கொடுக்கும் சாம்பானுடைய கனவில் தோன்றிய சிவன் **"என் அன்பன் உமாபதிசிவத்துக்கும் விறகு கொடுத்து வா"** என அருளிச் செய்து அவனிடம் ஒரு சீட்டுக் கவியையும் சேர்ப்பித்து அருளினார்.

**அடியார்க் கெளியென் சிற்றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதிய கைச்சீட்டு- படியின்மிசைப்
பெற்றான் சாம்பானுக்குப் பேதமறத் தீக்கை செய்து
முத்தி கொடுக்க முறை.**

சாம்பான் தனது கனவிற் கண்டவாறு கொற்றவன் குடியிலுள்ள திருமடத்திற்கு எதுவித சன்மானமுமில்லாது விறகு கொடுத்து வந்தான். சாம்பானது பக்குவ நிலையைக் கண்ட உமாபதி சிவாச்சாரியார் அவனது மனைவி காண **சத்தியோ நிர்வாண தீட்சை** வழங்கி அவனை முத்தியடையச் செய்தார்.

உமாபதி சிவாச்சாரியாரது சைவப்பணிகளுள் குறிப்பிடத்தக்க மற்றுமொரு அம்சம் அவர் முத்தியடைவோர் பெறும் பயன்பாட்டினை விளக்கியமையாகும். உமாபதி சிவாச்சாரியாரால் சாம்பானுக்கு கிடைத்த முக்திப்பேறு பற்றி அறியாத அவனது மனைவி மன்னனிடம் சென்று "மடத்துச் சாமியார் என் கணவனை எரித்து விட்டார்" என முறையிட அரசனுக்கும் உலகத்தவர்க்கும் முத்தியடைவோர் பெறும் நற்பலனை விளக்கும்பொருட்டு முத்தியளிக்கும் முறையைச் செய்து காட்ட விரும்பினார்.

தனது மடப்பள்ளியின் அருகில் நின்ற முள்ளிச்செடிக்கு முத்தியளித்தார். அப்போது அது கருகிச் சாம்பலாகி அச் சாம்பலிலிருந்து ஒரு முனிவர் தோன்றி உமாபதி சிவாச்சாரியாரை வணங்கிவிட்டு ஆகாயமார்க்கமாகச் சென்றார். எனவே முள்ளிச்செடி முனிவராக முத்திப்பேறு பெற்றது போன்று, சாம்பானும் நன்முத்தியைப் பெற்றான் என்பதனை உலகத்தோருக்கு நிரூபித்துக் காட்டியுள்ளார். ஏழை எளியவர்களோடு கூடி வாழும் மெய்ஞ்ஞானிகள் எத்தனையோ சோதனைகளை சமூகத்தில் எதிர்கொள்ள நேரிடும் என்பதற்கு உமாபதி சிவாச்சாரியாரின் வரலாறு சிறந்த உதாரணமாகும்.

உமாபதி சிவாச்சாரியார் ஆலயங்களினதும் சிவனடியார்களினதும் சிறப்புக்களை தனது நூல்கள் ஊடாக வெளிப்படுத்தியுள்ளார். கோயில் என்று சிறப்பித்து அழைக்கப்படும் சிதம்பரத்தின் சிறப்புக்களை அவர் **"கோயிற்புராணம்"** என்னும் புராண நூல் ஊடாக வெளிப்படுத்தியுள்ளார். அதே போன்று அறுபத்துமூன்று நாயன்மார்களின் வரலாற்றை பெரியபுராண நூல் மூலம் விபரித்துச் சென்ற சேக்கிழார் பெருமானது சைவப்பணிகளைக் கண்டு வியந்த உமாபதி சிவாச்சாரியார் **"சேக்கிழார் புராணம்"** எனும் புராண நூலை உருவாக்கினார்.

உமாபதி சிவாச்சாரியார் சைவ சித்தாந்த உண்மைகளை தமிழ்மொழியில் விளக்கிச் சென்றது போல, வட மொழியிலும் விபரிக்கும் முகமாக **"பௌஷ்கர விருத்தி"** என்ற நூலை வட மொழியில் எழுதியுள்ளார்.

சந்தான குரவர் நால்வராகக் காணப்பட்ட போதிலும் உமாபதி சிவாச்சாரியாருடன் அம்மரபு நின்று விடாது தொடர்கின்றது. உமாபதி சிவாச்சாரியாரின் சீடராகிய **"நமசிவாய தேசிகர்"** திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தைத் தோற்றுவித்தவராவர். தருமபுர ஆதீனமும் திருக்கைலாய பரம்பரையில் வந்தோராலேயே அமைக்கப்பட்டது என்பர்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1) திருக்கைலாய பரம்பரையில் வந்த புறச் சந்தான குரவர்கள் நால்வரும் யாவர்?

2) சித்தாந்த நூல்களிடையே மணிமுடியாய் விளங்கும் நூல் யாது?

3) அருணந்தி சிவாச்சாரியாரின் பணிகள் இரண்டு தருக.

4) மறைஞானசம்பந்தர் மாணவர்களுக்கு முன் வைத்த மூன்று சிந்தனைகளும் யாவை?

5) உமாபதி சிவாச்சாரியாரின் பணிகள் இரண்டு தருக.

## செயற்பாடு

1. சைவசமய வளர்ச்சிக்கு சந்தான குரவர்கள் ஆற்றிய பணிகளைப் பற்றி ஐந்து நிமிடம் பேசுக.

2. திருக்கைலாய பரம்பரையின் தொடர்ச்சியினை அட்டவணைப்படுத்துக.

## பாடச்சுருக்கம்

1. சைவ சமய வளர்ச்சிக்கு சமய குரவர்கள் போன்று சந்தான குரவர்களும் பங்காற்றியுள்ளனர்.

2. சைவ சித்தாந்த தத்துவம் மெய்கண்ட சாஸ்திர நூல்கள் மூலம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

3. சாதாரண மக்களது வாழ்வியலோடு சந்தான குரவர்கள் இணைந்து செயற்பட்டனர்.

4. சந்தான குரவர் பரம்பரை திருவாவடுதுறை ஆதீனத்தின் மூலம் தொடர்கின்றது.

# 14 ஈழத்துச் சித்தர்கள்

ஈழத்தில் சித்தர் பரம்பரை ஒன்று பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் இருந்து ஆரம்பமாகின்றது. பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கு முன்னர் வாழ்ந்த சித்தர்கள் பற்றிய செய்திகள் நிலவினாலும் அவை வலுவானவையாக அமையவில்லை. அகத்தியர் திருகோணமலையில் உள்ள கங்குவேலி என்ற இடத்தில் சிவலிங்கத்தை ஸ்தாபித்து வழிபாடு செய்ததோடு அங்கு பல சித்துக்களையும் ஆற்றியதாக அறிகின்றோம்.

தென் இந்தியாவின் பெங்களூர் நகரில் அயலில் இருந்து இலங்கை வந்த கடையிற் சுவாமிகளே ஈழத்துச் சித்தர் பரம்பரையின் முதல்வராவார். கந்தர்மடம் வேதாந்த மடத்தை ஸ்தாபித்த சார்ஜன் சுவாமிகள், நல்லூர் செல்லப்பா சுவாமிகள், கீரிமலையிற் சமாதியடைந்த குழந்தைவேற் சுவாமிகள் என்போர் அவரது சீடர்களாவர். ஈழத்துச் சித்தர் வரிசையில் கொழும்புத்துறை யோகர் சுவாமிகளுக்கு ஓர் சிறப்பிடமுண்டு.

கோவிந்த சாமி புகழ் சிறிது சொன்னேன்
குவலயத்தின் விழிபோன்ற யாழ்ப்பாணத்தான்
தேவிபதம் மறவாத தீர ஞானி
சிதம்பரத்து நடராஜ மூர்த்தியாவான்
பாவியரைக் கரையேற்றும் ஞானத்தோணி
பரமபத வாயிலெனும் பார்வையாளன்
காவி வளர் தடங்களிலே மீன்கள் பாயும்
கழனிகள் சூழ் புதுவையிலே அவனைக் கண்டேன்.

தங்கத்தாற் பதுமை செய்தும் இரதலிங்கம்
சமைத்துமவற் றினிலீசன் தாளைப் போற்றும்
தங்கமுறு பக்தர் பலர் புவி மீதுள்ளோர்
தோழரே எந்நாளும் எனக்குப் பார் மேல்
மங்களஞ்சேர் திருவிழியால் அருளைப் பெய்யும்
வானவர்கோன் யாழ்ப்பாணத் தீசன் தன்னைச்
சங்கரனென் றெப்போதும் முன்னே கொண்டு
சரணடைந்தால் அதுகண்டீர் சர்வசித்தி.

என்று பாரதியார் தான் புதுவையில் சந்தித்த யாழ்ப்பாணத்துச் சுவாமிகள் பற்றிக் குறிப்பிடுகின்றார். அவ்வாறு பாரதியாரால் போற்றப்பட்ட யாழ்ப்பாணத்துச் சுவாமியார் பருத்தித்துறை வியாபாரி மூலையில் வாழ்ந்த அருளம்பல சுவாமிகளா? அல்லது யாழ்பாணம் கலட்டியில் வசித்த ஆறுமுக சுவாமிகளா? என்பது தொடர்பாக அறிஞர்களிடையே மாறுபட்ட கருத்துகளுண்டு.



இந்தியாவின் திருவில்லிப்புத்தூரில் அமைந்துள்ள யாழ்ப்பாணத்துச் சுவாமிகளின் ஆலயம்



சமாதி லிங்கம்




பாரதி போற்றிய குரு புகழ்

மாத்தளை அலுவிகாரையில் சமாதியெய்திய பரமகுரு சுவாமிகள், நல்லூர் செல்லாச்சி அம்மையார், கோண்டாவில் "குடைச்சுவாமியார்" என அழைக்கப்படும். கந்தையா சுவாமிகள், கரம்பொன் மகாதேவா சுவாமிகள், கீரிமலை சடையம்மா சுவாமிகள், ஏழாலையில் சமாதியெய்திய சடைவரத சுவாமிகள், குப்பிளானில் சமாதியடைந்த சுவாமிகள், ஹற்றன் குயில்வத்தையில் சமாதியெய்தியவர்களாகிய குமரகுருபர சுவாமிகள், நவநாதசித்தர், நயினாதீவில் சமாதியெய்திய முத்துக்குமார சுவாமிகள் எனப் பல சித்தர்கள் ஈழத்தில் வாழ்ந்திருக்கின்றனர்.

## அ. முத்துலிங்க சுவாமிகள்.

ஈழத்தில் கடந்த மூன்று நூற்றாண்டுகளில் வாழ்ந்த சித்தர்கள் பற்றிய தகவல்களையே நாம் அறிகின்றோம். ஆயினும் அவற்றிற்கு முந்திய நூற்றாண்டுகளில் இந்தியாவிலிருந்து இலங்கைக்கு வந்த ஒரு சில சித்தர்கள் பற்றிய செய்திகளும் நமக்குக் கிடைத்துள்ளன.




பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்படும் அருணகிரிநாதர் கதிர்காமக் கந்தன்மீது திருப்புகழ் பாடிய காலப்பகுதியில் இந்தியாவில் வசித்த சித்தர்கள் பலர் இலங்கைக்கு வருகை தந்து கதிர்காமக்கந்தனை

வழிபட்டு ஏகினர். சிலர் அங்கேயே சமாதி எய்தினர்.

இலங்கையில் போர்த்துக்கேயரது ஆட்சி நிலவிய பதினாறாம் நூற்றாண்டுக் காலப்பகுதியில் கதிர்காமத்தின் மீது தலயாத்திரை மேற்கொள்ளப் பலர் அஞ்சினர். ஒரு சிலரே மிகுந்த தற்றுணிவுடன் கதிர்காம யாத்திரையை மேற்கொண்டனர். அவர்களுள் வட இந்தியாவின் காஷ்மீரில் இருந்து வருகை தந்த கல்யாண நாதரும் ஒருவராவார். அவரை "கல்யாணகிரி" எனவும் அழைப்பர். அவர் இலங்கை வந்ததற்கான காரணத்தை இட்டு கதை ஒன்று உண்டு.

கதிர்காமத்திற்கு வந்து வள்ளியை மணம் புரிந்த முருகப் பெருமான் கதிர்காமத்திலேயே தங்கி விட்டார். அதனால் தெய்வானை அம்மன் மனம் வருந்தினார். முருகப் பெருமானை தெய்வானை அம்மனிடம் சேர்க்கும் பொருட்டு கல்யாணகிரியார் கதிர்காம யாத்திரையை மேற்கொண்டார். முருகப்பெருமானை மட்டுமே இந்தியாவிற்கு அழைத்து செல்வது அவரது நோக்கமாக இருந்தது. அவர் கதிர்காம முருகனை தரிசிக்கும் பொருட்டு பன்னிரண்டு ஆண்டுகள் மாணிக்க கங்கைக் கரையில் கடும் தவம் புரிந்தார். அவர் தவம் இயற்றுகையில் வேட்டுவச்சிறுமி ஒருத்தியும் சிறுவன் ஒருவனும் அவருக்கு குற்றேவல் புரிந்தனர். ஒரு நாள் அவர் அயர்ந்து தூங்கும் போது வேட்டுவச் சிறுவன் அவரை எழுப்பினான்.

நித்திரை குழம்பியதால் கோபம் கொண்ட அவர் சிறுவனை சினந்து பேச சிறுவனும் எதிர்வார்த்தையாடத் துரத்தி ஓடினார். வேட்டுவச்சிறுமியும் ஓடினாள். முடிவில் மாணிக்க கங்கைக் கரையில் சிறுவர் இருவரும் முருகனும் வள்ளியம்மனுமாகக் காட்சி தந்தனர். கல்யாணகிரியார் இருவரையும் கைகூப்பி வணங்கினார். அப்போது முருகப்பெருமான் "உன்குறை யாது ?" என வினவ "முருகப்பெருமானைத் தெய்வானை அம்மனிடம் சேர்ப்பிப்பதே தம் பேரவா" எனக் கூறினார்.

இதனை கேள்வியுற்ற வள்ளி நாச்சியார் கல்யாணகிரியாரிடம் முருகப்பெருமானை இங்கிருந்து அழைத்துச் செல்ல வேண்டாமென மாங்கல்யப் பிச்சை கேட்டார். அதற்கு இசைந்த கல்யாணகிரியார் முருகப்பெருமானுக்கு வாழ்நாள் முழுவதும் பணிவிடை செய்யக்கருதி கதிர்காமத்தில் தங்கினார்.

கல்யாணகிரியாரினால் முருகப்பெருமானது மந்திர எழுத்துக்களை எழுதிய பொன்தகடு ஒன்று உருவாக்கப்பட்டதாகவும் அந்த யந்திரமே இன்று கதிர்காம உற்சவ காலங்களில் பெட்டிக்குள் வைக்கப்பட்டு யானைமேல் ஊர்வலமாக எடுத்து வரப்படுவதாகவும் அறிய முடிகின்றது.

கல்யாணகிரியார் கதிர்காமத்தில் சமாதி அடைந்த போது அவரது பூதவுடல் முத்துப்போல் பிரகாசித்து சிவலிங்கம்போல் ஒடுங்கியதால் அடியவர்கள் அவரை "முத்துலிங்க சுவாமிகள்" என அழைத்தனர். அவரது சமாதி வள்ளியம்மன் கோயிலுக்கு பக்கத்தில் மாணிக்க கங்கைக்கு அருகில் உள்ளது.

அதுவே இன்று கதிர்காமச் சிவன் கோவிலாகக் காணப்படுகின்றது. அவர் வாழ்ந்த இடம் இன்று கல்யாணமடம் என அழைக்கப்படுகின்றது. இது தெய்வானை அம்மன் கோயிலுக்கு எதிரே அமைந்துள்ளது.



## ஆ. யோகர் சுவாமிகள்



யாழ்ப்பாணத்தில் மாவிட்டபுரம் என்ற ஊரில் அம்பலவாணர் சின்னாசிப்பிள்ளை என்னும் பெற்றோர்க்கு 1873ஆம் ஆண்டு வைகாசித் திங்கள் 29ஆம் திகதி ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்கு சதாசிவன் எனும் நாமம் சூட்டினர். சதாசிவன் தனது சிறிய வயதிலே பெற்றோரை இழந்தான். அதனால் மாமியார் ஒருவருடன் வாழ்ந்து வந்தான். உரிய காலத்தில் ஊரில் உள்ள தமிழ்ப்பாடசாலை ஒன்றில் கல்வி கற்கத் தொடங்கினான். பின்னர் யாழ்ப்பாணம் சம்பத்திரிசியார் கல்லூரியில் கல்வி கற்று அரச சேவையில் சேர்ந்தான். இப்போது சதாசிவம் பக்தியும் ஆசாரமும் நிறைந்த பெரியவர்.

கிளிநொச்சிப் பகுதியில் நீர்ப்பாசன அலுவலகத்தில் சதாசிவன் களஞ்சியப் பொறுப்பாளராகக் கடமை புரிந்துள்ளார். தனக்குக் கிடைத்த ஓய்வு நேரங்களில் திருமுறைகள், புராணங்கள், பகவத்கீதை, உபநிடதங்கள் என்பவற்றை ஓதி உணர்ந்தார். உள்ளத்தால் கடவுள் மனிதராகவும் உடலால் உலகியலோடு தொடர்புபட்டவராகவும் காணப்பட்டார். அந்நிலையை அவதானித்த நீர்ப்பாசன திணைக்களத்தின் பிரதான பொறியியலாளராக விளங்கிய திரு. பிறவுண் என்ற ஆங்கிலேயர் இவரைக் 'கடவுளின் மனிதன்'' எனச் சிறப்பித்து அழைத்தார்.

ஆன்மீக விடுதலையை நாடிய சதாசிவன் நல்லூர்த் தேரடியில் வசித்த செல்லப்பா சுவாமியைச் சந்திக்க வந்தார். செல்லப்பா சுவாமி குருவாய் அமைந்து அவருக்கு தீட்சையும் உபதேசமும் செய்தார்.

வண்டுபண் செய்யும் வளம்பெருகு நல்லூரில்
மிண்டு மனத்தவரை மேனிலைக்குக்- கொண்டுவரும்
தேரடியில் தேசிகனைக் கண்டு தெரிசித்தேன்
தீரடா பற்றென்றான் சிரித்து.

கருத்தில் நினைந்துருகிக் கைகூப்புந் தொண்டர்
வருத்தமெலாந் தீர்க்கும் வடிவேல் - திருத்தலத்தில்
தேரடியில் தேசிகனைக் கண்டு தெரிசித்தேன்
ஆரடா நீ யென்றான் அவன்

தன்னை யறியத் தவமியற்றும் மாதவரை
அன்னையைப்போல் ஆதரிக்கும் ஆறுமுகன் - சந்நிதியில்
தேரடியில் தேசிகனைக் கண்டு தெரிசித்தேன்.
தேரடா உள்ளென்றான் சிரித்து.

என்ற பாடல்கள் மூன்றும் சதாசிவன் செல்லப்பா சுவாமிகளிடம் என்ன உபதேசம் பெற்றார் என்பதனை விளக்குகின்றன. அவ்வாறு உபதேசம் பெற்ற சதாசிவனார் தமது அரச சேவையை விட்டார். உற்றார் உறவினர்களைத் துறந்தார். செல்லப்பா சுவாமிகளையே தனது அனைத்துமாகக் கொண்டார். அதனால் செல்லப்பா சுவாமியும் சீடரைப் பலவகைச் சோதனைகளுக்கு உள்ளாக்கிப் பக்குவப்படுத்தினார்.

சதாசிவன் கொழும்புத்துறையில் வசித்து வந்தார். அவரை இவ்வூர் மணியகாரன் **யோகநாதன்** என அழைத்தார். யோகநாதன் "யோகர் சுவாமி" என அழைக்கப்பட்டார். யோகர்சுவாமிகளுக்கு செல்லப்பா சுவாமிகள் நான்கு மகா வாக்கியங்களை உபதேசித்தார். **முழுவதும் உண்மை, எப்பொழுதோ முடிந்த காரியம், ஒரு பொல்லாப்பும் இல்லை, நாம் அறியோம்** என்பனவே அவையாகும்.

யோகர் சுவாமிகள் தனது அனுபவங்களையும் உபதேசங்களையும் **"நற்சிந்தனை"** என்னும் நூலின் ஊடாக வெளிப்படுத்தியுள்ளார். தனது குருவாகிய செல்லப்பா சுவாமிகளைப் பற்றியே நற்சிந்தனையில் விபரித்துள்ளார்.

**தேர் முட்டிப்படிமேலே - கிளியே**
**செல்லப்பன் என்ற சீமான்**
**ஆர்வமுடன் இருக்கிறாண்டி - கிளியே**
**அங்கு போவோம் வந்திடடி"**

நற்சிந்தனை நூல்மூலம் யோகர் சுவாமியின் உபதேசங்களையும் அறிய முடிகின்றது.




யாழ்ப்பாணம் சிவதொண்டன் நிலையம்





சிவயோக சுவாமிகள் ஆலயம்




சிவதெண்டன் மாத இதழ்



மட்டகளப்பு, செங்கலடி சிவதொண்டன் நிலையம்



அமெரிக்கரான சுவாமிகளின் சீடர் (சுப்ரமணிய சுவாமிகள்)

**தரும நெறியிற் பிசகாதே; எவ்வுயிரும் எம்பெருமான் திருமுன்னிலை என்று சாதனை செய்; கடவுள் உள்ளும் புறமும் உள்ளவர்; நான் உனக்குத் தரக்கூடிய முதுசொம் எந்நேரமும் கடவுள் உன்னுடன் இருக்கிறார் என்னும் உறுதி மொழியே**

என்பன யோகர் சுவாமியின் உபதேசங்களாகும்.

யோகர் சுவாமிகள் கொழும்புத்துறை, செங்கலடி ஆகிய இடங்களில் **சிவதொண்டன்** நிலையங்களை அமைத்தார். அச் சிவதொண்டன் நிலையங்கள் சைவ சித்தாந்த, வேதாந்த, புராண, இதிகாச வகுப்புக்களை நடாத்துதல், சமய விழாக்களை கொண்டாடுதல் மற்றும் மதுவிலக்கு பிரசாரப்பணி, விவசாய மேம்பாட்டுப்பணி என்பனவற்றை மேற்கொண்டன. அத்தோடு **சிவதொண்டன்** என்ற மாத இதழையும் வெளியிட்டது.

யோகர் சுவாமிகளுக்கு உலகளாவிய ரீதியில் பல சீடர்கள் காணப்பட்டனர். இலங்கை சுதந்திரம் பெற்ற காலத்தில் தேசாதிபதியாக இருந்த சோல்பரி பிரபுவின் மகன் யோகர் சுவாமிகளின் சீடராகி **சந்தரஸ் சுவாமி** என அழைக்கப்பட்டார். ஜேர்மனிய நாட்டவரான சுவாமி கௌரிபாலா (ஜேர்மன் சுவாமி) மற்றும் அமெரிக்காவின் ஹவாயைச் சேர்ந்த அமெரிக்கரான ஸ்ரீசுப்பிரமணிய சுவாமிகள், கிளிநொச்சியில் மகாதேவா ஆச்சிரமத்தை அமைத்த வடிவேல் சுவாமிகள் ஆகியோரும் யோகர் சுவாமிகளின் சீடர்களாவர்.

ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக பணி செய்த யோகர் சுவாமிகள் கொழும்புத்துறையில் 1964ஆம் ஆண்டு பங்குனி மாதம் இருபத்து மூன்றாம் திகதி ஆயிலிய நட்சத்திரத்தில் சமாதி அடைந்தார்.

## இ. நவநாத சித்தர்

கொல்லிமலை தமிழ் நாட்டில் சேலம் மாவட்டத்தில் உள்ள ஒரு குன்றுத்தொடர். அம்மலையில் உள்ள குகைகளில் சித்தர்கள் தவம் செய்து கொண்டு இருப்பார்கள். அவர்களுள் நவநாத சித்தரும் ஒருவர். அவர் ஒரே நேரத்தில் ஒன்பது இடங்களில் தோற்றமளிப்பவர் என்ற காரணத்தினால் **நவநாத சித்தர்** என அழைக்கப்பட்டார்.


நவநாதசித்தர்

நவநாதசித்தர் நீண்ட நேரம் தவம் செய்வார். தமது தவம் கலையும் வேளையில் பசி

மிகுந்திருந்தால் உணவு புசிப்பதற்காகக் கொல்லி மலையின் அடிவாரத்தில் உள்ள கிராமங்களுக்குச் செல்வார். அவ்வாறு உணவு பெறுவதற்காகச் சென்ற கிராமங்களில் கருங்காலி என்பதும் ஒன்று.

கருங்காலியில் தமது வீட்டிற்கு வரும் சித்தர்களுக்கு அன்னமிட்டு அவர்களை வழிபட்டவர் பெருமாள் அம்மையார். அவரது கணவனார் இலங்கையில் உள்ள நாவலப்பிட்டியிலுள்ள குயின்ஸ்பெரித் தேயிலைத் தோட்டத்தில் தலைமைக் கணக்காளராகக் காணப்பட்டார். அதனால் அம்மையார் ஆறுமாத காலம் குயின்ஸ்பெரித் தேயிலைத் தோட்டத்திலும், மிகுதி ஆறுமாத காலத்தைக் கருங்காலியிலும் கழித்து வந்தார்.

பெருமாள் அம்மையார் கருங்காலியில் வசித்து வருகின்ற காலங்களில் நவநாதசித்தர் உணவு பெறுவதற்காக அவரது வீட்டுக்குச் செல்வதுண்டு. பெருமாள் அம்மையார் ஒருநாள் நவநாதசித்தருக்கு உணவு பரிமாறும் போது ''சுவாமி சிலோனில் நாங்கள் ஒரு சுப்பிரமணியர் கோயில் கட்டுகிறோம். சுவாமி தவறாது அங்கு வர வேண்டும்'' என்று வேண்டுகோள் விடுத்தார்.

காலங்கள் சில சென்ற பின் குயின்ஸ்பெரித் தேயிலைத் தோட்டத்திற்கு பெருமாள் அம்மையார் வந்திருந்தார். அப்போது முருகன் கோயிற் திருப்பணிகள் முடிவடைந்து இருந்தன. கும்பாபிஷேகத்திற்கான நாளும் நிச்சயிக்கப்பட்டது. கும்பாபிஷேகத்திற்கு முதல் நாள்தான் அம்மையார் தான் சுவாமிகளுக்குச் சொன்னவற்றை நினைவு கூர்ந்தார். தனது மூத்த மகனிடம் சுவாமிக்கு அழைப்பு அனுப்புமாறு கூறினார். மகனோ ''இன்று சுவாமிக்குத் தந்தி அடித்தாலும் அவர் இங்கு வர ஒரு வார காலம் செல்லும். நாளைக்கு கும்பாபிஷேக வேலைகள் நிறைவெய்தி விடும். இன்று சுவாமிக்கு அறிவித்து என்ன பலன் எனத் தாயைக் கேட்க நினைத்தவுடன் அறிவிப்பது நம் கடமை'' என்று தாய் பதில் கூறினார். உடன் கடிதம் எழுதி அன்றே அஞ்சல் அலுவலகத்தில் சேர்க்கப்பட்டது.

பெருமாள் அம்மையார் கும்பாபிஷேக நாள் அன்று அதற்குத் தேவையான பொருட்களைக் கொண்டு கோயில் நோக்கிச் சென்று கொண்டிருந்தார். அந்நேரம் நவநாதசித்தர் அங்கே வந்தார். அவரைக் கண்டதும் பெருமகிழ்ச்சி கொண்ட அம்மையார் ''சுவாமி நேற்றுத்தானே கடிதம் அனுப்பினேன். எப்படி சுவாமி வந்தீர்கள்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள். **''ஆயா நினைத்தது அடிமை வந்தது''** என்று சுவாமிகள் பதில் சொன்னார்.

இவ்வாறு இலங்கை வந்த நவநாத சித்தர், பெரியானைக்குட்டிச் சுவாமிகள், சித்தானைக்குட்டிச் சுவாமிகள் ஆகியோருடன் ஒன்றிணைந்து பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார். அவரது அற்புதங்களிற் சில மேல்வருமாறு:

1. உயிருக்காகப் போராடிக்கொண்டு இருந்த தோட்டத் தொழிலாளர்கள் மூவரினதும் உயிரினைக் காப்பாற்றியமை.
2. நீரின்றி வரண்டு போய்க் காணப்பட்ட பெருமாள் கோயில் கிணற்றில்

நீர் சுரக்க வழிவகுத்தமை.

3. "குருசாமி" என்னும் பக்தருக்குக் கொல்லிமலைச் சித்தர்களைத் தரிசிக்கும் பாக்கியத்தினை ஏற்படுத்திக் கொடுத்தமை.

4. தியான நிலையில் இருந்த போது கொள்ளிக்கட்டை வைத்து இவரது தியானம் உண்மையானதா எனச் சோதித்த செட்டியாரை மன்னித்தமை.

5. பெருமாள் அம்மையார் மறதியினால் விட்டு வந்த செபமாலை இவரை நினைத்தவுடன் கையில் கிடைக்கப் பெற்றமை.

அவ்வாறு பல அற்புதங்களைச் செய்த நவநாதசித்தர் **1902 ஆம் ஆண்டு பங்குனி மாதம் உத்தர நட்சத்திரத்தில்** சமாதி அடைந்தார். அவரது சமாதி குயின்ஸ்பெரி தேயிலைத் தோட்டத்திலுள்ள முருகன் கோவிலுக்கு அண்மையில் உள்ளது. அச்சமாதி ஆலயம் இன்று **"நவநாதேஸ்வரம்"** என அழைக்கப்படுகிறது.


நவநாதச் சித்தரின் சமாதி ஆலயமும், குயின்ஸ்பெரி முருகன் கோயிலும்


சமாதி லிங்கம்


திருவுருவப்படம்

## ஈ.பெரியானைக்குட்டி சுவாமிகள்.




தாய் தந்தையரை இழந்த சிறுவன் ஒருவன் கண்டிநகர வீதிகளில் சுற்றித் திரிந்தான். அவனது செயல்களைக் கண்ட ஒருவர் தன்னோடு வருமாறு அழைத்துச் சென்றார். அச்சிறுவனை **ஆனைக்குட்டி** என வீட்டில் அழைத்தனர்.

ஒருநாள் கொல்லைப்பக்கம் சென்ற ஆனைக்குட்டி அம்மா! அம்மா! பாம்பு! பாம்பு! எனச் சத்தமிட்டான். அச்சத்தத்தைக் கேட்ட வளர்ப்புத் தாயார் ஓடோடி வந்து "எங்கே? மகனே பாம்பு?" என்றார். ஆனால்

ஆனைக்குட்டியோ எக்காளங் கொட்டிச் சிரிக்கலானான். அவ்வாறு மூன்றாம் முறையும் உரத்துச் சத்தமிட ஒருவரும் வரவில்லை. சில மணித்தியாலங்கள் கழிந்தபின் போய்ப் பார்த்தால் ஆனைக்குட்டியைக் காணவில்லை. ஆனால் அவன் மலங்கழித்த இடத்தில் தங்கக்குவியல் இருப்பதைக் கண்டனர். தங்கத்தை எடுத்துப் பாதுகாப்பாக வைத்த பின்னர் குடும்பம் முழுவதும் ஆனைக்குட்டியைத் தேடுவதில் ஈடுபட்டது. ஈற்றில் கண்டிக் கதிரேசன் ஆலயத்தில் இருக்கக் கண்டு அவனை வீட்டுக்கு வருமாறு பலமுறை கெஞ்சி அழைத்தனர். ஆனால் அவனோ ‘‘முற்பிறப்பில் நான் உங்களுக்கு உழைத்துத் தர வேண்டிய கடன் இருந்தது. அது நிறைவேறி விட்டது இப்பொழுது நீங்கள் யாரோ நான் யாரோ’’ என்று கூறி மௌனமாக இருந்து விட்டான். அச்சிறுவனே பெரியானைக்குட்டி சுவாமிகள் எனப் பிற்காலத்தில் அழைக்கப்பட்டான்.

சீவன் முத்தரான பெரியானைக்குட்டி சுவாமிகள் அவ்வாறு கண்டியில் சிறிது காலம் வசித்துவிட்டு இந்தியா சென்றார். அங்கு நவநாத சித்தரைக் கொல்லி மலையில் சந்தித்தார். ஒரு நாள் அவர்கள் இருவரும் ஏனைய சாதுக்களுடன் புகைவண்டியில் ஏறினர். புகையிரத நிலைய அதிபர் ஆனைக்குட்டி சுவாமிகளையும் நவநாதசித்தரையும் தவிர ஏனைய சாதுக்களை இறங்குமாறு கட்டளையிட்டார். அப்போது பெரியானைக்குட்டி சுவாமிகள் எமது சகோதரர்களுக்கு இடம் இல்லை என்றால் நாமும் போகவில்லை எனக்கூறி எல்லோரும் ஒன்று சேர்ந்து காட்டுக்குள் போய் தீ மூட்டிக் குளிர் காய்ந்தனர். புகையிரதம் நகர மறுத்து விட்டது. சாரதி தன்னால் இயன்ற மட்டும் முயற்சி செய்தார். பொறியியலாளர் வந்தும் பயனில்லை. இறுதியில் பிரயாணியொருவர் சாதுக்களை இறக்கிவிட்டதுதான் காரணமாக இருக்கலாம் என்று கூறினார்.

அதன் பின்னர் சாதுக்களைத் தேடிச் சென்று தமது தவறினை மன்னிக்குமாறு வேண்டினர். சுவாமிகள் எதைச் செய்ய வேண்டும் என எதிர்பார்க்கின்றீர்களோ அதை நாங்கள் தவறாது நிறைவேற்றி வைப்போம்’’ என்றனர். ‘‘ஒருபொழுதும் சாதுக்களிடம் புகையிரதக் கட்டணம் அறவிடமாட்டோம் என்று ஒப்பமிட்டுத் தாருங்கள், மிகுதியை நாங்கள் பார்க்கின்றோம்’’ என்றனர். அதன்படியே அவர்களும் செய்து கொடுத்தனர். சுவாமிகள் வாயிலிருந்து காற்றை வெளியே ஊதினார். என்ன ஆச்சரியம் நான்கு, ஐந்து மணிநேரம் அசையாது நின்ற புகையிரதம் அசையத்தொடங்கியது.

கப்பம் வேண்டிப் பிறருக்குத் துன்பம் செய்த கயவனை நல்லவனாக மாற்றியமை, பார்வையிழந்த அந்தணருக்கு பார்வை வரச்செய்தமை என்பன சுவாமிகள் செய்த அற்புதங்களாகும்.

பெரியானைக்குட்டிச் சுவாமிகளின் தலைமைச்சீடர் சித்தானைக்குட்டி சுவாமிகள் ஆவார். அவர் தமது குருவாகிய பெரியானைக்குட்டிச் சுவாமிகள் முத்தியடையப் போகும் காலத்தை தனது உள்ளுணர்வால் அறிந்திருந்தார். அதனால் உரிய காலத்தில் சுவாமிகளை விட்டு விலகாது அவர்களையே

சுற்றிக் கொண்டு இருந்தார். பின்னர் பெரியானைக்குட்டி சுவாமிகளினது வேண்டுகோளின் படி முன்னேஸ்வரம் சென்றார்.

பெரியானைக்குட்டிச் சுவாமிகளினது திருவுள்ளப்படி அவர் கொழும்பிலேயே சமாதி அடைந்தார். அவரது சமாதிக்கிரியைகள் கொழும்பு முகத்துவாரம் தீர்த்தக்கரையில் சேர். பொன். இராமநாதன், சேர். பொன். அருணாசலம் முதலான தேசப் பெரியார்கள் முன்னிலையில் நடைபெற்றது. சேர்.பொன்.அருணாசலம் அவர்களால் பெரியானைக்குட்டிச் சுவாமிகளது சமாதியில் நிறுவப்பெற்ற சிவாலயமே இன்று கொழும்பு முகத்துவாரம் அருணாசலேஸ்வரர் சிவாலயமாகத் திகழ்கிறது.



## உ. சித்தானைக்குட்டி சுவாமிகள்

தமிழகத்தின் இராமநாதபுரத்தைப் பல சிற்றரசர்கள் ஆட்சி செய்தனர். சிற்றரசர் ஒருவருக்கு ஆண் குழந்தை ஒன்று பிறந்தது. அதற்குக் கோவிந்த சாமி என்னும் திருநாமம் சூட்டி அழைத்தனர். கோவிந்தசாமி அரச குடும்பத்தில் பிறந்த போதும் அவருக்கு அரச போகங்களில் நாட்டம் ஏற்படவில்லை. அதனால் இளமைப் பருவத்திலேயே அரசபோக வாழ்க்கையை வெறுத்து ஆன்மீக வாழ்வினை நாடினார்.

இராமநாதபுரத்தில் ஒருபோது தொற்றுநோய் ஏற்பட்டது. அதன் கோரப்பிடியினால் பலர் இறந்தனர். அவ்வேளை இராமநாதபுரத்துக்கு நவநாத சித்தரும் பெரியானைக்குட்டி சுவாமிகளும் வருகை தந்தனர். அவர்கள் தொற்று நோய் உள்ள வீடுகளுக்குச் சென்று சமைத்த உணவுகளை வேண்டி உண்டு தொற்றுநோயை நீக்கினர். அவ்வற்புதத்தைக் கேள்வியுற்ற கோவிந்தசாமி அவர்களை நாடினார். ஈற்றில் நவநாதச்சித்தராலும் பெரியானைக்குட்டி சுவாமிகளாலும் ஆட்கொள்ளப்பட்டு அன்றே அரச போக வாழ்க்கையைத் துறந்து, ஆண்டியாக மாறினார். இவ்வாறு ஒன்றிணைந்த மூவரும் இந்தியாவில் பல புண்ணியத்தலங்களுக்கு யாத்திரை செய்து விட்டு ஈற்றில் இலங்கைக்கு வருகை தந்தனர்.


சித்தானைக்குட்டி சித்தர்

பெரியானைக்குட்டி சுவாமிகளது ஆத்மார்த்த சீடராக கோவிந்த சுவாமிகள் விளங்கினார். அதனால் அவரை அடியவர்கள் **சித்தானைக்குட்டி சுவாமிகள்** என அழைத்தனர். சித்தானைக்குட்டிச் சுவாமிகள் கொழும்பு, நாவலப்பிட்டி, முன்னேஸ்வரம், கதிர்காமம், மட்டக்களப்பின் காரைதீவு முதலான இடங்களுக்குச் சென்று பல அற்புதங்களை நிகழ்த்தியுள்ளார். அவரது அற்புதங்கள் சில மேல்வருமாறு :-

1. கல்முனையில் வசித்த வீரப்பச் செட்டியாரின் கண்நோயை நீக்கியமை.
2. கதிர்காமக் கந்தனின் திரைச்சீலை தீப்பற்றி எரிந்த போது அதனைக் கல்முனைச் சந்தியில் நின்று அணைத்தமை.
3. கன்னன் குடாவைச் சேர்ந்த கந்தப்பப்போடியாரின் மனைவியின் உயிர் பிரிந்து ஆறு மணித்தியாலங்களுக்குப் பின் அவரை உயிர்ப்பித்தமை.
4. சாப்பாட்டுக்கடையில் எண்ணெய் இன்றி அணைந்த விளக்கிற்கு நீர் ஊற்றி மீண்டும் சுடர் விட்டு எரியச் செய்தமை.

சித்தானைக்குட்டிச் சுவாமிகள் இவ்வாறு பல அற்புதங்களைச் செய்ததோடு பல அருளுரைகளையும் ஆற்றியுள்ளார். அவை எளிமையானவையாக அமைவதோடு வாழ்க்கையில் பல திருப்பங்களையும் ஏற்படுத்தின. சுவாமிகளுடைய உபதேசங்களிற் சில மேல்வருமாறு.

**அதிகாலை நித்திரை விட்டெழு.**
**எழும் போதே ஆண்டவனை நினை.**
**காலை மாலைக் கடன்களைக் குறைவறச் செய்.**
**தேநீர் காப்பியைத் தூரத்தள்ளு.**
**மரக்கறி உணவு மனதிற்கு மகிழ்ச்சி.**
**பசித்துவந்தோர் முகம் பார்.**
**உண்ணும் முன்பு ஒருகணம் இறைவனை நினை.**
**கடமையிற் தவறினால் கடவுளைக் காணமாட்டாய்.**
**நெற்றிக்கழகு விபூதி பூசுதல்.**
**படுக்குமுன்பு இறைவனைப் பிரார்த்தி.**
**உன்னிடத்தில் உள்ளதை இல்லையென்னாமல்**
**மற்றவர்களுக்குக் கொடு.**
**எங்கும் அலையாதே. இருந்தபடியே இரு.**
**கோபத்தை விடு முருகன் அருள் தானே வரும்.**

சித்தானைக்குட்டி சுவாமிகள் மட்டக்களப்பில் காரைதீவில் 10.08.1951 அன்று சமாதி எய்தினார். அவரது சமாதி கோவிலில் ஆண்டுதோறும் அவர் சமாதி எய்திய ஆடிச்சுவாதி நட்சத்திரத்தில் குருபூசை நடாத்தப்படுகிறது. அவரது அடியவர்களால் **சித்தா சேவா சங்கம்** நிறுவப்பட்டு அதன் மூலம் சித்தானைக்குட்டி சுவாமிகளது பணிகள் தொடரப்படுகின்றன.





சித்தானைக் குட்டி சுவாமிகள் சமாதி ஆலயம், காரைதீவு

## மேல்வரும் வினாக்களுக்கு விடைதருக.

1. திருக்கரசைப் புராணம் குறிப்பிடும் சித்தர் யார்?
2. ஈழத்துச்சித்தர் பரம்பரையின் முதல்வராகக் கருதப்படுபவர் யார்?
3. ஈழத்தில் வாழ்ந்த சித்தர்கள் ஐவரின் பெயர்களைக் குறிப்பிடுக?
4. கல்யாணகிரியார் இலங்கை வந்ததற்கான காரணம் யாது?
5. யோகர்சுவாமிக்கு செல்லப்பாச் சுவாமிகள் அருளிய நான்கு மகாவாக்கியங்கள் யாவை?
6. யோகர்சுவாமிகளது சீடர்கள் யாவர்?
7. நவநாதச்சித்தரது அற்புதங்கள் நான்கினைக் குறிப்பிடுக?
8. பெரியானைக்குட்டி சுவாமிகளது சமாதி ஆலயத்தை நிர்மாணித்தவர் யார்?
9. சித்தானைக்குட்டி சுவாமிகளது அற்புதங்கள் மூன்றினைக் குறிப்பிடுக?
10. சித்தானைக்குட்டி சுவாமிகளது சேவைகளைத் தொடரும் முகமாக அமைக்கப்பட்ட சங்கம் யாது?

## செயற்பாடு

01 நீங்கள் அறிந்த சித்தர்களின் பெயர்களையும், அவர்கள் சமாதியடைந்த இடங்களையும் அட்டவணைப்படுத்துங்கள்.

02 யோகர் சுவாமிகளது உபதேசங்களைத் தொகுத்து வகுப்பறையிற் காட்சிப்படுத்துங்கள்.

03 கல்யாணகிரியார்(முத்துலிங்க சுவாமிகள்) இலங்கைக்கு வந்ததற்கான காரணக் கதையைக் குறிப்பிடுங்கள்.

## பாடச்சுருக்கம்.

- ஈழத்தில் பல சித்தர்கள் வாழ்ந்து சித்தர்பரம்பரையை உருவாக்கிச் சென்றுள்ளனர்.
- கடையிற் சுவாமிகளது சித்தர் பரம்பரையில் யோகர்சுவாமிகள் தோற்றம் பெற்றுள்ளார்.
- முத்துலிங்க சுவாமிகள் கதிர்காமத்தில் அற்புதங்கள் பல புரிந்து அங்கேயே சமாதியடைந்தார்.
- நவநாதசித்தர், பெரியானைக்குட்டி சுவாமிகள், சித்தானைக்குட்டி சுவாமிகள் என்போர் சமகாலத்தில் வாழ்ந்து பல அற்புதங்களால் சமயப்பணிகள் ஆற்றியுள்ளனர்.

# 15 குமரகுருபரரின் சமயப்பணி

பாண்டி நாட்டில் ஸ்ரீ வைகுண்டம் என்னும் கைலாசபுரத்தில் சைவ வேளாளர் மரபைச் சேர்ந்த சண்முகசிகாமணி கவிராயருக்கும் சிவகாமசுந்தரி அம்மைக்கும் மகனாகக் குமரகுருபரர் அவதரித்தார். நீண்ட காலம் குழந்தைப் பாக்கியம் இல்லாது தவித்த பெற்றோர் விரதங்கள் இருந்தும் திருத்தலங்களுக்குச் சென்றும் வழிபட்டதன் பயனாக அவர்களுக்குக் குருபரர் குழந்தையாகப் பிறந்தார். இவர் தமது ஐந்து வயது வரை ஊமையாக இருந்தார். அவரின் இந்நிலையால் பெற்றோர் பெரிதும் வருந்தினர். ஒரு முறை திருச்செந்தூர்த் திருத்தலத்திற்கு அழைத்துச் சென்று குருபரரின் குறையை நீக்கி அருளுமாறு முருகனிடம் வேண்டினர். செந்திலாண்டவனும் அர்ச்சகர் வடிவில் வந்து குழந்தையின் ஊமை நிலையை நீக்கி அருளினார். இவ்வாறு செந்திலாண்டவரின் திருவருள் பெற்ற குருபரர் ஆழ்ந்த தமிழ்ப்புலமையும் சமய ஞானமும் பெற்றுப் பல நூல்களைப் படைத்துத் தொண்டாற்றினார். இவரின் தொண்டுகள் யாவும் சிறந்த சமயத் தொண்டுகளாக அமைந்துள்ளன.




அடிகளார் தாம் வாழ்ந்த காலத்தில் இருந்த பல சமய மக்களும் சைவ சமயத்தைப் பின்பற்றும் வகையில் அதன் தொன்மையையும் சிறப்புக்களையும் கொள்கையையும் எடுத்துக் கூறிச் சைவத் தொண்டு செய்தார். அவர் முதலில் பாடிய கந்தர் கலிவெண்பாவினுள் சைவ சித்தாந்தக் கருத்துகள் சிறப்பாகவும் செறிவாகவும் காணப்படுகின்றன. சைவத்தை நிலைநாட்டுவதற்கு அடிகளார் அற்புதங்களையும் பிற சமயத்தவரோடு வழக்காடுதலையும் மேற்கொண்டார். தவிர மொழி, குலம், சமயம் வேறாக இருந்த வடநாட்டிலும் சைவத்தை நிலைநாட்டினார். ஆகவே இந்திய தேசத்தை ஒருமைப்படுத்திய பெருமை அடிகளாருக்கு உண்டு என்பதில் சந்தேகமில்லை.

வைணவ சமயத்தவரான பிள்ளைப்பெருமாள் ஐயங்காருடன் பல இடங்களில் குருபரர் சமயவாதம் புரிந்து சைவத்தின் சிறப்பை நிலைநாட்டினார். ஒரு முறை தில்லையில் ஐயங்கார், “சித்தும் சடமுமாய உலகனைத்தும் கடவுளிடமிருந்து தோன்றுவன. அவை இரண்டையும் இறைவன் தனக்குரிய உடலாகக் கொண்டு அவற்றை தன்னுள் அடக்கியிருக்கிறான்” என்று தமது

சமயக் கொள்கையை நிறுவியதற்கு எதிராக அடிகளார் சைவத்தின் கொள்கையை நிறுவினார். சைவத்தில் இறைவன், ஆன்மா என்பன இரண்டு பொருள்களாகும். இறைவன் ஒன்றாயும், உடனாயும், வேறாயும் இருக்கும். இது அத்துவித சம்பந்தமானது எனச் சைவத்தின் கொள்கையை நிறுவி அடிகளார் வாதத்தில் வென்றார்.

மற்றுமொரு முறை திருவாரூரில் சிவசமயவாதிகளின் கொள்கையை எதிர்த்து வாதம் செய்தார். அவர்கள் முத்தி பெற்ற ஆன்மா இறைவனைப் போன்று ஐந்தொழிலும் செய்யவல்லது என்ற கருத்தைக் கொண்டவர்கள். அக்கருத்தை மறுத்து அவ்வாறு ஆன்மா செயற்பட்டால் கடவுள் பல என்ற நிலை ஏற்படுவதுடன் ஆன்மாவின் இயல்பான சார்ந்து நிற்றல், உணர்த்த உணர்தல் என்பன இல்லாததாகிவிடும் என்று கூறி அவர்களுக்கு சித்தாந்தச் சைவத்தின் முத்தி நிலையினை விளக்கினார்.

காசியில் மொகலாய மன்னன் குருபரரின் கடவுள் பக்தியின் மீது ஐயங்கொண்டான். அவ்வையத்தை நீக்கும் பொருட்டு பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் கையிலேந்தி எந்தத் துன்பமுமின்றி நின்று தமது இறைவழிபாட்டின் உண்மைத்தன்மையை வெளிப்படுத்தினார். இன்னொரு சமயத்தில் மன்னன் விருந்துக்கு அழைத்து அதில் மாமிச உணவைப் பரிமாறினார். சைவ போசகரான அடிகள் அதனை ஏற்றுக்கொள்ளாததோடு மரக்கறி உணவின் சிறப்பையும் புனிதத்தையும் அரசனுக்கு உணர்த்தினார்.

சைவசமயத்தைப் வளர்ப்பதற்கு இலக்கியங்கள் படைப்பதோடு மட்டும் நில்லாது மடங்கள் அமைத்தும் தொண்டாற்றினார். காசியில் சைவமும் தமிழும் தழைக்கவென்று ஒரு திருமடம் அமைத்தார். மேலும், சிவசின்னமான உருத்திராக்கம் நன்கு விளையும் இமய மலைச்சாரலில் ஒரு திருமடம் அமைக்க விரும்பினார். தம் விருப்பத்தை வாகீச முனிவரிடம் தெரிவிக்க, அவரும் நேபாளம் சென்று முகரங்கி என்ற இடத்தில் திருமடம் ஒன்றமைத்து சைவர்களுக்குத் தேவையான உருத்திராக்கங்களை அங்கிருந்து காசிக்கு அனுப்பி வைத்தார்.

குருபரர் மக்களுக்கு சைவ சமயத்தின் சிறப்பினையும், சித்தாந்தக் கருத்துக்களையும், வழிபாட்டு முறைகளையும், புராண வரலாறுகளையும் தாம் அருளிய இலக்கியங்கள் மூலமாக எடுத்துரைத்தார். **கந்தர் கலிவெண்பா, கயிலைக் கலம்பகம், நீதிநெறி விளக்கம், மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், திருவாரூர் நான்மணிமாலை, சகலகலாவல்லி மாலை, சிதம்பர மும்மணிக்கோவை, காசித் துண்டி விநாயகர் பதிகம்** போன்றவை இவர் இயற்றிய நூல்களிற் சிலவாகும். இவை யாவும் சிறந்த இலக்கிய நயங் கொண்டமைந்த நூல்களாகும். இவ்விலக்கியங்கள் அனைத்திலும் சித்தாந்தக் கருத்துகள் அமைந்து காணப்பட்டன.

இவர் வடக்கே காசியிலும், நேபாளத்திலும் மட்டுமன்றித் தெற்கில் திருப்பனந்தாளிலும் அமைத்த மடங்கள் மூலம் பல சமய சமூகப் பணிகளைச்

செய்து வந்தார். அங்கு சித்தாந்த வகுப்புகள் நடத்துவது, சமயச் செற்பொழிவுகள் நடத்துவது என்று பல தொண்டுகளைச் செய்து வந்தார். அடிகள் அறுபத்து நான்கு திருவிளையாடல்கள், நாயன்மார் வரலாறுகள், அட்டவீரச் செயல்கள், காமாட்சியின் அறச்செயல் போன்ற பல்வேறு புராணக் கதைகளையும் தமது நூலிலே குறிப்பிட்டுள்ளார். தமிழ்மொழியிலே மட்டுமன்றிச் சமஸ்கிருதத்திலும் நன்கு தேர்ச்சி பெற்றிருந்தார். இதனால் வடமொழியில் அமைந்த நூல்களைப் படித்துத் தெரிந்து கொண்டதுடன் அவை கூறிய கருத்துகளை எளிமையான தமிழ் நடையில் ஆக்கித்தந்த பெருமையும் அவரையே சாரும்.

இவ்வாறாகக் குருபரர் வாழ்வியலில் நேரடியாகவும், இலக்கிய வழியாகவும் செய்த சமயத் தொண்டுகள் சமுதாயத் தொண்டுகளாக விளங்கின. அவரின் பணியை இன்றும் அவர் நிறுவிய மடங்களிலே காணக்கூடியதாக உள்ளது.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. குமரகுருபர சுவாமிகளின் பெற்றோர் யாவர்?
2. குமரகுருபரருக்கு பேச்சாற்றல் வந்த திருத்தலம் எது?
3. பேச்சாற்றல் வந்ததும் அவர் பாடிய முதல் பாடல் எது?
4. குமரகுருபரரால் அமைக்கப்பட்ட திருமடங்கள் இரண்டு தருக?
5. குமரகுருபரர் ஆற்றிய சமயப் பணிகள் பற்றிக் கூறுக?

### செயற்பாடுகள்

01) குமரகுருபரர் இயற்றிய நூல்களை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- குமரகுருபரர் தமிழுக்கும் சைவத்துக்கும் தொண்டு செய்தவர்களுள் சிறப்புடையவராவார்.
- வட இந்தியாவிற்கும் தமிழின் பெருமையை எடுத்துச் சென்று நிலை நிறுத்தினார்.
- வடஇந்தியாவில் ஒன்று தென்இந்தியாவில் ஒன்று என இரு மடங்கள் அமைத்து சைவத்தொண்டாற்றினார்.

# 16 ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்



யாழ்ப்பாணம் நல்லூரில் வாழ்ந்த கந்தப்பர் சிவகாமிப்பிள்ளை தம்பதியின் ஐந்தாவது மகனாக ஆறுமுகநாவலர் 1822 ஆம் ஆண்டு அவதரித்தார். இவரது பிள்ளைத் திருநாமம் ஆறுமுகம் என்பதாகும். இவர் பிறந்த காலத்தில் இலங்கையில் நிலவிய அந்நியர் ஆட்சி காரணமாக நாட்டின் வடபகுதியில் மொழியும் சமயமும் அடக்கியொடுக்கப் பட்டிருந்தது. 1505 இல் ஏற்பட்ட போர்த்துக்கேயர் படையெடுப்பு சுதேசிகளிடம் தம் மொழியையும், பண்பாட்டினையும், சமயத்தையும் திணித்தது. அதன் பின் வந்த ஒல்லாந்தர் ஆரம்பத்தில் செய்த அடக்கு முறையைத் தொடரவில்லை எனினும் மொழியும், சமயமும் சீர்குலையக் காரணமாயினர். அத்துடன் இவர்களின் காலத்தில் ஆலயங்கள் புனரமைக்கப்பட்டதோடு புதிய ஆலயங்களும் எழலாயின.

ஒல்லாந்தரின் பின் வந்த ஆங்கிலேயர் மிஷனரிமார்கள் மூலம் கிறிஸ்தவத்தையும் ஆங்கில மொழியையும் சுதேசிகளிடையே பரப்பலாயினர். இந்நிலையில் தான் ஆறுமுகநாவலர் தோற்றம் பெற்றார்.

ஆறுமுகநாவலர் தமது ஆரம்பக் கல்வியை இருபாலை சேனாதிராச முதலியாரிடமும் சரவணமுத்துப் புலவரிடமும் கற்றார். இவர் தம் சிறு வயதிலேயே இலக்கண, இலக்கியங்களை முறைப்படி கற்றுப் புலமை எய்தினார். ஆறுமுகநாவலர் தமது ஆங்கிலக் கல்வியை யாழ் மத்திய கல்லூரியில் கற்றார். இவர் தமிழ், ஆங்கிலம், சமஸ்கிருதம் போன்ற மொழிகளில் பெற்றுக் கொண்ட புலமையினால் சைவ சமயத்தை மட்டுமின்றிப் பிற சமயங்களையும் அறிந்திருந்தார். ஆறுமுகநாவலர் பெருமான் 1841இல் யாழ். மத்திய கல்லூரியில் ஆசிரியராகச் சேர்ந்தார். பின் சைவ சமயத்தையும் அதன் வளர்ச்சிக் கருவியாகிய கல்வியையும் வளர்க்க வேண்டும் என்னும் பேராசையால், 1848இல் ஆசிரியத் தொழிலைத் துறந்து நாட்டுப் பணிகளில் இறங்கினார். இவர் ஆற்றிய பணிகளை மேல்வரும் அடிப்படைகளில் நோக்கலாம்.

1. சமயப்பணி
2. சமூகப்பணி
3. கல்விப்பணி

## 1. சமயப்பணி

இளமையிலேயே புலமை நலஞ் சிறக்கப் பெற்ற ஆறுமுகநாவலரை யாழ்ப்பாணத்து மக்களெல்லாம் தம் சமய குரவர் எனப் போற்றி வந்தனர். "தமிழ், சமயம் ஆகிய இரண்டும் என் இரு கண்கள். அவை இரண்டும் ஒளி குன்றாமல் இறுதிவரை காத்துப் பயன் கொள்வதே என் கடன். அவை வாழப் பணி புரிதலே என் வாழ்வின் குறிக்கோள்" என்று வாழ்ந்து பணி செய்தவர் ஆறுமுகநாவலர். இவர் புரிந்த சமயப் பணிகளை மேல்வருமாறு வகுத்து நோக்கலாம்.

**அ . பிரசங்கம் செய்தல்**
**ஆ . புராண படனஞ் செய்தல்**
**இ . கண்டனங்கள் செய்தல்**
**ஈ . பிரபந்தங்கள் இயற்றுதல்**

### அ. பிரசங்கம் செய்தல்

அழிந்து கொண்டு குற்றுயிராய் இருந்த சைவத்தை வளர்க்க நாவலர் தம் சொல்லாற்றலைக் கையாண்டார். பிரசங்கம் மூலம் சைவத்தை இவ்வுலகில் நிலைநிறுத்த முயன்றார். 1847இல் வண்ணார்பண்ணைச் சிவன் கோவிலில் நாவலர் தம் முதற் பிரசங்கத்தை நிகழ்த்தினார். நாவலர் அவர்களின் பிரசங்கங்கள் பொதுவாக கடவுள் வாழ்த்து, சிவபக்தி, வேதாகமங்கள், திருவிழா, யாக்கை நிலையாமை, சிவதீட்சை, மகளிர் ஒழுக்கம், தருமம், செய்ந்நன்றியறிதல், கல்வி கற்பித்தல், பிரபஞ்சம், மாயை, பேதமை, கொல்லாமை போன்ற பொருள்களில் அமைந்திருந்தன. பிரசங்கத்தின் சிறப்புக் கருதி திருவாவடுதுறை ஆதீனம் இவருக்கு "நாவலர்" என்னும் பட்டத்தை வழங்கிக் கௌரவித்தது.

### ஆ. புராண படனஞ் செய்தல்

கோயில்களில் புராண படனஞ் செய்யும் முறை ஈழத்தவர்க்கே உரிய தனிச் சிறப்புக்குரியதாகும். இந்த முறை ஆறுமுகநாவலரால் சமயப் பிரசார ஊடகமாகப் பயன்படுத்தப்பட்டது. புராண படனமுறை என்பது ஒருவர் புராணப் பாடல்களைப் பாட, இன்னொருவர் அதன் பொருளைக் கூறும் முறையாகும். இதில் பாடுபவரும் சரி, பொருள் சொல்பவரும் சரி பாடல் போல இசைத்துத்

தான் பாடுவர். இப்புராண படனம் மூலம் கல்வியையும் சமய பக்தியையும் வித்துவத்தையும் ஆறுமுகநாவலர் மக்களிடத்து ஏற்படுத்தினார்.

### இ. கண்டனம் செய்தல்.

ஆறுமுகநாவலர் தம் சமயத்துக்கு எதிராகச் செயற்பட்டவர்கள் மீது கண்டனங்களை மேற்கொண்டார். இக் கண்டனங்களை இரு நிலைகளில் மேற்கொண்டார். ஒன்று, கிறிஸ்தவ சமயத்தின் மேல் தொடுத்த கண்டனங்கள். மற்றையது, சுதேசிய சமய வாதிகள் மேல் தொடுத்த கண்டனங்கள்.

### ஈ. பிரபந்தங்கள் இயற்றுதல்.

சைவத்தை வளர்க்கும் நோக்கில் நாவலர் சில பிரபந்தங்களை இயற்றியுள்ளார். அதாவது,

- புலோலி ஸ்ரீ பசுபதீஸ்வரப் பெருமான் திருவூஞ்சல்.
- கதிர்காமக் கந்தன் மீது பாடிய கீர்த்தனைகளும் சில தனிப்பாடல்களும்

## 2. சமூகப்பணி

ஆறுமுகநாவலர் சமயப் பணிகள் மட்டுமன்றிச் சமூகப் பணிகளிலும் ஈடுபட்டுள்ளார். அத்துடன் அரசியலிலும் ஈடுபட்டிருக்கிறார். இவரின் சமூகப் பணிகளுக்கு எடுத்துக் காட்டாகக் கஞ்சித்தொட்டித் தருமம், மட்டக்களப்பு யாழ்ப்பாண வேளாண்மைச் சங்கம் என்பன குறிப்பிடத்தக்கவை. கஞ்சித்தொட்டித் தருமமானது 1876, 1877இல் இலங்கையின் வடபகுதி உட்பட பல இடங்களிலும் ஏற்பட்ட கொடிய பஞ்சத்தினால் மக்களுக்கு உண்டான பசி, பட்டினியைப் போக்குவதற்காக ஆறுமுகநாவலரால் மேற்கொள்ளப்பட்ட ஒரு பணியாகும்.

## 3. கல்விப் பணி

சைவ சமயக் கல்வியை வளர்ப்பதற்கு ஆறுமுகநாவலர் ஆற்றிய பணிகளை மேல்வருமாறு கூறலாம்.

- 1848இல் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணை மற்றும் கோப்பாய் ஆகிய இடங்களில் சைவப்பிரகாச வித்தியாசாலைகளை நிறுவியமை.
- 1864இல் தமிழகம் சிதம்பரத்தில் சைவப்பிரகாச வித்தியாசாலையை நிறுவியமை.
- 1849இல் சென்னை மற்றும் நல்லூரில் வித்தியாநுபாலன இயந்திரசாலை என்னும் அச்சியந்திரசாலைகளை நிறுவியமை.
- மாணவர்களுக்கு ஏற்ற வகையில் பாலர் பாடம் 1ஆம், 2ஆம், 3ஆம், 4ஆம் புத்தகங்களை எழுதி வெளியிட்டமை.

- சைவ வினாவிடை 1ஆம், 2ஆம் புத்தகங்களை வெளியிட்டமை.
- இலக்கணச் சுருக்கம், இலங்கைப் பூமி சாஸ்திரம், சிவாலய தரிசன விதி, சிதம்பர மான்மியம் முதலான நூல்களை எழுதி வெளியிட்டமை.
- பெரியபுராண வசனம் எழுதி வெளியிட்டமை.
- ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நன்நெறி, நல்வழி போன்ற நூல்களுக்கு உரையும் இன்னும் பல நூல்களுக்கு புத்துரையும் எழுதி வெளியிட்டமை.

ஆறுமுகநாவலர் இத்தகைய சைவப்பணிகளை ஆற்றியதோடு மாத்திரமன்றித் தனக்குப் பின்னர் தனது பணிகளைத் தொடர்ந்து ஆற்றச் சிவசங்கர பண்டிதர், சி.வை. தாமோதரம்பிள்ளை, பொன்னம்பலபிள்ளை, காசி வாசி செந்திநாத ஐயர், சபாபதி நாவலர், சதாவதானி கதிரவேற்பிள்ளை முதலான சைவப்பெரியார்களை நெறிப்படுத்தி நாவலர் வளர்த்த நன்நெறி ஈழத்திலும், இந்தியாவிலும் தொடர வழிவகுத்தார்.

இத்தகைய பணிகளால் நாவலர் ஈழத்து சைவ சமயத்தின் **மறுமலர்ச்சித் தந்தையாகவும்**, **விடிவெள்ளி**யாகவும் கருதப்பட்டார். 1879ஆம் ஆண்டு மார்கழி மாதம் 21ஆந் திகதி இறையடி சேர்ந்தார். அவரது பூதவுடல் யாழ்ப்பாணம் வண்ணார்பண்ணைக் கோம்பையன் மணல் மயானத்தில் தகனம் செய்யப்பட்டது. அவரது குருபூசைத் தினம் கார்த்திகை மாத மக நட்சத்திரத்தில் அனுட்டிக்கப்படுகிறது.

நாவலர் விட்டுச் சென்ற பணிகளைத் தொடர்ந்து ஆற்றவும் அவரது உடைமைகளைப் பாதுகாக்கவும் நாவலர் சபை உருவாக்கப்பட்டது. இதன் தலைமைத்துவத்தின் கீழ் 1979ஆம் ஆண்டு நாவலர் நூற்றாண்டு விழா நாடளாவிய ரீதியில் கொண்டாடப்பட்டது. நாவலரைச் சுதேசியப் பெரியார்களில் ஒருவராக நமது இலங்கை அரசாங்கம் அங்கீகரித்ததோடு அவரது பணிகளைக் கௌரவித்து முத்திரை ஒன்றையும் வெளியிட்டது.

நாவலரது சைவசமயப் பணிகளை நினைவு கூருமுகமாக நல்லூர்க் கந்தசுவாமி கோயிலுக்கருகில் நாவலர் மணிமண்டபமும் நாவலர் வீதியிலுள்ள அவரது இல்ல வளாகத்தில் இந்து கலாசார திணைக்களத்தினால் நாவலர் கலாசார மண்டபமும், தொல்பொருளியல் திணைக்களத்தினால் யாழ்ப்பாணத் தொல்பொருட்காட்சிச்சாலையும் நிறுவப்பட்டன.

**நல்லை நகர் ஆறுமுகநாவலர் பிறந்திலரேல்**
**சொல்லு தமிழெங்கே சுருதி எங்கே - எல்லவரும்**
**ஏத்து புராணாகமங்கள் எங்கே பிரசங்கமெங்கே**
**ஆத்தனறி வெங்கே அறை.**

என்று ஆறுமுகநாவலரின் பிறப்பின் முக்கியத்துவத்தினை வியந்து பாடியுள்ளார் சி.வை. தாமோதரம்பிள்ளை.



நாவலரது திருவுருவப் படம்



சிதம்பரத்தில் அமைந்த சைவப்பிரகாச வித்தியாசாலை



யாழ்ப்பாணம், வண்ணார் பண்ணையில் அமைந்த சைவப்பிரகாச வித்தியாசாலை



சென்னையில் அமைந்த வித்தியாநுபாலன அச்சகம்



நல்லூரில் அமைந்த வித்தியாநுபாலன அச்சகம்



நாவலர் அணிந்த பட்டு வேட்டி சால்வை, உருத்திராக்கம் மற்றும் பூக்கூடை



நல்லூர் நாவலர் மணி மண்டபம்



நாவலர் நூற்றாண்டு விழாவின் போது உருவாக்கப்பட்ட நாவலர் சிலை




நாவலரைக் கௌரவித்து 1971 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட முத்திரை



நாவலர் கலாசார மண்டபம்

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. ஆறுமுகநாவலர் ஆற்றிய சமயப்பணிகளை வகைப்படுத்துக?
2. ஆறுமுகநாவலரின் சமூகப் பணிகள் யாவை?
3. ஆறுமுகநாவலர் இயற்றிய பிரபந்தங்கள் யாவை?
4. ஆறுமுகநாவலர் வெளியிட்ட நூல்கள் எவை?
5. ஆறுமுகநாவலர் வழியில் நின்று சைவசமயப்பணிகள் ஆற்றிய பெரியார்கள் மூவரின் பெயரைத் தருக.

## செயற்பாடு

01 ஆறுமுகநாவலரின் சமயப்பணிகளும் சமூகப் பணிகளும் என்ற தலைப்பில் ஐந்து நிமிடத்திற்கு ஆற்றக் கூடிய மேடைப்பேச்சு ஒன்றைத் தயாரியுங்கள்.

## பாடச்சுருக்கம்

- 19ஆம் நூற்றாண்டில் சைவமும் தமிழும் தாழ்ந்து கொண்டிருக்கையில் ஆறுமுகநாவலர் நல்லூரில் தோன்றினார்.
- இவர் சமயப் பணி, சமூகப் பணி, கல்விப் பணிகளினூடாகச் சைவத்துக்கும் தமிழுக்கும் தொண்டாற்றினார்.
- புராணபடனம் செய்யும் முறையை அறிமுகஞ் செய்தவரும் நாவலர் பெருமானே.

# 17 முப்பொருள் விளக்கம்

சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்காகும். இவற்றை மெய்கண்ட சாத்திரங்கள் என்றும் அழைப்பர். வேதங்களும் ஆகமங்களும் சைவ சித்தாந்தத்தின் பிரமாண நூல்களாகக் கொள்ளப்படுகின்றன. **வேதம்** பொதுப் பிரமாண நூல். **ஆகமம்** சிறப்புப் பிரமாண நூல். ஆகமத்தின் சாரமாக சைவ சித்தாந்தம் கொள்ளப்படுகிறது. காரணம், வேதம் - பசு. அதன்பால் ஆகமம். அதிற் கடைந்தெடுத்த நெய் - சித்தாந்தம் என்று கொள்ளப்படுகிறது.

## (அ) பதி

எல்லா உயிர்களுக்கும் முதல்வனாய், எங்கும் பரந்தவனாய், எல்லாம் அறிந்தவனாய் உள்ளவன் எவனோ அவனே பதி. இப் பதியானவர் உலகைக் கடந்தவர். அதே சமயம் உலகுக்குள்ளும் உள்ளவர். அதாவது உலகுக்குள்ளும் உயிர்களுக்குள்ளும் வியாபித்து உள்ளவராவார். சைவ சித்தாந்தம் ஒரு கடவுட் கொள்கையுடைய மேலான தத்துவமாகும். இங்கே குறிப்பிடப்படும் இறைவன் (பதி) சிவன் எனக் கொள்ளப்படுகிறான். சிவ சம்பந்தத்தை உடையதான முடிந்த முடிவு என்பதனால் தான் சைவ சித்தாந்தம் என்ற பெயர் இத் தத்துவத்திற்கு ஏற்பட்டது.

உலக உயிர்கள் அனைத்திலும் மேலானவன். நித்தியப் பொருட்களில் முதன்மையானவன் என்று பதி போற்றப்படுகிறான். சைவ சித்தாந்தம் இரண்டு இயல்புகளைப் பதிக்கு உள்ளதாகக் கூறுகிறது. அவை தடத்த இலக்கணம் சொரூப இலக்கணம் எனும் இரு வகைப்படும்.

### 1. சொரூப இலக்கணம்

சொரூபம் நிர்க்குணம் எனப்படும். சைவ சித்தாந்தம் கூறும் இறை தத்துவத்தில் இறைவன் உருவம், குணம், குறி இல்லாததாய்; ஒன்றாய்; பலவாய்; என்றும் உள்ளதாய் எல்லைக்குள் அடங்காததாய்; சிறியதிற் சிறியதாய்; பெரியதிற் பெரியதாய் விளங்குவதே சொரூப இலக்கணம் ஆகும். இவ்வியல்புகளை யெல்லாம் உள்ளடக்கியுள்ள நிலையை 'ஏகன் அநேகன்' எனச் சிவபுராணமும் 'அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்' எனக் கந்தபுராணமுங் கூறுகின்றன.

**நிலவும் அருவுருவமின்றிக் குணங் குறிகளின்றி**
**நின்மலமாய் ஏகமாய் நித்தமாகி அலகிலுயிர்க் குணர்வாகி**
**அசலமாகி அகண்டிதமாயானந்த உருவாயன்றிச்**
**செலவரிதாய் செங்கதியாய் சிறிதாகிப் பெரிதாய்**
**திகழ்வது தற்சிவமென்பர்...**

என்று சிவப்பிரகாசம் குறிப்பிடுகிறது. இப்பாடலின் பொருள், இறைவனின் சொரூப இலக்கணத்தை முழுமையாக வெளிப்படுத்துகிறது. அதாவது பதியே அனைத்திலும் மேலானவன். அவனுக்கு அருவமும் இல்லை. உருவமும் இல்லை. அவன் அழுக்கற்றவன். அவன் ஒருவன். (ஏகன்). நித்தியமானவன் ஆனால் குணங்குறிகள் இல்லாதவன், சலனமற்றவன், எல்லையற்றவன். அதேநேரம் மாறானவர்கட்கு கிட்டுதற்கு அரியன். வழிபடுவோருக்கு எளியன். சிறியவற்றுள் சிறியவன், பெரியவற்றுள் பெரியவன். அவனே சிவன் என்கிறது இப்பாடல் அருவமும் உருவமுமாக உள்ள பதியின் இயல்பை,

**அருவும் உருவும் அறிஞர்க் கறிவாம்**
**உருவும் உடையான் உளன்.**

எனத் திருவருட்பயன் கூறுகிறது. இதே நேரம் கிட்டுவோர்க்கு எளியனாயும் எட்டுவோர்க்கு அரியனாகவும் உள்ள நிலையை,

**நலமிலன் நண்ணார்க்கு நண்ணினர்க்கு நல்லன்**
**சலமிலன் பேர் சங்கரன்.**

என்று மேலும் ஒரு திருவருட்பயன் பாடலில் காணமுடிகிறது. இவ்விதம் யாரும் அறிய முடியாததாகிய பதியை "யாரும் அறிவரிதப் பொருள்" எனச் சிவப்பிரகாசம் குறிப்பிடுகிறது. அதாவது அறிவினால் அறிய முடியாததாயினும் இப்பொருளை அன்பினால் இலகுவில் எட்டலாம் என்பதே இவ் வரியின் பொருள்.

**"அண்டம் கடந்த பொருள். அளவில்லதோர் ஆனந்த வெள்ளப் பொருள்"** எனும் திருப்பல்லாண்டு வரி என்றுமுள்ள அறிவே வடிவான ஆனந்த மூர்த்தியாயிருப்பது இறைவனின் இயற்கையாகும் என்று வெளிக்காட்டுகிறது.

## 2. தடத்த இலக்கணம்

இறைவனுக்குரிய முதலாவது இயல்பு சொரூப இலக்கணம். இது குணம் குறிகளைக் கடந்தது. அதனை மேலே பார்த்தோம். அவனுக்குரிய அடுத்த இயல்பு தடத்த இலக்கணம். அது குணங்குறிகளோடு கூடிய நிலையாகும். இதை இப்போது பார்ப்போம். பூரணனாகிய சிவப்பரம்பொருள் தன்னியல்பான நிலையினின்றும் சாதாரண நிலைக்கு இறங்கி வந்து திருமேனி தாங்கும் நிலையே தடத்த இலக்கணம் எனப்படுகிறது. அதாவது ஆன்மாக்கள் மீது

கொண்ட கருணை மேலீட்டால் இறைவன் தன்னிலையினின்றும் கீழே இறங்கி வருதலே தடத்த இலக்கணம். தடத்தல் - சகுணம். இதனைச் சிவப்பிரகாசம்,

நீங்கலரும் உயிர்க்குயிராய் நிற்றலானும்
நிறுத்திடுவன் நினைத்தவுரு நிமலன்தானே

எனக் கூறுகிறது. அதாவது எல்லா உயிர்களிலும் ஒன்றி நிற்பவனாகிய இறைவன் உயிர்களை நற்பேறு பெறச் செய்தற் பொருட்டு தான் பல்வேறு உருவங்களை எடுக்கிறான். அநாதியே பாசபந்தத்தில் உழலும் ஆன்மாக்களை அப்பந்தத்தினின்றும் விடுவித்தற் பொருட்டு, ஐந்தொழில்களையும் செய்வதற்குரிய வகையில் தன் திருவருளையே திருமேனிகளாகக் கொண்டு அவற்றைச் செய்யும் போது உருவம், குணம், குறி, செயல்களையுடைய மூர்த்திகளாக இருப்பான்.

பரமசிவனின் மேலான கருணை பராசக்தி எனப்படும். அப் பராசக்தியினின்றும் இச்சாசக்தி, ஞானாசக்தி, கிரியாசக்தி என்பவை தோன்றும். பரமசிவன் அச்சக்திகளைப் பொருந்தி நின்று அருட்திருமேனிகளைக் கொண்டு சுத்த மாயையோடு பொருந்தி வேதாகமம் முதலிய கலைகளைத் தோற்றுவிப்பார். அசுத்த மாயையினின்றும் உலகைத் தோற்றுவிப்பார். உரிய காலம் வரை உலகை நிலைநிறுத்திக் காத்து அவற்றைத் தோன்றிய படியே ஒடுக்கிப் பின் தன்னில் ஒடுங்கச் செய்வான்.

அருளினால் உருவு கொண்டு காரணன் அருளானாகில்
என்றும் கதிப்பவர் இல்லையாகும் துடைப்பவன்
உருவாய்த் தோன்றுவதன்றிப் படைக்கவரிதாம்

என்றும், சிவப்பிரகாசம் கூறுவது நோக்கப்பட வேண்டியதாகும். உள்ளம் ஒருவழிப்பட்டு நன்நெறிக்குள் வராத ஆன்மா நன்நிலைக்கு வருவதற்கு பதி காட்டிய எளிய மார்க்கமே தடத்தநிலை ஆகும்.

இறைவன் எடுக்கும் வடிவங்கள் நிஷ்களம், நிஷ்களசகளம், சகளம் எனும் மூன்றுமாம். இவற்றில் பிரம்மா, விஷ்ணு, உருத்திரன், மகேஸ்வரன் ஆகிய நான்கும் சகளத் திருமேனிகள். இவற்றை உருவத் திருமேனிகள் என்றும் கொள்வர். சதாசிவன் நிஷ்களத் திருமேனி, அதாவது அருவத்திருமேனி. சக்தியோடு கூடிய சிவம் நிஷ்களசகளத் திருமேனி, அதாவது அருவுருவத் திருமேனி. குறையொன்றும் இல்லாத இறைவன் உயிர்களை உய்விக்கும் பெருங்கருணையினால் ஐந்தொழில்களைப் புரிகின்றான். அவற்றைச் செய்வதால் அவன் விகாரமடைவதில்லை. இறைவன் அகரம் என்னும் உயிர் அருவம், உருவம், அருவுருவம் முதன்மை கலந்திருத்தல் எனும் ஐந்து சிறப்புகளையும் கொண்டிருப்பதோடு சத்துப் பொருளாகவும் பூரணப் பொருளாகவும் ஞானப் பொருளாகவும் வியாபித்துள்ளான் எனத் திருவருட்பயன் பாடலால் அறியலாம். முழுமையும் நித்தியமுமான பதியை அன்பு செய்து அடைவதே அவனை அணுக இலகுவான வழியாகிறது.

## (ஆ) பசு

பதியைப் போலவே பசுவும் அநாதியானது; நித்தியமானது என்கிறது சைவசித்தாந்தம். பசுக்கள் அளவிறந்தன என்கிறது சிவப்பிரகாசம்.

எண்ணரிதாய் நித்தமாய்......
உற்றிடும் நற்பசு வர்க்கம்

என அது குறிப்பிடுகின்றது.

### 1. பசுவின் இயல்பு

பசு அநாதியே பாசத்தாற் கட்டுண்டது; ஆணவமாகிய இருளால் மறைக்கப்பட்டுள்ளது. ஆணவமுனைப்பால் நல்வினை தீவினைகளை ஆற்றுகிறது. தாம் புரிந்த இருவினைப் பயனை நுகரும் போது புதுவினைகளையும் பெருக்கி எண்ணிறந்த பிறவிகளைப் பெற்று உழலுகின்றன.

"தொல்லை வினையாற் றுவண்டுழலும்
பல்லுயிர்.........."

என்கிறது சிவப்பிரகாசம். பசுக்களின் வினைப்பயன் அவர்களை அநாதியே பற்றியது. இவை இந்திரியங்களாலும், பூதங்களாலும், அந்தக் கரணங்களாலும், சுத்த தத்துவங்களினாலும் பொருந்தி, அறிந்து அனுபவித்தற்குரியன. ஆயினும் இவை இவற்றால்தான் நிகழ்வன என்பதனை அறியமாட்டா இயல்பின. ஆன்மாக்கள் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் எனப்பட்ட ஐந்தவத்தைகளிலும் மிக்க ஆணவத்தால் மறைப்புண்டு அழுந்தி நிற்கும் தன்மையன.

மலங்களினால் பீடிக்கப் பெற்ற ஆன்மாக்கள் விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் எனப்படுவர். அவர்கள் முறையே ஒரு மலத்தார், இரு மலத்தார், மும் மலத்தார் எனப்படுவர்.

மூன்று திறத்துள்ளாரும் மூல மலத்துள்ளார்கள்
தோன்றலர் தொத்(து) உளார்துணை

என்பது திருவருட்பயன் பாடல். அதாவது மூவகை ஆன்மாக்களிலும் மூலமலமாகிய ஆணவம் விலகாது இருக்கும் எனக் கூறப்படுகிறது. மலங்களினால் பீடிக்கப்பட்ட ஆன்மாக்களை சித்தர், பக்தர், சாதாரண மனிதர் என்றும் குறிப்பிடுவர். அப்பிரிப்பு அவர்களைப் பற்றியுள்ள மலங்களின் எண்ணிக்கையால் வந்தது. அதாவது ஒருமலம், இருமலம், மும்மலம் என்ற எண்ணிக்கையாகும்.

ஆன்மாவைப் பசுத்துவம் உடைய ஆன்மா எனச் சிவஞானசித்தியார் கூறுகிறது. இந்த ஆன்மாவுக்குச் சுதந்திரமில்லை. ஐம்பொறிகளின் துணைக்கொண்டு உணர்த்த உணர்வதால் ஆன்மாவுக்குத் தானே அறியும் ஆற்றலும் இல்லை. குருடனுக்கு இருள், ஒளி, பொருள் என்பவற்றைப் பிரித்தறிய முடியாதது போல ஆன்மாவும் உணர்த்த உணருமேயன்றித் தானே அறியாததாகும்.

## 2. பதிக்கும் பசுவுக்குமான தொடர்பு

உயிர் இன்பதுன்பங்களை அனுபவிக்கும் போதே வினைகள் செய்து அவற்றால் பிறவியும், பிறவியால் வினையும் என மாறிமாறி அனுபவிக்கிறது. இதனால் பிறவிப் பெருங்கடல் பெருகிக் கொண்டே போகிறது. உயிரும் அநாதி, உயிருக்காகும் பிறவியும் அநாதியாகிறது. பெருகி வரும் வினைப்பயனை ஒரு பிறப்பில் தீர்க்க முடியாது. எனவே உயிர்கள் பல பிறவி எடுத்து அல்லலுறுகின்றன. அவற்றின் அல்லலைப்போக்கி இறைவன் திருவருளைச் செய்வான்.

**பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்.....**
**அல்லற் பிறவி அறுப்பானே.....**

என்று சிவபுராணம் கூறுகிறது. இவ்வாறு அல்லலுறும் உயிர்கள் இறை மீது அன்பு வழிபாடு கொள்வார்களேயாயின் அவன் கருணை கொண்டு நல்வழிப்படுத்துவான் என்கிறது சைவ சித்தாந்தம். தன்னோடு சேர்க்கும் தாடலை போற் கூடலை ஆக்கியளிப்பான்.

பதியினை வழிபட்டு ஆன்மாக்கள் நற்பேறு பெறும் போது முத்தி நிலையடைவர் என்கிறது சைவ சித்தாந்தம். இது கூறும் முத்திநிலை "தாடலை போற் கூடல்" என்பதாகும். இதனை,

**"தாடலை போற் கூடியவை தான் நிகழா வேற்றின்ப**
**கூடலை நீ ஏகமெனக் கொள்"**

என்கிறது திருவருட்பயன். தாடலை என்பது இரு பொருளாகவும் அதே நேரம் ஒரு பொருளாகவும் கொள்ளப்படும். அதாவது தாள் + தலை என்று இரு பொருளாகவும் தாடலை என ஒரு பொருளாகவும் கொள்ளப்படும். தாள்+ தலை = தாடலை என்பதில் தாள், தலை என இரு வேறு சொற்கள் தாடலை என ஒன்றாகச் சேர்ந்திருப்பது போல், இறைவனும் ஆன்மாவும் வேறு வேறாக இருப்பினும் முத்திநிலையில் இறைவனின் திருவடிகளைக் அடைந்த ஆன்மா பேரின்பத்தில் ஒன்றாகித் திளைக்கின்றது.

## (இ) பாசம்

ஆன்மாக்களைக் கட்டியுள்ளது பாசம். இதனை பந்தம், தளை, மலம் என்றும் அழைப்பர். இம்மலங்கள் மூன்றும் "ஏயு மும்மலங்கள்" எனச் சிவஞான சித்தியார் கூறுகிறது. இம் மூன்று மலங்களையும் ஆணவம், கன்மம், மாயை என்று பாகுபடுத்திக் கூறுவர். ஆன்மாக்கள் அடையும் துன்பங்களுக்கும் அவற்றின் குறைபாடுகளுக்கும் அவற்றை அநாதியே பீடித்து நிற்கும் மலங்கள் தான் காரணம் என்கிறது சைவ சித்தாந்தம்.

### 1. ஆணவம்

இது மூலமலம், சகசமலம், இருண்மலம் என்னும் பெயர்களால் அழைக்கப்படுகிறது. இம்மலம் செம்பிலே களிம்பு போலவும், நெல்லிலே உமி போலவும், ஆன்மாவோடு அநாதியே பிணைந்துள்ளது. இம்மலம் ஆன்மாவின் அறிவை அடக்கி மறையும் படி இருட்படலம் போல மறைத்து நிற்பதனால் இதனை இருண்மலம் என்றும் அழைப்பர். ஆணவமலம் இருளை விடக் கொடுமையானது. ஏனெனில் இருளானது உலகிலுள்ள பிற பொருட்களைக் காட்டமாட்டாதாயினும் தன்னுடைய உருவத்தைக் காட்டுந் தன்மையுடையது. ஆனால் ஆணவம் தன்னையுங் காட்டாது பிற பொருளையுங் காட்டாது.

ஒரு பொருளுங் காட்டாது இருளுருவங்காட்டும்
இரு பொருளுங் காட்டாது இது

என்பது திருவருட்பயன். "நெல்லின் முளை தவிடுமி போல் அநாதியாக நிறுத்திடுவர்" என்கிறது சிவப்பிரகாசம். எனவே அநாதியே உயிர்களைப் பற்றியுள்ள இம்மலமும் அநாதியானதே ஆகும்.

உயிர்களின் ஆணவத்தின் வலியை அடக்கும் இயல்பு திருவருளே ஆகும். எனவே அகிலத்தில் ஆணவம் வலிகெடச் செய்வதே திருவருள்.

அருளிற் பெரியது அகிலத்து வேண்டும்
பொருளிற் தலையிலது போல்"

என்கிறது திருவருட்பயன்.

## 2. கன்மம்

ஆணவத்தினால் கட்டுண்ட பசு அவற்றின் முனைப்பினால் செருக்குண்டு செயலாற்றுகிறது. இச்செய்கைகள் நல்வினை தீவினை எனப்படுகின்றன. இவ்விரு வினைகளே கன்மம் எனப்படுகின்றன. இந்த நல்வினை, தீவினை இரண்டும் சிவநல்வினை, பசுநல்வினை, சிவத்தீவினை, பசுத்தீவினை என நான்கு வகைப்படுகின்றன. இவ்வினைகள் சஞ்சிதம், பிராரத்துவம், ஆகாமியம் என மூவகைப்படுகின்றன.

பல பிறவிகளிலும் செய்து பயன் இன்னும் அனுபவிக்கப்படாது சேர்ந்திருக்கும் வினைத்தொகுதிக்கு **சஞ்சிதம்** என்று பெயர். அத்தொகுதியிலிருந்து இப்பிறப்பில் நாம் அனுபவிப்பதற்கென எடுக்கப்படும் ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு **பிராரத்துவம்** என்பது பெயர். பிராரத்துவத்தை நாம் அனுபவிக்கும் போது புதிதாக ஈட்டும் வினை **ஆகாமியம்** எனப்படும். இவற்றை முறையே பழவினை, நிகழ்வினை, எதிர்வினை என்றும் கூறலாம்.

காமிகம், நிஷ்காமிகம் என்னும் செயல்களிலே கன்மம் உருவாகிறது. நிஷ்காமிக கன்மம் பயன்கருதாத செயலைக் குறிப்பதாகும். பயன்கருதாத செயலே தருமம். கன்மமானது சுயவிருப்பினை விலக்கி, கடமையைப் பெரிதென மதித்துச் செயற்படும் போது அது தருமமாகிறது. காமிக கர்மம் பயன் கருதிய செயலைக் குறிப்பது.

செயல்களால் வினைகளும் வினைகளால் பிறப்பும் உண்டாகிறது. இவற்றால் நற்பிறப்பு, தாழ்பிறப்பு என்பன உண்டாவதாகச் சிவப்பிரகாசம் கூறுகிறது. ஆன்மாக்களுக்கு வந்து கூடும் கன்மத்தின் வழி மூன்று பிரகாரமாயிருக்கும் என்கிறது அது. இச்சையின் காரியப்பாடே கன்மம். கன்மப்பிரவாகம் இருவினைகளாகிய இரட்டைகள். இருவினைக்குப் பயன் பிறவி.

எனவே ஊழ்வினைகளால் துயருறுவோர் பிறப்பு நிச்சயத்தாலும் நற்கருமங்கள் நற்செயல்களால் மேன்மையுறலாம் என இத்தத்துவம் விளக்குகிறது.

## 3. மாயை

மாயையை இறைவனின் பரிக்கிரகசக்தி என்பர். உடலும் உலகமும் எதிலிருந்து தோன்றுகிறதோ அதுவே மாயை. சைவ சித்தாந்தத்திலே சடவுலகுக்குக் காரணமான ஒரு சடப்பொருளே மாயை எனப்படுகிறது. இம்மாயை சுத்தமாயை, சுத்தாசுத்த மாயை, அசுத்த மாயை என மூவகைப்படும். இவை முறையே சிவதத்துவம், வித்தியாதத்துவம், ஆன்மதத்துவம் எனவுங் கூறப்படும். மேலும் சுத்தாசுத்த மாயை மிச்சிர மாயை எனவும் அசுத்த மாயை பிரகிருதி மாயை எனவுஞ் சொல்லப்படுகின்றன.

உயிர் நிலையாகியது உடம்பு. இவ்வுடம்பைப் போல் மாயாகாரியமாக உள்ளதே உலகம். இவ்வுடம்பு மூன்று தத்துவங்களைக் கொண்டது. அவை முறையே **சிவதத்துவம் - ஐந்து, வித்தியாதத்துவம் - ஏழு, ஆன்மதத்துவம் -24.** ஆக மொத்தம் 36 தத்துவம். இம்முப்பத்தாறும் 96 தத்துவமாக விரித்துக் கூறப்படுவதுமுண்டு.

**சிவதத்துவம் ஐந்து** - நாதம், விந்து, சதாக்கியம், ஈசுரம், சுத்தவித்தை

**வித்தியாதத்துவம் ஏழு** - காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மூலப்பிரகிருதி.

**ஆன்மதத்துவம் -24** - அந்தக்கரணங்கள் நான்கு, தன்மாத்திரை ஐந்து, ஐம்பொறிகள், கன்மேந்திரியங்கள் ஐந்து, பஞ்ச பூத்ங்கள்.

1. **அந்தக்கரணங்கள் நான்கு** – மனம், புத்தி, சித்தம், அகங்காரம்
2. **தன்மாத்திரைகள் ஐந்து** – சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்
3. **ஐம்பொறிகள்** – மெய், வாய், கண், மூக்கு, செவி
4. **கன்மேந்திரியங்கள் ஐந்து** – வாக்கு, வாயு, பாணி, பாதம், உபத்தம்
5. **பஞ்சபூதங்கள்** – நிலம், நீர், வளி, வான், தீ

சிவதத்துவங்கள் ஆன்மாவின் மெய்யுணர்வு விளக்கத்திற்கு உபகாரமாய் நிற்பன. வித்தியாதத்துவங்கள் சமநிலையில் மெய்யுணர்வு பெற உதவுவன.

ஆணவம், கன்மம், மாயை, என்னும் மலங்களால் பிடிப்புற்று அழுந்தும் ஆன்மா அவற்றிலிருந்து விடுபடல் விடுதலை எனப்படுகிறது. ஆன்மாக்கள் ஞானம் பெறுதலே விடுதலை பெறுவதற்கு மார்க்கம் என்று சைவ சித்தாந்தம் குறிப்பிடுகிறது. நன்னெறியாகிய ஞானத்தை எய்தியக்கால் மோட்சத்தை எய்தலாம் எனச் சைவசித்தாந்தம் குறிப்பிடுகிறது. ஆன்மா சிவத்தோடு கூடி, தற்போதம் கெட்டு சிவானுபவத்தைப் பெறுதலே விடுதலை. அதாவது மலங்களிலிருந்து விடுபடுதல். இதற்கு நற்கருமங்கள் ஆற்றுதல் ஏற்புடையதாகிறது.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. சைவ சித்தாந்தத்தின் பிரமாண நூல்கள் யாவை?
2. பதியின் தடத்த இலக்கணத்தைச் சுருக்கமாக விளக்குக?
3. சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்களும் யாவை?
4. மும்மலங்களும் யாவை?
5. சைவ சித்தாந்தம் கூறும் மாயையின் மூன்று நிலைகளும் யாவை?

### செயற்பாடு

01) சைவ சித்தாந்த நூல்களை அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

### பாடச்சுருக்கம்

- சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள்கள் பதி, பசு, பாசம் ஆகும்.
- இவற்றில் மேலானது பதி.
- பசுவானது பாசத்தினால் கட்டுண்டது.
- அன்பு நெறியால் இறைவனை அடைவதன் மூலம் ஆன்மா விடுதலையை எய்தலாம்.

# 18 ஆன்ம ஈடேற்றத்திற்கான வழிமுறைகள்

ஈதல் அறம் தீவினை விட்டு ஈட்டல் பொருள்
காதலர் இருவர் கருத்தொருமித்து
ஆதரவு பட்டது இன்பம் எஞ்ஞான்றும்
பரனை நினைத்து இம்மூன்றும் விடல் வீடு

- ஔவையார்

இறைவன் அருளால் பிறவி எடுத்த உயிரானது உலக போகங்களில் திளைத்து, அனுபவித்து இறுதியில் பரம்பொருளாகிய இறைவனின் பாதத்திற்குச் செல்வதே வீடுபேறாகும். சைவநெறி வீடுபேற்றை அடைவதையே இறுதி இலட்சியமாகக் குறிப்பிடுகிறது. ஆன்மாக்கள், மும்மலங்களினின்று விடுபடுவதன் மூலம் வீடுபேற்றை எய்தலாம். வீடுபேறானது முத்தி, ஆன்ம ஈடேற்றம் போன்ற பெயர்களாலும் அழைக்கப்படும். வீடுபேற்றுக்கான வழிகளாக தீட்சை, சைவ நாற்பாதங்கள் என்பனவும் குறிப்பிடப்படுகின்றன.

## 1. தீட்சை

குரு மூர்த்தியானவர்கள் தம் சீடர்களுக்குத் தவத்தையும் ஞானத்தையும் அளிக்கும் முறையே தீட்சை எனச் சைவசித்தாந்தம் குறிப்பிடுகிறது. “அஞ்ஞானத்தைப் போக்கி, மெய்ஞ்ஞானத்தைத் தருவது” தீட்சை என்று பொருள்படும். “தீட்சை” என்பது “தீஷா” எனும் வடமொழிச் சொல்லில் இருந்து மருவியது.(தீ – தருதல் , ஷா – நீக்குதல்) தீட்சையானது,

1. சமய தீட்சை
2. விசேட தீட்சை
3. நிர்வாண தீட்சை



என மூன்று வகைப்படும். சமய தீட்சையால் சரியைநெறியின்பால் நிற்கும் தகைமையும், விசேட தீட்சையால் கிரியை, யோகநெறியின்பால் நிற்கும் தகைமையும், நிர்வாண தீட்சையால் ஞானநெறியின்பால் நிற்கும் தகைமையும் கிட்டும்.

## 1. சமய தீட்சை

சைவசமயியாகும் உரிமையைத் தருவது **சமய தீட்சை** எனப்படுகிறது. சமய தீட்சை பெற்றவன் "சமயி" எனப்பெயர் பெறுகிறான். சமய தீட்சை பெறுவதால் சிவனின் சிறப்பு மூலமந்திரமாகிய திருவைந்தெழுத்தை (சிவாயநம எனும் பஞ்சாட்சரத்தை) ஸ்தூலமாக உணர்ந்து கணிக்கும் உரிமையும், சிவாகமங்களை ஓதி உணரும் உரிமையும், அவ்வாகமங்கள் கூறும் சரியாபாதத்தில் நிற்கும் உரிமையும் கிட்டும். இதன் மூலம் சிவனின் முதன்மையை ஒருவாறு உணரும் நிலை உண்டாகும்.

## 2. விசேட தீட்சை

சிவலிங்க பூசை செய்வதற்கான தகுதியளிப்பது **விசேட தீட்சை** எனப்படும். சமய தீட்சை பெற்று அதன் வழி நிற்கும் போது ஆணவமலம் வலுவிழக்க, சிவனைச் சிவலிங்க வடிவிற் கண்டு வழிபடுதலாகிய கிரியைநெறியில் விருப்பு உண்டாக, முன்னர் சமய தீட்சையைப் பெற்றவரிடமோ அல்லது வேறொரு ஆசாரியாரிடமோ விசேட தீட்சை பெறலாம். விசேட தீட்சையின் மூலம் சிவலிங்க மூர்த்திக்கு அகப்பூசை, புறப்பூசை செய்யும் முறைகளோடு யோக முறையையும் செய்யும் உரிமையைப் பெறலாம். விசேட தீட்சை பெற்றுக் கிரியா பாதத்தில் நிற்போர் "புத்திரர்" என்றும் யோக பாதத்தில் நிற்போர் "யோகியர்" என்றும் பெயர் பெறுவர்.

## 3. நிர்வாண தீட்சை

சமய தீட்சையும் விசேட தீட்சையும் பெற்றவர்கள் இறுதியாகப் பெறும் தீட்சை **நிர்வாண தீட்சை** எனப்படும். இதன் மூலம் பொய்யைப் பொய் எனக் கண்டு கழித்து மெய்யை மெய் என உணர்ந்து பற்றும் நிலை தானாக எய்யப் பெறும். அத்துவாக்களை அடக்கும் கலையும், முப்பொருள் உண்மையை உணரும் தன்மையும், உயிரை ஞான நிலைக்கு உய்யச் செய்யும் நிலையும் ஞானாசிரியனிடமிருந்து கிடைக்கும். நிர்வாண தீட்சை இரு வகைப்படும்.

**அ) சத்தியோ நிர்வாண தீட்சை** – முற்றாகவே பற்றற்ற நிலையில் இருப்பவர்களுக்கு உடனே முத்திப் பேறு கிடைக்கும் வகையில் செய்யப்படுவது சத்தியோ நிர்வாண தீட்சை எனப்படும்.

**ஆ) அசத்தியோ நிர்வாண தீட்சை** – ஆன்மாக்கள் பிரார்த்த வினைப்பயனை அனுபவித்து முடிந்த பின் அவை முத்திப்பேறு அடையும் வகையில் செய்யப்படுவது அசத்தியோ நிர்வாண தீட்சை எனப்படும்.

இவற்றுக்கு மேலாக அக்கினி காரியத்தால் செய்யப்படுவது **அங்கி தீட்சை** என்றும், அக்கினி இல்லாது செய்யப்படுவது **அங்க தீட்சை** என்றும் அழைக்கப்படும்.

## ஆசாரிய அபிடேகம்

நிர்வாண தீட்சை பெற்ற ஒருவர் குருப்பட்டம் தரிப்பதற்காகச் செய்யப்படும் கிரியை **ஆசாரிய அபிடேகம்** எனப்படும். குருப்பட்டம் பெற்றோர் பிறருக்குத் தீட்சை கொடுக்கவும், பரார்த்த பூசை செய்யவும் தகுதியைப் பெறுவர். இவர் சிவாச்சாரியார் எனவும் அழைக்கப்படுவார். சிவாச்சாரியாருக்கு இருக்க வேண்டிய தகைமைகளைச் சிவாகமங்கள் மேல்வருமாறு கூறுகின்றன.

1. திருமணம் முடித்து இல்லறம் நடத்துபவராக இருத்தல்.
2. உடல், உளக் குற்றமற்றவராக இருத்தல்.
3. கல்வியறிவும் ஒழுக்க மேம்பாடும் மிக்கவராயிருத்தல்.
4. சைவ நாற்பாதங்களில் பயிற்சியுடையோராயிருத்தல்.
5. சீடர்களுக்குச் சிறந்த ஒழுக்கத்தையும் சைவப் பாரம்பரிய நெறிகளையும் போதிக்கக் கூடியவராயிருத்தல்.
6. பதினாறு தொடக்கம் எழுபது வயதிற்குட்பட்டோராயிருத்தல்.

## சிவநெறி ஒழுக்கம்

தீட்சை பெற்றவர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்கங்கள் **சிவநெறி ஒழுக்கங்கள்** எனப்படும். சிவாகமங்கள் நித்தியம், நைமித்தியம், காமியம் ஆகிய வழிமுறைகளைச் சிவநெறி ஒழுக்கமாகக் குறிப்பிடுகின்றன. சிவதீட்சை பெற்றவர்கள் மேல்வரும் தகைமைகளை உடையவர்களாக இருக்க வேண்டுமெனச் சிவாகமங்கள் கூறுகின்றன.

1. ஒழுக்கம், பண்பு, ஆசாரம், குருபக்தி, இறைபக்தி உடையோராக இருத்தல்.
2. இம்மை இன்பத்தில் நாட்டமற்றோராயும், மறுமை இன்பத்தில் நாட்டமுடையோராயும் இருத்தல்.
3. மனம், வாக்கு, காயம் எனும் திரிகரணங்களில் சுத்தியுடையோராக இருத்தல்.
4. முத்தியை மட்டுமே நோக்காகக் கொண்டவராயிருத்தல்.

## ஔத்திரி தீட்சை

ஆன்மாக்களாகிய உயிர்கள் வீடுபேற்றை அடையும் பொருட்டு ஆசாரியாரால் அக்கினி காரியத்துடன் செய்யும் அங்கி தீட்சையே ஔத்திரி தீட்சை எனப்படும். இது ஞானவதி, கிரியாவதி எனும் இருவகைகளில் ஒருவகையாற் செய்யப்படல் வேண்டும் எனச் சிவாகமங்கள் கூறுகின்றன.

குண்டம், மண்டலம், வேதிகை, நெய், சுருக்குச் சுருவம் முதலிய அனைத்தையும் மனதிற் கொண்டு, அகவழியாகச் செய்யும் கிரியைகள் ஞானவதி என்றும், இவ்வனைத்தையும் புறத்தே அமைத்துக் கொண்டு செய்யும் கிரியைகள் கிரியாவதி என்றும் அழைக்கப்படும். இது மந்திரங்களை ஓதி ஆச்சாரியாரால் செய்யப்படுவதால் மாந்திரி தீட்சை எனவும், அங்கங்களைப் பாவித்து ஆச்சாரியாரால் சீடனுக்கு வழங்கப்படுவதால் அங்க தீட்சை எனவும் அழைக்கப்படும். அங்க தீட்சையானது ஆறாக வகைப்படுத்தப்படுகிறது.

1. **நயன தீட்சை** – குரு அங்கநியாச, கரநியாசங்களால் தன்னைச் சிவமாகப் பாவித்து அப்பாவனையுடன் மாணாக்கனைக் கண்ணால் நோக்கி அவன் செய்த கருமங்களை அழித்தொழிப்பது நயன தீட்சை எனப்படும். சிவபெருமானிடம் திருத்தோணிபுரத்திலே திருஞான சம்பந்தர் பெற்றது நயன தீட்சையாகும்.

2. **ஸ்பரிச தீட்சை** – குரு தன் வலக்கையைச் சிவன் கையாகப் பாவித்து மாணாக்கனது சென்னி மேல் வைத்து அவனைச் சிவமாகச் செய்தல் ஸ்பரிச தீட்சையாகும்.

3. **வாசக தீட்சை** – குரு மந்திரங்களைச் சந்தர்ப்பத்திற்கேற்றவாறும், பொருந்துமாறும், மாணவனுக்கு உபதேசிப்பது வாசக தீட்சை எனப்படும். மாணிக்கவாசகருக்கு சிவபெருமான் திருப்பெருந்துறையில் குருந்தமர நிழலில் உபதேசித்தமை வாசக தீட்சையாகும்.

4. **மானச தீட்சை** – குரு தன்னைச் சிவமாகப் பாவித்து அந்தப் பாவனையுடன் மாணாக்கனது ஆன்மாவை உடலினின்றும் பாவனையில் கொண்டு வந்து தனது ஆன்மாவிற் சேர்த்துச் சிவமானதாகப் பாவித்து மீள அவ்வான்மாவை அவனது உடலிற் சேர்த்தல் மானச தீட்சை எனப்படும்.

5. **சாத்திர தீட்சை** – குரு மாணவனுக்குச் சிவாகமங்களையும் திருமுறைகளையும் ஓதுவித்தல் சாத்திர தீட்சையாகும். மாணிக்கவாசகருக்கு சிவபெருமான் திருப்பெருந்துறையில் வைத்து பதி, பசு, பாச விளக்கம் வழங்கியமை இதற்கு உதாரணமாகும்.

**6. யோக தீட்சை** – குரு மாணாக்கனை சிவயோகம் பயிலச் செய்தல் யோக தீட்சை எனப்படும். தட்சணாமூர்த்தியாகிய சிவபெருமான் சனகர், சனாதனர், சனந்தனர், சனற்குமாரராகிய நான்கு பேருக்கும், மெய்மை புரிய வைத்தமை யோக தீட்சையாகும்.

**ஒளத்திரி தீட்சை செய்யும் படிமுறைகளைச் சிவாகமங்கள் மேல்வருமாறு கூறுகின்றன.**

| | | |
|---|---|---|
| 1. **மண்டலம் அமைத்தல்** | - | தீட்சைக் கிரியைக்கான சரியான இடத்தை ஒழுங்கு செய்தல். |
| 2. **குண்டம் அமைத்தல்** | - | ஓமம் செய்யும் இடத்தை ஒழுங்கு செய்தல். |
| 3. **குரு தயாராதல்** | - | குரு தம் கடமைகளை நிறைவு செய்த பின்னர் உத்தரியம், தலைப்பாகை, உருத்திராக்கம் என்பன அணிதல். |
| 4. **சிவோகம் பாவனை செய்தல்** | | குரு தம்மைச் சிவனாகப் பாவித்து தீட்சை மண்டலத்தினுட் செல்லல் |
| 5. **சுத்தி செய்தல்** | - | அஸ்த்திர மந்திரத்தால் தானசுத்தி செய்து துவாரபாலகருக்குப் பூசை செய்து மந்திர நீர் தெளிப்பதன் மூலம் சுத்தி செய்யப்படும். கும்பம் வைத்து மகாலஷ்மி, பிள்ளையார், அட்டதிக்குப் பாலகர், மண்டலேசுரர் ஆகியோருக்கு பூசை செய்தல். |
| 6. **கிரியைகளைச் செய்தல்** | - | தீட்சை பெறத் தயாராயுள்ள சீடரை முன்னிலைப் படுத்தி ஓமாக்கினி வளர்த்து விதிமுறையாக ஓமஞ் செய்தல். |
| 7. **நயன தீட்சைவழங்கல்** | - | குரு சீடனுக்கு தலை முதல் பாதம் வரை அருட்பார்வை செய்தலாகும். |
| 8. **ஸ்பரிச தீட்சைவழங்கல்** | - | குரு தம் வலக்கையை சீடனின் உச்சந்தலையில் வைத்தலாகும். |
| 9. **வாசக தீட்சைவழங்கல்** | - | சீடனின் தலையையும், தம் தலையையும் பட்டுத்துணியினால் போர்த்தி பிள்ளையார், சிவபெருமான், உமாதேவியார், முருகன் ஆகிய கடவுளர்களுக்கான மூல மந்திரங்களை உரைத்தலாகும். |

## சமய தீட்சை பெற்றவர்களுக்கான ஒழுக்கம்

சமய தீட்சை பெற்றவர்கள் தம் பொது வாழ்க்கையிற் கொல்லாமை, கள்ளாமை, புலால் உண்ணாமை, கள்ளுண்ணாமை, மனத்தைரியம் மீதான விலகல் முதலான இயம ஒழுக்கங்களையும் தவம், இறை நம்பிக்கை, ஈகை, முதியோர் வணக்கம், செருக்கின்மை, மெய்ஞ்ஞானச் சிந்தனை, நன்மை தீமையறிதல் முதலான நியம ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தல், பஞ்சதோத்திரம் ஓதுதல், புராண பாராயணம் செய்தல், ஆலயத்தொண்டு செய்தல், ஆலய வழிபாடு போன்ற நற்கருமங்களிலும் ஈடுபடல் வேண்டும்.

இவற்றை விட ஒழுக்கக் கோட்பாடுகளான நீராடல், நித்திய கருமம் செய்தல், வழிபாடு, ஜெபம், தியானம், குருலிங்க சங்கம சேவை என்பவையும் முக்கியமானவை. இத்தகைய பயிற்சிகளால் உலகப்பற்றைக் குறைத்து ஈற்றில் முத்திப்பேறு பெறுதல் எளிதாம்.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. தீட்சை எனும் சொல்லின் பொருளைத் தருக.
2. தீட்சை எத்தனை வகைப்படும்? அவை யாவை?
3. ஔத்திரி தீட்சையின் பிரிவுகளைக் குறிப்பிட்டு விளக்குக.
4. தீட்சையை வழங்கும் ஆச்சாரியார்களுக்கு இருக்க வேண்டிய தகைமைகள் எவை எனச்சிவாகமங்கள் குறிப்பிடுகின்றன?
5. ஔத்திரிய தீட்சை வழங்கும் படிமுறைகளைச் சிவாகமங்கள் எவ்வாறு கூறுகின்றன?

### செயற்பாடு

01. பாட ஆசிரியரின் துணையுடன் உங்கள் பிரதேசத்தில் தீட்சை வழங்கும் செயற்பாட்டினை ஏற்பாடு செய்ய முனையுங்கள்.

### பாடச்சுருக்கம்.

- தீட்சை முத்திக்குரிய வழிவகைகளுள் ஒன்றாகும்.
- தீட்சை என்பது அஞ்ஞானத்தைக் கெடுத்து மெய்ஞ்ஞானத்தைக் கொடுத்தலாகும்.
- அனுபவமும் தகைமையும் மிக்க குருவிடமே தீட்சை பெறல் வேண்டும்.
- தீட்சை பல்வேறு வகைப்படும்.
- தீட்சை பெற்றவர்கள் மட்டுமே சைவ சமயிகளாகின்றனர்.

# 2. சைவ நாற்பாதங்கள்

பிறவித் துன்பம் நீங்கி பிறவாமையாகிய பேரின்பத்தை வேண்டி, இறைவனின் பாதங்களை அடைவதற்கு அனுசரிக்க வேண்டிய படிமுறைகளாகச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கங்களைச் சைவ சமயம் கூறுகிறது. இவை முறையே தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்னும் நான்கு மார்க்கங்களாக அடியார்களால் அனுசரிக்கப்பட்டன. இவை ஒவ்வொன்றும் சரியையில் சரியை, சரியையில் கிரியை, சரியையில் யோகம், சரியையில் ஞானம்...... என நான்காய் விரிவடைந்து பதினாறுபடிகளாய் அமையும். இப்படிகள் ஒவ்வொன்றும் உபாய மார்க்கம், உண்மை மார்க்கம் என இவ்விரண்டாக நோக்க முப்பத்திரண்டாகக் கொள்ளப்படுகிறது.
உபாய மார்க்கம் - உலக வாழ்வில் நின்றபடி இறையருளை வேண்டி ஏதாவது வழிமுறையைப் பின்பற்றி ஒழுகுதலாகும்.

உண்மை மார்க்கம் - உலகப்பற்றை மெல்ல மெல்ல விட்டவர்கள் அம்மார்க்கங்களிலேயே தமக்கேற்ற ஒரு வழியைப் பின்பற்றி இறையருளை நாடி நின்று வேறு பயன் கருதாது ஒழுகுதலாகும். இவ்வாறான மார்க்கங்களில் நின்று ஒழுகிய பெரியார் சரிதைகளைப் பெரியபுராணம் குறிப்பிடுகின்றது. இவற்றுக்கான நியதிகளையும் நியமங்களையும் சரித்திர நூல்கள் கூறுகின்றன.

## அ. சரியை

அன்பின் துணையோடு உடம்பினால் செய்யும் இறைபணிகள் அனைத்தும் சரியை நெறியாகும். இலகுவில் செய்யக்கூடிய ஆரம்ப முயற்சியான இதற்குத் தூய தெய்வ பக்தியில் இறையச்சமும் துணை நிற்க வேண்டும். திருநாவுக்கரசர், அப்பூதியடிகள், திருக்குறிப்புத்தொண்ட நாயனார், அதிபத்த நாயனார், கண்ணப்ப நாயனார், திருநாளைப் போவார் போன்றோர் இந்நெறியில் நின்று முத்தியடைந்தவர்கள் ஆவர். இந்நெறியில் நிற்போர் சிவனை ஆண்டானாகவும் தம்மை அடிமையாகவும் கொள்ளும் **தாச மார்க்கத்தைக்** கடைப் பிடிப்பவர்களாவர். தாச மார்க்கம் பற்றி திருமந்திரம் மேல்வருமாறு குறிப்பிடுகின்றது.

எளிய நல் தீபம் இடல் மலர் கொய்தல்
அளியின் மெழுகல் அதுதூர்த்தல் வாழ்த்தல்
பளிபணி பற்றல் பன்மஞ்சனம் ஆதி
தளி தொழில் செய்வது தான் தாச மார்க்கமே.

(எளிய - எளிதாக, பணிவாக; நல்தீபம் இடல் - விளக்கேற்றுதல்; அளியின் - அன்புடன்; தூர்த்தல் - குப்பை கூளங்களை கூட்டிக் வெளியே குவித்தல்,

அதாவது திருவலகிடுதலாம்; பளி - பள்ளி என்பதன் இடைக்குறை; பள்ளி - கோயில்; தளி - கோயில் )

சிவாலயத்தை அலகிடுதல், மெழுகுதல், கழுவுதல், பூஞ்சோலையமைத்தல், பூப்பறித்துக் கொடுத்தல், பூமாலைகட்டுதல், பூசைத்திரவியம் கொடுத்தல், பூசைக்குரிய பொருட்களைத் துலக்கிச்சுத்தம் செய்தல், விளக்கிடல், தீவர்த்தி, குடை, கொடி பிடித்தல், வாகனம் காவுதல் முதலியன சரியைத் தொண்டுகளாகும். இந்நெறி நின்றோர் சாலோக முத்தியையும் சிவனின் உலகை அடைதலாகிய சிவலோகத்தையும் பெறுவர்.

## ஆ. கிரியை

மந்திர தந்திரங்களைக் குரு மூலமாக அறிந்து சமய, விசேட, நிர்வாண தீட்சைகளைப் பெற்றோர் மேற்கொள்ளும் வழிபாட்டு முறை கிரியையாகும். தம் பொருட்டு தம்மளவில் வழிபடும் ஆன்மார்த்த பூசையும், பிறர் பொருட்டு ஆலயங்களிலே செய்யப்படும் பரார்த்த பூசையும் இந்நெறியுள் அடங்கும். இந்நெறி நின்று சண்டேஸ்வரரும், திருஞானசம்பந்தரும் முத்தி பெற்றனர். இந்நெறி சிவனுக்கு அருகில் இருக்கும் சற்புத்திர மார்க்கமாகும். சற்புத்திர மார்க்கம் பற்றி திருமந்திரம் மேல்வருமாறு குறிப்பிடுகிறது.

பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்திட் டன்னமும் நீர்சுத்தி செய்தல் மற்(று)
ஆசற்ற சற்புத்திர மார்க்கமாகுமே.

(பூசித்தல் - பூசை செய்தல்; வாசித்தல் - திருமுறை ஓதுதல்; அன்னம் நேசித்து இடல் - அன்னதானம் இடல்; நீர் சுத்தி செய்தல் - சுத்தி செய்தல்(திரவிய) மற்றும் பிற செயல்களாலும் கிரியையானது குற்றமற்ற சற்புத்திர மார்க்கம் ஆகின்றது.)

## இ. யோகம்

சரியை, கிரியை ஆகிய நெறிகளை விட மேலானதாக இந்நெறி சாத்திர நூல்களில் கூறப்படுகிறது. இதற்கு இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய அட்டாங்க யோக உறுப்புக்கள் உள்ளன. இவ்வட்டாங்க யோகங்களிலும் பயிற்சி பெற்று படிப்படியாகத் தேறியவாறே யோக நெறியை அனுசரிக்க முடியும். இதனை யோகியரிடம் பயின்ற திடசித்தமுடையவர்களே அனுட்டித்து ஈடேற முடியும்.

யோகியர், திருமூலர், பெருமிழைலைக்குறும்பர், சேரமான் பெருமாள் நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார் ஆகியோர் இந்நெறியில் நின்றோராவர். இந்நெறி நட்பு மார்க்கமாக ஒழுக வேண்டியதால் இந்நெறி மூலம் சாரூப முத்தியும் சிவரூபம் பெறும் பாக்கியமும் பெறுவர். இச்சக மார்க்கம் பற்றி திருமந்திரம் மேல்வருமாறு குறிப்பிடுகிறது.

யோகச் சமாதியின் உள்ளே அகலிடம்
யோகச் சமாதியின் உள்ளே உளர் ஒளி
யோகச் சமாதியின் உள்ளே உள் சக்தி
யோகச் சமாதி உகந்தவர் சித்தரே.

(அகலிடம் - பரந்த இடமாகிய உலகம்; உளர் ஒளி - சுடர் விட்டுப்பிரகாசிக்கும் ஒளி)

## ஈ. ஞானம்

ஞானமானது ஆன்மாவாகிய தன்னை சிவார்ப்பிதஞ் செய்தல். அதாவது சிவனை உருவம், அருவம், அருவுருவம் ஆகிய மூன்று திருமேனிகளையும் கடந்து சச்சிதானந்தப் பிழம்பாய் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கும் இறைவனை அறிவால் வழிபடுதலாகும். கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கூடல் என்னும் நான்கு அங்கங்கள் இந்நெறிக்கு உண்டு. முன்னைய மூன்று நெறிகளிலும் நின்று பக்குவம் பெற்ற சாதகனை இறைவன் குரு வடிவிலே வந்து தீட்சை உபதேசம் செய்து ஞானத்தை அளித்து முத்தியை வழங்குவார்.

மாணிக்கவாசகர், மெய்கண்டார், ஆகியோருக்கு குரு உபதேசம் கிடைத்தமையும் அருணகிரிநாதருக்கு முருகனே குருவாய் வந்து உபதேசம் செய்தமையும் ஞான நெறியின் சான்றுகளாகும். இந்நெறியில் நிற்பதன் மூலம் சாயுச்சிய முத்தியும் சிவமேயாகி ஒன்றுதலாகிய பாக்கியமும் கிட்டும். சிவமோடு ஒன்றியதனால் சன்மார்க்கமாகிறது. இச்சன்மார்க்கம் பற்றி திருமந்திரம் மேல்வருமாறு குறிப்பிடுகிறது.

தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்ய
பரிசிக்க கீர்த்திக்கப் பாதுகம் சூடக்
குருபக்தி செய்யும் குவலயத்தோருக்குத்
தருமுத்திச் சார்பூட்டும் சன்மார்க்கம் தானே

(கீர்த்தித்தல் - புகழ் பாடல்; பாதுகம் - திருவடி; முத்திச்சார்பு - முத்தியாகிய சார்பு; அதாவது சிவத்தை சார்ந்திருக்கும் சார்பு)

முற்பிறவியின் தவப்பயனாய் இப்படிமுறைகளில் நின்று ஒழுகாமலேயே சிவனருளால் பூரண ஞான நிலை இளமையில் தோன்றி பிரகாசிப்பதும் உண்டு.

மெய்கண்டார், திருஞானசம்பந்தர், கண்ணப்ப நாயனார் போன்றோர் இதற்குச் சான்றாகும்.

சரியை, கிரியை, யோகம், ஞானமெனும் மார்க்கங்களைத் தம் வாழ்விற் வாழ்ந்து காட்டிய நாயன்மார்கள் பற்றி பெரியபுராணம் விரித்துரைக்கின்றது. சைவ சமயம் கூறும் அன்பு நெறியாக சைவ நாற்பாதங்கள் மிளிர்கின்றன. இவ்வகையான மார்க்கங்களைப் பின்பற்றுவதால் உலக இன்பங்களை அனுபவித்துப் பின் முத்தியடைதலாகிய பிறவிப்பயனையும் அடைய முடிகிறது. இந்நான்கு நெறிகளையும் பற்றித் தாயுமானவர்

**விரும்புஞ் சரியை முதன் மெய்ஞ்ஞான நான்கு**
**மரும்புமலர் காய்கனி போலன்றோ? பராபரமே!**

எனக் குறிப்பிடுகிறார்.

**பொழிப்புரை :** (நால்வர்களாலே) விரும்பப்பட்ட சரியை முதலாகிய மெய்ஞ்ஞான மிகுதியாக உள்ள நான்கும் சோபான முறையில் (முறையே) அரும்பு, மலர், காய், கனியைப் போல் (ஒன்றுக்கொன்று ஏதுவாக விளங்கும்) அல்லவா? பராபரமே!

ஞானத்தை நாம் ஒரு கனிக்கு ஒப்பிடின் சரியை அரும்பு என்றும், கிரியை மலர் என்றும், யோகத்தை காய் என்றும் குறிப்பிடலாம்.

முத்தியில் நாட்டமுடையோர் இவற்றுள் எதனைப் பின்பற்றி ஒழுகினாலும் அது முடிவிலே ஞானத்துக்கு இட்டுச் சென்று இறைவனோடு கலத்தலாகிய பரமுத்தியையே நல்கி விடும்.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. சரியைத் தொண்டுகளாவன யாவை?

2. மேல்வரும் மார்க்கங்களைச் சுருக்கமாக விளக்குக.
   அ. உண்மை மார்க்கம்
   ஆ. உபாய மார்க்கம்

3. கிரியை நெறிபற்றி திருமந்திரம் கூறும் விடயங்களை விளக்குக.

### செயற்பாடு

மேல்வரும் அட்டவணையைப் பூரணப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

| நெறி | ஒழுகிய சமய குரவர் | நின்ற மார்க்கம் | அடைந்த முத்தி நிலை | உவமிக்கும் நிலை |
|---|---|---|---|---|
| சரியை | | | | |
| கிரியை | | | | |
| யோகம் | | | | |
| ஞானம் | | | | |

### பாடச்சுருக்கம்

- சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன இறைவனை அடைவதற்காகப் பின்பற்றக்கூடிய பல்வேறு மார்க்கங்களாகும்.
- இதன் வாயிலாக அனுபவம் படிப்படியாக வளர்ச்சியடையும்.
- சமய குரவர்கள் இந்நெறியில் நின்று வாழ்ந்து காட்டிய உதாரண புருஷர்களாவர்.

# 19 நாட்டார் சமய வழிபாடு

ஈழத்துச் சைவ மக்களால் இருவகையான வழிபாட்டு முறைகள் கடைப்பிடிக்கப்படுகின்றன. விதிமுறைக்குட்பட்ட வழிபாட்டுமுறை, விதி முறைகளுக்கு உட்படாத வழிபாட்டு முறை என்பனவே அவை இரண்டுமாகும். விதிமுறைக்கு உட்படாததை ஆகமம் சாராத வழிபாடு எனவுங் கூறலாம். இது நாட்டார் வழிபாடு, கிராமிய வழிபாடு, ஊர்த்தெய்வ வழிபாடு, குலதெய்வ வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு, மாலைத் தெய்வ வழிபாடு, எல்லைப்புற வழிபாடு போன்ற பெயர்களாலும் அழைக்கப்படுகிறது. ஆகம வழிபாட்டில் எவ்வாறு கிரியைகள் பிரதான இடம் பெறுகின்றனவோ, அவ்வாறே நாட்டார் வழிபாட்டில் சடங்குகள் பிரதான இடம் பெறுகின்றன.

நாட்டார் வழிபாடு யாழ்ப்பாணம், வன்னி, மட்டக்களப்பு, மலையகம் எனத் தமிழ் மக்கள் செறிந்து வாழும் பிரதேசங்களில் காணப்படுகின்றன. பிரதேசத்துக்குப் பிரதேசம் அவ்வப் பிரதேச மக்களின் வழக்காறு, சமூக அமைப்பு என்பவற்றின் அடிப்படையில் இவ்வழிபாடு மேற்கொள்ளப்படுகிறது. பயம், நம்பிக்கை, மரபு என்பவற்றின் மூலம் குறிக்கப்பட்ட தெய்வங்களுக்கு நேர்த்தி வைத்து, குளிர்த்தி செய்து, பலி கொடுத்து வழிபடுகின்றனர். நாட்டார் தெய்வங்களை ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள், கற்தெய்வங்கள் என வகைப்படுத்தி வழிபடுகின்றனர். ஆண் தெய்வங்களே எண்ணிக்கையில் அதிகமாயினும், பெண் தெய்வங்களும் வழிபடப்பட்டு வருகின்றன. ஒரு சில கற்தெய்வங்களும் காணப்படுகின்றன. சிறிய கட்டடங்கள் அல்லது பந்தல் அமைப்பான இடங்களில் தான் இவை குடிகொண்டிருக்கின்றன.

இவ்வழிபாட்டில் ஆண்டுப் பொங்கல் பிரதானமானது. இப்பொங்கல் வருடத்தில் மாசி, பங்குனி, வைகாசி மாதங்களுக்கிடையில் நடைபெறும், இச்சடங்கை பூசாரிமாரே பிரதானமாக நிகழ்த்துவர். (நாட்டார் தெய்வங்கள் பற்றியும், சடங்குகள் பற்றியும் முன்னைய வகுப்புகளில் நீங்கள் படித்திருப்பீர்கள் அல்லவா?)

நாட்டார் தெய்வ வழிபாடு பிரதேசத்துக்குப் பிரதேசம் வேறுபாடு கொண்டதாயினும் அது மேல்வரும் பொது இயல்புகளையும் கொண்டிருப்பதைக் காணலாம்.

- ஒரு குடும்பம், சாதி என்பவற்றுக்கு மட்டும் உரியவை.
- பிராமணர் அல்லாதோரால் பூசை செய்யப்படுபவை.
- உயிர்ப்பலியினைப் பெரிதும் ஏற்பவை.
- நித்திய வழிபாடு அற்றவை.

- ஒரு பிரகாரத்தை மட்டும் உடையவை.
- சடங்குகள் உத்தரவு பெற்றே நிகழ்பவை.
- ஆசாரங்கள் பெரிதும் அற்றவை.
- பெரிதும் மந்திரங்களால் உச்சாடனம் செய்யப்படுபவை.
- பகைமையை அழிக்கும் தன்மை கொண்டவை.

நாட்டார் வழிபாட்டில் ஆண் தெய்வங்களும் அவற்றுக்கான ஆலயங்களும் ஆங்காங்கே காணப்படுவது போல் பெண் தெய்வ ஆலயங்களும் பரந்துபட்டளவிற் காணப்படுகின்றன. ஒரு சில கற்தெய்வ ஆலயங்களும் காணப்படுகின்றன. பெண் தெய்வங்களுள் கண்ணகியும், சீதையும் குறிப்பிடத்தக்கவர்களாவர். இவர்களுக்கான பல்வேறு ஆலயங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் வேலம்பரை, வற்றாப்பளை, மட்டுவில், காரைதீவு, களையோடை, செட்டிபாளையம் ஆகிய இடங்களிற் காணப்படும் கண்ணகி அம்மன் ஆலயங்களும், நுவரெலியாவிற் காணப்படும் சீதையம்மன் ஆலயமும் குறிப்பிடத்தக்கன. பெரும்பாலும் பத்தினித் தெய்வ வழிபாடாகக் காணப்படும் இப்பெண் தெய்வ வழிபாடு சிறப்பாக ஈழத்துச் சைவ மக்களிடையே பேணப்பட்டு வருகிறது.

கண்ணகி வழிபாட்டில் கண்ணகி வழக்குரை காவியம், சிலம்புகூறல், கோவலன் கதை, குளிர்த்திப்பாடல், ஊர்சுற்றுக்காவியம், மழைக்காவியம் போன்றன பாராயணம் பண்ணப்படுவதுடன், இவ்வழிபாட்டு முறைகளால் வைசூரி, கண்நோய், குக்கல், வெப்பு, சின்னம்மை, வயிற்றுக்கடுப்பு, பெருஞ்சுரம் என்பன நீங்குவதோடு, மழை பெய்து வேளாண்மை பெருகும் என்ற நம்பிக்கைகளும் காணப்படுகின்றன. கண்ணகி, இராஜேஸ்வரி, மனோன்மணி, நாகேஸ்வரி, நாகபூஷணி போன்ற ஆகம மயப்படுத்தப்பட்ட பெயர்களாலும் அழைக்கப்படும் மரபும் காணப்படுகிறது.

இலங்கையில் காணப்படும் கண்ணகி அம்மன் ஆலயங்களில்

(1) காரைதீவு கண்ணகி அம்மன் ஆலயம்.

(2) வற்றாப்பளை கண்ணகி அம்மன் ஆலயம்.

என்பன பிரசித்தமானவை.

## 1. காரைதீவு கண்ணகி அம்மன் ஆலயம்.

### அ. ஆலய அமைவிடம்

கிழக்கிலங்கையின் மட்டக்களப்பு நகரிலிருந்து தெற்காகச் செல்லும் நெடுவீதியில் 27ஆவது மைல் தொலைவில் அம்பாறைக்குச் செல்லும் வீதி பிரியும் சந்தியில் இவ்வாலயம் அமைந்துள்ளது. கண்ணுக்கு எட்டியதூரம் வரை வயல்வெளிகளும் மறுபக்கம் கடற்கரை சார்ந்த தென்னை மரச்சோலைகளும், மூதூர்க்



குடியிருப்புடன் காணப்படும் பசுமைமிகு சூழலில் காணப்படும் இவ்வாலயம் சிறந்த வரலாற்றைக் கொண்டது.

ஆ. ஆலய வரலாறு.

மிகப்பழைய வரலாற்றைக் கொண்ட இவ்வாலயம் பற்றிக் கண்ணகி வழக்குரை, வசந்தன் கவித்திரட்டுப் போன்ற நூற்பாடல்களில் அறியலாம். இவ்வாலயச் சிலை முதலாம் கஜபாகு மன்னனால் கொண்டுவரப்பட்டதென்பது ஐதிகமாகும். இந்தியாவிலிருந்து கண்டிக்கு வந்த கண்ணகி வழிபாடு, கண்டியிலிருந்து வீரமுனைக்கு வந்து காரைதீவுக்கு வந்திருக்கலாம் என நம்பப்படுகிறது.

இ. கர்ணபரம்பரைக்கதை.

ஆதியில் கண்ணகி சிலையுடன் ஒரு கிழவியும் அவளது மகளும் கதிர்காம யாத்திரைக்காக வந்தனர். வந்தவர்கள் காரைதீவில் வேப்ப மரத்தின் கீழ் தமது மூட்டை முடிச்சுகளை வைத்துத் தங்கினர் எனவும், இவர்கள் தாங்கள் கொண்டுவந்த கண்ணகி சிலையை அம்மரத்தடியில் வைத்து முறத்தால் மூடி தினசரிப்பூசை செய்யும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர் எனவும் அறிய முடிகின்றது.

அந்நாட்களில் ஒரு நாள் பூசை நேரத்தில் அட்டப்பள்ளத்திலிருந்து இப்பகுதியை ஆண்ட வன்னிமை யானை மீதேறி நாட்டுவளம் (சிங்காரத்தோப்பு) காண அவ்வழியே சென்றபோது யானை அவ்விடத்தில் மண்டியிட்டுக் கிடக்கலாயிற்று. வன்னிமை செய்வதறியாது திகைத்து நின்றபோது, பூசை வழிபாட்டுக்காக நின்ற சிலரின் வேண்டுகோளுக்கமைய பூசை செய்த கிழவியான அம்மையார் தான் சிலைக்கு அபிஷேகம் செய்த தீர்த்தத்தை எடுத்துச் சென்று யானையின் மீது தெளித்ததும் அது எழுந்தது. இதனால் பக்திப்பரவசம் அடைந்த வன்னிமை வைத்த நேர்த்திக்கடனால் இவ்வாலயத்திற்கு நிலையான கட்டடம் அமைக்கப்பட்டதுடன், அவ்வாலயத்தில் பூசையும் தொடர்ந்து நடைபெறலாயிற்று.

ஈ. ஆலய பரிபாலனம்.

சிலையைக் கொண்டுவந்த கிழவியின் மகளின் சந்ததியினரே இக்கோயிலுக்கு இன்றும் தொண்டு செய்கின்றனர். அவர்களது சந்ததியைச் சேர்ந்த மூன்று கப்புகமார்கள், மூன்று தருமகர்த்தாக்கள், மூன்று கணக்குப் பிள்ளைமாரோடு ஆறுபேர் அடங்கிய ஒரு குழுவும் உள்ளிட்ட பதினைந்து பேர் கொண்ட பரிபாலன சபையினரால் ஆலயம் பரிபாலிக்கப்படுகிறது.

### உ. ஆலயமகிமை.

அக்காலத்தில் தேசத்து வன்னிமையாக விளங்கிய "கங்கன்" தன் மனைவியுடன் கோயிற் பூசைக்குச் சமுகமளித்த நேரத்தில் அவனது மனைவியின் கண்கள் இரண்டும் பார்வையிழந்து போயின. தன் மனைவியின் பரிதாப நிலை கண்டு கலங்கி மனம் வருந்திய கங்கன் கண்ணகித் தாயாரின் அருள் வேண்டி நேர்த்திக்கடன் புரிந்தான். கண்ணகித் தாயாரின் அருளால் வன்னிமையான கங்கனின் மனைவியின் பார்வை கிடைக்கப் பெற்றமையால் ஈற்றில் 101 ஏக்கர்க் காணியை ஆலயத்திற்கு மானியமாக உரிய நேர்த்திகளோடு கொடுத்ததாகவும் கூறப்படுகிறது. இவ்வாலயத்தின் தலவிருட்சமாக வேப்பமரம் காணப்படுகிறது.

### ஊ. பூசைகளும் ஆலய விழாக்களும்.

ஆதியிலிருந்தே வருடத்திற்கொரு முறையே கோயிற் கதவு திறக்கப்பட்டு பத்து நாள் சடங்கும், குளிர்த்தியும் வைத்த பின்னர் கதவைப் பூட்டிவிடும் வழக்கமும் காணப்பட்டது. பின்னர் வெள்ளிக்கிழமைகளில் பொங்கல் செய்து வெளியில் வைத்துப் படையலிடும் வழக்கமுங் காணப்பட்டது. காலப் போக்கில் வெள்ளிக் கிழமைகளில் பூசகர் வந்து ஆலயக்கதவினைத் திறந்து பூசை செய்யும் நடைமுறையும் உருவாகியது. இன்று ஆகமம் சாரா நெறிமுறைகளிலிருந்து ஆகமஞ் சார் நெறி முறைகளை நோக்கி மாற்றமடைந்து வரும் வழிபாட்டு முறைகளைக் கொண்டுள்ள இவ்வாலயத்திற்கு விமானம், அர்த்தமண்டபம், மகா மண்டபம் என்பன அமைக்கப்பட்டுக் கும்பாபிஷேகமும் செய்யப்பட்டுவிட்டது. புதிய மாற்றங்களுக்கும் அமைப்புகளுக்கும் ஆலயம் உட்பட்டிருந்தாலும் பாரம்பரிய வழிபாட்டு முறைகளே இன்றும் பின்பற்றப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

இன்றும் பூசைகள் மூன்று காலங்களிலும் அந்தணர்களால் நடத்தப்பட்டு வருகின்றன. அத்தோடு மாத சங்கிராந்தி அபிஷேகங்களும் பூரணைத் தினங்களில் விசேட அபிஷேகப் பூசையும் நடத்தப்படுகிறது. பங்குனி உத்தரத்தன்று தீர்த்த உற்சவம் இடம்பெறத்தக்க வகையில் வருடாந்த மகோற்சவம் பத்து நாட்கள் நடாத்தப்படுகிறது.

இவ்வாலயத்தில் இடம்பெறும் உற்சவங்களுள் வைகாசி மாதத்தில் ஆற்றப்படும் **வைகாசித் திங்கள் திருக்குளிர்ச்சி** விழாவே சிறப்பானதாகும். அது நாட்டார் மரபில் அமைந்ததோடு அதனை **கப்புகனார்** தலைமைதாங்கி நடத்துகிறார். திருக்குளிர்ச்சி சடங்கு எட்டு நாட்கள் நடாத்தப்படும். முதலாவது நாளாகிய திங்கட்கிழமை மாலை காரைதீவு சமுத்திர தீர்த்தத்திலிருந்து தீர்த்தம் எடுத்து வரப்படுதலும் அதனைத் தொடர்ந்து கல்யாணக் காலுக்குரிய பூவரசமரம் வெட்டப்பட்டுக் கல்யாணக்கால் சுப வேளையில் நாட்டப்படுதலும் இடம்பெறும்.

அதன் பின்னர் கண்ணகி வழக்குரை, ஊர் சுற்று காவியம் என்பன படிக்கப்படும். ஐந்தாம் நாள் கோவலனுக்கும் கண்ணகிக்கும் கல்யாணச்சடங்கு இடம்பெறும். ஆறாவது நாள் கப்பற் சடங்கும், ஏழாவது நாள் பச்சைகட்டற் சடங்கும் இடம்பெறும். எட்டாம் நாள் அதிகாலை இடம்பெறும் குளிர்த்திச் சடங்கே இங்கு இடம்பெறும் இறுதிச் சடங்காகும். அதிகாலை நான்கு மணியளவில் திருக்குளிர்ச்சி பாடப்படும் இதனை, திருக்குளிர்ச்சி பாடுவோர் மரபில் வந்தவர்களே பாடுகின்றனர். இங்கு வழங்கப்படும் **திருக்குளிர்ச்சித் தீர்த்தம்** தீராத நோய்களெல்லாம் தீர்த்து வைக்கும் மகிமை வாய்ந்தது. இன்றைய தினம் அடியவர்கள் தம் நேர்த்திக்கடன்களை நிறைவேற்றுதல், பொங்கல் பொங்கி மடை பரவுதல் என்பனவற்றை நிறைவேற்றி, கண்ணகைத் தாயின் அருட்கடாட்சத்தினை வேண்டி நிற்பர்.



கண்ணகி வழக்குரை படிக்கப்படும் புராதன ஆலயம்



எழுந்தருளி அம்மன் (கண்ணகி)







ஆகம விதிக்கமைய அமைக்கப்பட்ட புதிய ஆலயம்



காரைதீவு சமுத்திர தீர்த்தத்தில் தீர்த்தம் எடுக்கச் செல்லுதல்.



திருக்குளிர்ச்சிச் சடங்கும், திருக்குளிரச்சித் தீர்த்தமும்.



தல விருட்சம் - வேம்பு

## 2. வற்றாப்பளை கண்ணகி அம்மன் ஆலயம்.

### அ. ஆலய அமைவிடம்.



வன்னிப் பிரதேசத்தின் முல்லைத்தீவு மாவட்டத்தின் வற்றாப்பளை என்ற கிராமத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது. முள்ளியவளை, தண்ணீரூற்று ஆகிய கிராமங்கள் இந்த ஆலயத்தின் அயற் கிராமங்களாகும்.நந்திக்கடலும், வயல்வெளிகளும், பாலைமரச் சோலையும் சூழ்ந்த பசுமையான சூழலில் ஆலயம் அமைந்துள்ளது.

### ஆ. ஆலய வரலாறு.

அடங்காப்பற்று என அழைக்கப்படும் இவ் வன்னிப் பிரதேசத்தை வன்னிமைகள் ஆட்சி செய்தபோது யாழ்ப்பாண மன்னர்கள், போர்த்துக்கேயர், ஒல்லாந்தர் போன்றோருக்கு கப்பம் செலுத்தினர். இவர்களின் பின் வருகைதந்த ஆங்கிலேயர்களை எதிர்க்குமளவிற்கு வீரம் கொண்டவர்களாகப் பிற்காலத்தில் விளங்கினர். இத்தகைய வன்னி மன்னர்களால் பரிபாலிக்கப்பட்ட இவ்வாலயத்தை போர்த்துக்கேயர் காலத்தில், போர்த்துக்கேய தளபதியாகிய நெவில் என்பவன் அழிக்க முற்பட்ட போது ஆலயத்தில் நின்ற பன்னிச்சை மரம் தனது காய்களை வீசி ஆலயத்தை அழிக்க விடாது தடுத்தது. இவ்வற்புத வரலாற்றை ஆலயத்தில் இன்றும் படிக்கப்படும் **பன்னிச்சை ஆடிய பாடற்சிந்து** மூலம் அறிய முடிகிறது.

### இ. கர்ண பரம்பரைக்கதை.

வற்றாப்பளை நந்திக்கடலோரத்தில் அமைந்துள்ள வயல்வெளிகளில் இடைச் சிறுவர்கள் தமது மாடுகளை மேய்ப்பதற்காக அழைத்துச் செல்வர். ஒருநாள் வழக்கம்போல் இவர்கள் மாடுகளை மேயவிட்ட பின்னர் விளையாடிக் கொண்டிருந்தனர். அப்போது அவர்களை நோக்கி வெள்ளைச் சேலையுடனும் தளர்ந்த நடையுடனும் கையிலுள்ள தடியை ஆதாரமாக ஊன்றியபடி வயதில் முதிர்ந்த பெண்ணொருத்தி வந்தார். அவரை வரவேற்ற இடைச் சிறுவர்கள் அருகிலுள்ள வேப்ப மரத்தடியில் உழவு கலப்பைக்கு வெட்டி உள்ள **வேப்பம்படவலுக்கு** (வேப்பங்குற்றி) மேல் இருத்தினர். தனக்குப் பசி என பாட்டி கேட்டவுடன், பசுக்களில் பாலைக் கறந்து அவசரமாகப் பொங்கி, பொங்கலைப் படைக்க அருகில் உள்ளமரத்தில் இலைகளைப் பிடுங்கி பாட்டியிடம் கொடுக்க, அவற்றைக் கோர்வை செய்து தட்டாக்கினாள். இதில் தனக்குப் பொங்கலைத் தருமாறு கேட்டாள். சந்தோஷமாகச் சாப்பிட்டாள். களைப்பு நீங்கிய பாட்டி தன் தலையிலுள்ள பேனை எடுக்குமாறு

இடைச்சிறுவர்களைக் கேட்டாள். இடையர்கள் அவளது தலைமயிரை விரித்த போது பல கண்கள் இருப்பதைக் கண்டு பயந்து ஊர் மக்களுக்குத் தெரியப்படுத்தினர். ஊர்மக்கள் வந்து பார்த்த போது பாட்டி அவ்விடத்தில் இல்லை. பாட்டி இருந்த இடத்தில் வேப்பம் படவாள் தழைத்திருந்ததைக் கண்டு அவர்கள் ஆச்சரியம் அடைந்தனர்.

பாட்டி இருந்த வேப்ப மரத்தடியில் கோயிலமைத்து வருடந்தோறும், வைகாசி மாத பௌர்ணமி தினத்திற்கு அண்மையில் வரும் திங்கட்கிழமையில் பொங்கல் வைத்து வழிபடுகின்றனர். வேப்ப மரத்தடியில் கொட்டில் அமைத்து நாட்டுப்புற மரபில் வழிபடப்பட்ட ஆலயம் தற்போது ஆகம மரபுகளுக்கமைய தூபி, அர்த்த மண்டபம், மகா மண்டபம், இராஜகோபுரம் என்பன அமைக்கப்பட்டு விநாயகர், நாகதம்பிரான் முதலான பரிவார ஆலயங்களுடன் திகழ்கிறது. ஆலயத் தலவிருட்சமாக வேப்பமரம் (வேப்பம் படவாள்) காணப்படுகிறது.


புராதன கண்ணகி அம்மன் திருவுருவம்


கருவறையிலுள்ள கண்ணகியம்மன் (உமை)


எழுந்தருளி அம்மன்


வாசற் கோபுரச் சிற்பம்


ஆலயத் தூபி


மஞ்சம்


சிலாபத்துறைக் கடலில்,
விளக்கேற்றுவதற்காகத் தீர்த்தமெடுத்தல்.


வெளி வீதி

ஈ. ஆலய பூசைகளும் விழாக்களும்.

இவ்வாலயத்தில் முன்னைய காலங்களில் கட்டாடிமாரே பூசைச் சடங்குகளைச் செய்தனர். ஆனால் இன்று அபிஷேகம் ஆராதனை அலங்காரம், வேதபாராயணம் என்பவற்றை அந்தணர்களே செய்கின்றனர். ஆகமமுறைக்கு மாற்றம் பெற்றாலும், வைகாசிப் பொங்கற் சடங்கு சிறப்பான அம்சமாக நடைபெறுகிறது. இது பல்வேறு சிறப்பம்சங்களைக் கொண்டது. பொங்கல் பற்றி அயற் கிராமங்களுக்கு அறிவிக்கும் பாக்குத் தெண்டல், முல்லைத்தீவு சிலாவத்துறைக் கடலில் இருந்து மண்முட்டிகளில் நீர் எடுத்து ஊர்வலமாக தீர்த்தக்குடம் வருதலும், இக்குடங்களுடன் அருகில் உள்ள காட்டு விநாயகர் ஆலயத்துக்கு கொண்டு சென்று கடல் நீரில் விளக்கேற்றுதலும் பின் சிலம்பு கூறலைப் படித்து, பறை, உடுக்கு என்பவற்றைப் பயன்படுத்தி, இசை வழங்கி கண்ணகி அம்மன் ஆலயத்திற்குக் கொண்டு வருவர். கண்ணகியம்மன் ஆலயத்தில் கடல் நீரில் விளக்கேற்றி கட்டாடிமாரால் கும்பம் வைக்கப்படும். கச்சுநேரல், மடைபரவுதல், கட்டுச் சொல்லுதல் மேற்கொள்ளப் பட்டபின், வளர்ந்து நேரல் இடம் பெறும். வளர்ந்து நேர்ந்தவுடன் ஆலய வெளி வீதி எங்கணும் பல்லாயிரக் கணக்கான பொங்கல் பானைகள் அடுப்பில் ஏற்றப்படும். பொங்கல் பொங்கி தூளிபிடித்தல், திருக்குளிர்த்தி பாடுதல், அம்மானை பாடுதல், மஞ்சத்தில் எழுந்தருளி அம்மன் பவனி வருதல் போன்றவற்றுடன் வைகாசிப் பொங்கல் முடிவடையும்.

கட்டாடிமார் மரபில் வந்த பக்தஞானி என்பவருக்குரிய பொங்கல், **பக்த ஞானியார் பொங்கல்** என்ற பெயரில் அடுத்து வரும் வெள்ளிக்கிழமை நடைபெறும். பொங்கல் வேளையின் பின் வட்டக்களரியில் கோவலன் கூத்து ஆடப்படுவதுடன், கரகம், கும்மி, கோலாட்டம் போன்ற கலை நிகழ்ச்சிகளும் இடம்பெறும்.

## நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்குகளை ஆற்றுப்படுத்துவோர்.

நாட்டார் தெய்வ வழிபாட்டில் சடங்குகள் முக்கியமானவை. இச்சடங்குகளை நிறைவேற்றுவோர், ஆற்றுப்படுத்துவோர் எனப்படுவர். பிரதேச ரீதியாக இவர்களால் ஆற்றப்படும் சடங்குகள் மேல்வருமாறு அமைகின்றன.

1. பூசாரிமார் வழிபாட்டுமுறை.
2. கட்டாடிமார் வழிபாட்டுமுறை.
3. கப்பூகனார் வழிபாட்டுமுறை.
4. ஆதிக்குடிகள் வழிபாட்டுமுறை.
5. வேறு வழிபாட்டு முறைகள்.

எனப் பல்வேறு வழிபாட்டு முறைகள் நாட்டார் சமய வழிபாட்டில் ஆற்றுப் படுத்துவோரால் · நிறைவேற்றப்படுகின்றன.

## 1. பூசாரிமார் வழிபாட்டு முறை

மந்திரங்கள் ஊடாகத் தெய்வங்களுடன் தொடர்புபட்டு வழிபாட்டை நிகழ்த்துபவர்கள் பூசாரிகள் எனப்படுவர். இவர்கள் எட்டுமுழ வேட்டி கட்டி அதன்மேல் சால்வையை அணிந்து கொள்வதுடன், திருநீற்றுப் பூச்சுடன் கழுத்திலும், சிரசிலும் உருத்திராக்க மாலையுடன் காணப்படுவர். கைகளில் சூலம், வெள்ளிப் பிரம்பு, கைச்சலங்கை, கைமணி, சாட்டை என்பவற்றையும் வைத்திருப்பர். இவர்களால் வீரபத்திரர், சுடலைமாடன், மதுரைவீரன், வதனமார், பெரியதம்பிரான், முத்துமாரி, பத்திரகாளி, திரௌபதை, மகாமுனி, பெரியண்ணசாமி, கருப்பண்ணசாமி, முனியாண்டிசாமி போன்ற தெய்வங்களுக்கும் சடங்குகள் நடத்தப்படுகின்றன.



சடங்கை மேற்கொள்ளும் போது குறித்த தெய்வங்களுக்கு மந்திரங்களின் மூலம் மடை பரப்பப்படும். இவர்கள் தெய்வம் ஆடுபவர்களுக்கு உருக்கொடுப்பர். பலி கொடுக்கும் போது உரிய தெய்வங்களுக்குரிய மந்திரங்களை உச்சாடனம் செய்வர். தெய்வம் ஆடாதவர்களையும் ஆடச்செய்வர். இவ்வாறான வேளைகளில் மன ஒருமைப்பாடு மிக்கவர்களாகக் காணப்படுவர். ஆலய ஆண்டுப் பொங்கலின் போது கூத்துக்களை முன்னின்று நடத்தி அதனூடாகத் தெய்வ வழிபாட்டை வளப்படுத்துபவர்களாயும் இருப்பர்.

மாசி மாதத்தில் நடைபெறும் சாமிமலை மகாமுனி ஆலய ஆண்டுப் பொங்கலுக்கு முன்னைய நாளில் இடம் பெறுகின்ற பொன்னர் சங்கர் கூத்தும், தொடர்ந்து நடைபெறும் விழாக்களும் பூசாரிமாரால் நடத்தப்படுகின்றமை, பூசாரி வழிபாட்டு முறைக்குச் சான்றாயமைகிறது. சூனியம் செய்தல், வளவு காவல் பண்ணுதல், அட்சரக்கூடு செய்து கொடுத்தல், திருநீறு போடுதல், பேய்க்குப் பார்த்தல், போன்றவற்றையும் பூசாரிமார் முன் நின்று நடத்துவர். இவர்கள் உடுக்கு, மணி, தப்பு, சிலம்பு போன்ற இசைக்கருவிகளைப் பயன்படுத்தித் தம் இஷ்ட தெய்வங்களை மன்றாடி, பாடல்கள் மூலம் அழைத்துத் தம் வேண்டுகோளை நேரடியாகத் தெய்வங்களிடம் முன் வைத்துத் தேவைகளை நிறைவேற்றுவர் என்ற நப்பிக்கையும் மக்களிடம் நிலவுகிறது.

## 2. கட்டாடிமார் வழிபாட்டு முறை



கட்டாடி என்பது தமிழில் குறிசொல்லுபவன் அல்லது வண்ணான் எனப் பொருள்படும். இவன் பூசை செய்பவனாகவும், பாரம்பரிய முறையிலமைந்த கிரியைகள் செய்பவனாகவும் காணப்படுகிறான். இங்கு பக்தியால் தெய்வத்தைக் கெஞ்சிக் கேட்கும் முறை பின்பற்றப்படுகிறது. "பாலன் புலம்புகின்றேன் பாலன் முகம் பார் தாயே" போன்ற பாடலடிகள் இதற்கு உதாரணமாகும். கட்டாடி முறையில் பத்ததி இடம் பெறுவதால் அகவல், தாலாட்டு, காவியம் ஆகிய பாவனைகளும் உடுக்கு, சிலம்பு, தவில், ஆகியவற்றின் ஒலிகளும் இடம் பெறுகின்றன. வற்றாப்பளை கண்ணகி அம்மன் ஆலயத்தில் இவர்களாலேயே வைகாசிப் பொங்கல் பூசை, வழிபாட்டு நிகழ்வுகளும் நிகழ்த்தப் படுகின்றன.



## 3. கப்பூகனார் வழிபாட்டு முறை

கப்புகன் வழிபாடு என்பது வாய் திறவாத நிலையில் வாயைச் சீலையால் கட்டிக்கொண்டு பூசை வழிபாடுகளை நிகழ்த்துவதைக் குறிக்கும். இவ்வழிபாட்டுமுறை இரண்டு வகைப்படும்.

**அ. கருவறைத் திரையை திறந்து பூசை செய்யும் முறை**

இங்கு உருவ உபாசனையும் ஐம்புலத்தறிவையும் கண்களே கொள்ளத்தக்கதாக ஏக இந்திரிய நிலையில் மனதை ஒருநிலைப்படுத்தி வழிபாடு செய்யப்படுகிறது.

**ஆ. கருவறைத் திரையை திறவாது பூசை செய்யும் முறை**

இங்கு அருவ உபாசனை நடைபெறும். கப்பூகன் ஐம்புலன்களையும் அடக்கி ஞான நிலையில் மனதை ஒருவழிப்படுத்தி வழிபாடு செய்கிறான். கப்பூகன் வழிபாட்டு முறையானது கதிர்காமத்தில் சிறப்பாக மேற்கொள்ளப்படுகின்றது.

## 4. ஆதிக்குடிகள் வழிபாட்டு முறை

ஆதிக்குடிகளான வேடர்கள் பொது வழிபாட்டை மேற்கொள்கின்றனர். குறித்த இடத்தில் ஆண்டுக்கொரு முறை தற்காலிகப் பந்தல்கள் அமைத்து வழிபடுவது பொது வழிபாடாகும். வீடுகளில் சிறிய பந்தல்களை அமைத்து

## நாட்டார் தெய்வங்கள்



நாட்டார் தெய்வ ஆலயம்



முனியாண்டிச் சாமி



பெரியண்ண சாமி



கருப்பண்ண சாமி



திரௌபதை அம்மன்

## நாட்டுப்புறக் கலைகள்



காவடி



கரகாட்டம்



பொய்க்கால் குதிரையாட்டம்

கும்பம் வைக்காது மடைப் பொருட்களை மட்டுமே வைத்து மேற்கொள்ளப்படும் இவ் வழிபாட்டில் குமார தெய்வம், நாச்சிமார், கன்னிமார், சீதை, மதுரைவீரன் ஆகிய தெய்வங்கள் முன்னிலைப்படுத்தப்படுகின்றனர்.

## 5. ஏனைய வழிபாட்டு முறைகள்

குடும்பத்தோடு ஒருவன் வழிபடுவதை சுய வழிபாட்டு முறை என்பர். வீடு, தொழிற்களம் திறந்த வெளி போன்றன சுய வழிபாட்டிற்குரிய இடங்களாகும். எழுத்து வடிவிலான எவ்விதிகளும் இங்கு பின்பற்றப்படுவதில்லை. இவ்வழிபாட்டில் ஈடுபடுவோரே தமக்குத் தெரிந்த அகவல், தேவார திருவாசகங்களைப் பாடி வழிபாட்டினை மேற்கொள்வர்.

இத்தகு வழிபாடுகளை விட **திருநீற்று ஆண்டிகள்** என்ற ஆண்டிகள் கூட்டத்தினர் தாம் கூடுகின்ற இடங்களிற் சில தெய்வங்களைப் பக்தியுடன் வழிபடுவர். இவ்வாறான பிற வழிபாட்டு முறைகளும் நாட்டார் வழிபாட்டு முறைகளாகக் கொள்ளப்படுகின்றன.

## நாட்டார் தெய்வ வழிபாடும் சமூகமும்

சைவத் தமிழ் மக்கள் வாழ்வியலுடன் நாட்டார் வழிபாடு பெரிதும் இணைந்துவிட்டது. இதனால் இவ்வழிபாடும் அதனோடு தொடர்பான தெய்வங்களும் சமூகத்தில் முக்கியத்துவம் பெற்றுவிட்டன. நாட்டார் தெய்வ வழிபாட்டால் குடும்ப ஒற்றுமை, செய்யும் தொழில் விருத்தி, அன்றாடக் காரியங்கள் நிறைவேறுதல், தீராத நோய் தீர்த்தல் போன்றன இடம் பெறுகின்றன. பெரும்பாலான தெய்வங்கள் ஒரு குடும்பத்தினருக்கோ அல்லது குறிப்பிட்ட ஒரு சாதியினருக்கோ உரியவைகளாகக் கொள்ளப்படுகின்றன. அந்தணர்கள் அல்லாதவர்களால் பூசைகள் நிறைவேற்றப்படுகின்றமை, ஆசாரங்கள் இல்லாமை போன்ற காரணங்களால் சமூகத்தில் இவை இலகுவில் இணைந்து விட்டன. ஒரு பிரதேசத்தில் வழிபடப்படுகின்ற தெய்வங்கள் இன்னொரு பிரதேசத்தில் வழிபடப்படுவதில்லை. அதே நேரம் சில தெய்வங்கள் ஒரு பிரதேசத்தில் பிரதான தெய்வமாக வழிபடப்பட்ட அதே தெய்வம் வேறொரு பிரதேசத்தில் பரிவாரத் தெய்வமாக வழிபடப்படுவதால் அத்தெய்வங்கள் சமூகத்தில் முக்கியத்துவம் பெற்றுவிட்டன.

பெரும்பாலான தெய்வங்கள் பலியிடலை ஏற்பன. இன்று மிருகபலியிடல் சட்டத்தினால் தடைசெய்யப்பட்டுள்ளது சடங்கை அடிப்படையாகக் கொண்ட முத்துமாரி, சீதை, கண்ணகி, ஐயனார் போன்ற தெய்வங்கள் இன்று ஆகம நெறிக்குள் உட்படுத்தப்பட்டுவிட்டன. இக் காரணத்தினாலும் இவ்வழிபாடு சமூகத்தோடு ஒன்றிணைந்துவிட்டது. ஒவ்வொரு தெய்வங்களும் சிறந்த குணவியல்புகளைக் கொண்டவை. இதனால் வழிபடுபவர்கள் அதற்குரிய

பலன்களைப் பெற்றுள்ளனர். சமரசம் பேணல், பகைமை தீர்த்தல், நம்பிக்கை போன்ற காரணங்களும் இவ்வழிபாடு சமூகத்தோடு இணையக் காரணமாகி விட்டன. கிராமியக் கலைகளான கரகம், காவடி, கோலாட்டம், பொய்க்கால் குதிரையாட்டம், கூத்துக்கள் மற்றும் கிராமிய விளையாட்டுக்கள் என்பன இவ் வழிபாட்டோடிணைந்து வளர்ச்சியடைந்தமையானது நாட்டார் தெய்வ வழிபாடு சமூகத்தில் செல்வாக்குப் பெறக் காரணமாயமைந்து விட்டது.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. நாட்டார் வழிபாடு வேறு எப்பெயர்களால் அழைக்கப்படும்.?
2. நாட்டார் தெய்வங்களை எத்தனையாக வகைப் படுத்தலாம்? ஒவ்வொன்றிற்கும் இவ்விரு உதாரணங்கள் தருக.
3. ஈழத்திற் பிரசித்தி பெற்ற கண்ணகி அம்மன் ஆலயங்கள் இரண்டைப் பெயரிடுக.
4. கண்ணகி வழிபாட்டின் போது படிக்கப்படும் இரு இலக்கியங்களைத் தருக.
5. நாட்டார் வழிபாட்டை ஆற்றுப்படுத்துபவர்களில் இரு வகையினரைப் பெயரிடுக.
6. ஆகம நெறிக்குட்பட்ட நாட்டார் தெய்வங்கள் இரண்டைக் கூறுக.

## செயற்பாடு

01) உமது பிரதேசத்தில் வழிபடப்படும் கிராமிய ஆண் தெய்வங்களையும், பெண் தெய்வங்களையும் அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

02) நாட்டார் சமய வழிபாடு என்ற தலைப்பில் ஒரு வில்லுப்பாட்டை ஆக்கி ஆசிரியரின் துணையுடன் செயற்பாடாக நிகழ்த்திக் காட்டுக.

## பாடச்சுருக்கம்

- மக்கள் வாழ்வியலோடு இணைந்த வழிபாடு நாட்டார் வழிபாடாகும்.
- இவ்வழிபாடு பல பெயர்களால் அழைக்கப்படுவதோடு பல பொதுப்பண்புகளையும் கொண்டுள்ளது.
- காரைதீவு கண்ணகி அம்மன், வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆகிய இரண்டும் பிரசித்தி பெற்ற கண்ணகி அம்மன் ஆலயங்களாகும்.
- நாட்டார் வழிபாட்டை பூசாரிமார், கட்டாடிமார், கப்பூகன்மார், ஆதிக்குடிகள், சுயவழிபாட்டுக்காரர், ஆண்டிகள் ஆகியோர் ஆற்றுப்படுத்துகின்றனர்.
- சமூகத்தின் விருத்தியால் சில நாட்டுப்புறத் தெய்வங்கள் ஆகம நெறிமுறைக்குட்படுத்தப்பட்டு விட்டன.

# 20 ஈழத்து சைவசமய வளர்ச்சி

வரலாற்றுக் காலத்துக்கு முன்பே இலங்கையில் சைவசமயம் நிலவியது. அது காலத்திற்குக் காலம் வளர்ச்சியடைந்து வந்துள்ளது. அவ்வாறான வளர்ச்சி நிலைகளை அறிந்துகொள்ள இராமாயணம், மகாபாரதம், கந்தபுராணம் முதலான இதிகாச புராணங்களும், மகாவம்சம், சூளவம்சம், தீபவம்சம் மற்றும் யாழ்ப்பாண வைபவமாலை முதலான வரலாற்று நூல்களிற் காணப்படும் செய்திகளும் இபுன்பத்தூத்தா, மக்கன்சி முதலான தேச சஞ்சாரிகளது குறிப்புக்களும் மற்றும் வரலாற்று அறிஞர்களின் ஆய்வு முடிவுகளும், தொல்பொருட் சின்னங்களும், சிங்கள மொழியில் அமைந்த தூதுப் பிரபந்தங்களும் உதவுகின்றன.

இத்தகைய வரலாற்றுச் சான்றாதாரங்களை அடிப்படையாகக் கொண்டு இலங்கையில் சைவசமய வளர்ச்சி நிலையை மேல்வரும் வளர்ச்சிக் காலங்கள் ஊடாக அறிவோம்.

1. புராதன இலங்கையிற் சைவம்
2. அநுராதபுரக் காலம்
3. பொலநறுவைக் காலம்
4. பொலநறுவை அரசிற்குப் பிற்பட்ட - போர்த்துக்கேயர் வருகைக்கு முற்பட்ட காலம்
5. ஐரோப்பியர் காலம்
6. இருபதாம் நூற்றாண்டும் தற்காலமும்

## (1) புராதன இலங்கையிற் சைவம்

அநுராதபுர இராசதானியின் எழுச்சிக்கு முன்னரான காலப் பகுதி இலங்கை வரலாற்றில் புராதன காலமாகக் கூறப்படுகிறது. அக்காலத்தில் நிலவிய சைவசமயத்தின் நிலையை வரலாற்றுச் சான்றுகள் நிரூபித்துள்ளன.

இலங்கையின் ஆதிக்குடியினராகிய இயக்கரும் நாகரும் சிவ வழிபாட்டினைப் பின்பற்றினர். இயக்கர் பூத வழிபாட்டினையும், நாகர் நாக வழிபாட்டினையும் பேணினர். இத்தகைய நாக வழிபாட்டின் தொடர்ச்சியை திருக்கேதீச்சரம், நயினை நாகபூசணி அம்மன் கோயில் மற்றும் நாகதம்பிரான் ஆலயங்கள் வாயிலாக இனங்காணலாம்.

விஜயன் இலங்கைக்கு வரும்போது இலங்கையின் நான்கு திசைகளிலும் ஐந்து சிவாலயங்கள் காணப்பட்டதாகவும் அவ்வாலயங்களை புனருத்தாரணம் செய்து விஜயன் வழிபட்டதாகவும் **"யாழ்ப்பாண வைபவமாலை"** குறிப்பிடுகின்றது. கிழக்கில் திருக்கோணேச்சரமும், மேற்கில் திருக்கேதீச்சரம் மற்றும் முன்னேச்சரமும், வடக்கில் திருத்தம்பலேச்சரமும், நகுலேச்சரமும் தெற்கில் சந்திரசேகரீச்சரமும் அமைந்திருந்தன என அந்நூல் குறிப்பிடுகிறது. இக்கூற்றுக்கு மேலும் வலுவூட்டுவதாக சேர்போல் பீரிஸ் எனும் சிங்கள வரலாற்றாசிரியரின் கருத்தும் அமைகிறது.

தேவநம்பியதீசனுக்கு முன்பு இலங்கையை ஆண்ட மன்னர்கள் சைவர்களாக விளங்கியதோடு அவர்கள் பிராமணர்களையும் ஆதரித்து வந்தமைக்கான சான்றுகளை மகாவம்சம், தீபவம்சம், மற்றும் பிராமிக் கல்வெட்டுகள் மூலம் அறிய முடிகிறது. மேலும் அநுராதபுர இராசதானியை அமைத்த பண்டுகாபயன் **"சிவிக சாலை", "சொத்தி சாலை"** எனும் நிலையங்களை அமைத்ததாக மகாவம்சம் கூறுகிறது. இங்கு குறிப்பிடப்படும் "சிவிக சாலை" சிவலிங்கத்தைத் தாபித்து வழிபடும் கோட்டமாகவும், சொத்தி சாலை பிராமணர்கள் வேதம் ஓதுவதற்காக அமைக்கப்பட்ட சாலையாகவும் விளங்கின என்பர் அறிஞர். தேவநம்பிய தீசனுக்கு முன்னர் இலங்கையை ஆண்ட மன்னர்களது பெயர்களில் **"சிவ"** எனும் பிற்சேர்க்கை அமைந்திருந்ததை அவதானிக்கலாம். **கிரிகண்டசிவன், மகாசிவன், மூத்தசிவன்** என்போர் அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்களாவர். அவர்கள் சிங்கள மன்னர்களாக இருந்த போதிலும் சைவர்களாக விளங்கியதோடு பிராமணர்களையும் ஆதரித்து வந்துள்ளனர். பிராமணர்கள் அரசர்களின் புரோகிதர்களாக விளங்கியதுடன் ஆலோசகர்களாகவும் செல்வாக்குப் பெற்றிருந்தனர்.

பிராமிக் கல்வெட்டுக்கள் வாயிலாகவும் இக்கால சைவம் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. "எவஎல்லுகொடகந்த" எனுமிடத்தில் கண்டெடுக்கப்பட்ட கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதப்படும் பிராமிக் கல்வெட்டில் **"சிவம்", "சிவகூடம்"** முதலிய குறிப்புகள் காணப்படுகின்றன.

இருபத்திரண்டிற்கு மேற்பட்ட பிராமிக் கல்வெட்டுக்களில் பிராமணர்கள் பற்றிய செய்தியும், அறுபதுக்கு மேற்பட்ட பிராமிக் கல்வெட்டுகளில் **சிவ** எனும் அடைமொழியும் காணப்படுகின்றன.

## (2) அநுராதபுரக்காலம்

பண்டுகாபயனுடைய ஆட்சிக்காலம் தொடக்கம் ஐந்தாம் மகிந்தனின் ஆட்சிக்காலம் வரையான காலப்பகுதி அநுராதபுரக்காலம் ஆகும்.

கி.மு. 145 – கி.மு. 101 வரையான காலப்பகுதியில் எல்லாளன் எனும் தமிழ் மன்னன் அநுராதபுரத்தை ஆண்டான். இவனது காலத்தில் சைவமும் மனுநீதியும் மேலோங்கிக் காணப்பட்டன. அவனுக்குப் பின் ஆட்சியைக் கைப்பற்றிய துட்டகைமுனு கதிர்காமக் கந்தனிடத்தில் நேர்த்திக்கடன் செலுத்துவதற்காகச் சென்ற போது அவனுடன் 1500 பிராமணர்களும் 500 பிக்குகளும் கலந்து கொண்டதை மகாவம்சம், கந்தோபய ஆகிய நூல்களின் மூலம் அறிந்து கொள்ளலாம். இலங்கையை ஆண்ட முதலாம் கஜபாகு மன்னன் கி.பி இரண்டாம் நூற்றாண்டில் சேர நாட்டிலிருந்து பத்தினித் தெய்வ வழிபாட்டை இலங்கையில் அறிமுகம் செய்தான்.

இக்காலப் பகுதியில் பௌத்த மன்னர்கள் சைவர்களாக மதம் மாறி சைவப்பணிகள் பல புரிந்தனர். "**நிக்காய சங்கிரஹம்**" என்ற நூலின் மூலம் கி.பி. 831 – 851 காலப்பகுதியில் ஆட்சி செய்த முதலாம் சேனன் எனும் மன்னன் சைவத்துறவி ஒருவரால் சைவனாக மாற்றப்பட்டதாக அறிய முடிகிறது. இதை திருவாதவூரடிகள் புராணத்தில் மாணிக்கவாசகர் பௌத்த மன்னனை வாதில் வென்று சைவனாக மதம் மாற்றிய சம்பவம் குறிக்கிறது.

கி.பி. 5 ஆம் நூற்றாண்டளவில் இலங்கை வந்த குளக்கோட்டன் என்ற சோழ அரசன் திருக்கோணேச்சரம், முன்னேச்சரம் முதலான ஆலயங்களில் திருப்பணி செய்ததற்கான ஆதாரங்கள் பல காணப்படுகின்றன.

தென் இந்தியாவில் கி.பி.7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானசம்பந்தர் திருக்கோணேச்சரம், திருக்கேதீச்சரம் ஆகிய ஆலயங்கள் மீதும், கி.பி.9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கேதீச்சரம் மீதும் பதிகங்கள் பாடியுள்ளனர். இவ்வாறு தென் இந்தியாவிலிருந்து பதிகங்கள் பாடுமளவிற்கு அங்கும் இவ்வாலயங்களின் மகிமை உணரப்பட்டமையே காரணமெனலாம்.

அநுராதபுரக் காலத்தில் பல சைவ ஆலயங்கள் அமைக்கப்பட்டமை பற்றி எச்.சி.பி. பெல் (H.C.P.Bell) என்கின்ற தொல்பொருளாய்வாளரது கருத்துக்கள் மூலம் அறிய முடிகிறது. சென்ற இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பப் பகுதியில் அநுராதபுரம் ஜேதவனாராமய, விஜயராமய விகாரைகளுக்கு அண்மையிலிருந்து பல சைவத்திருவுருவங்கள் புதைபொருளாய்வின் மூலம் பெறப்பட்டுள்ளன. அவற்றுள் சிவலிங்கம், துர்க்கை, விஷ்ணு, சூரியன் ஆகிய சிற்பங்களும் சந்திரசேகரர், உமா சமேத நடேசர், பார்வதி, வீரபத்திரர், பூவளநாயகி, நாகதம்பிரான், உமாமகேஸ்வரர், யோக தட்சணாமூர்த்தி ஆகிய செப்பிலமைந்த

# அநுராதபுரக்கால சிற்பங்கள்


அனுராதபுர கண்டகசைத்தியத்தின் வாசற் கடவையிற் காணப்படும் இலங்கையின் முதலாவது விநாயகர் சிற்பம்


சிவலிங்கம்


சூரியன்


துர்க்கை


விஷ்ணு


சந்திர சேகரர்


உமா சமேத நடேசர்


சிவன்


பார்வதி


யோகாதட்சிணா மூர்த்தி


வீரபத்திரர்


பூவளநாயகி


பத்தினி (கண்ணகி)


ஐயனார்


சிவபார்வதி


நாலந்த கெடிகே


தெய்வேந்திர முனை விஷ்ணு ஆலயம்

வார்ப்பு விக்கிரகங்கள் சிறப்பானவை. இவற்றுள் அநுராதபுரம் கண்டக சைத்திய வாசற் கடவையில் காணப்படும் விநாயகர் சிற்பமே இலங்கையில் கிடைக்கப்பெற்ற விநாயகர் சிற்பங்களுள் காலத்தால் முந்தியதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

பல்லவ மன்னர்களது காலப்பகுதியில் மாமல்லபுரத்தில் கட்டப்பட்டது போன்று இந்துக்கட்டட கலை மரபைத் தழுவி அநுராதபுரக் காலப் பகுதியில் பல கட்டடங்கள் அமைக்கப்பட்டதை அறிய முடிகின்றது. நாலந்த எனுமிடத்தில் அமைக்கப்பட்ட “கெடிகே” மற்றும் தெய்வேந்திர முனையில் அமைக்கப்பட்ட **விஷ்ணு ஆலயம்** என்பன இம்மரபு முறையின் எச்சங்களை வெளிப்படுத்துகின்றன. இசுறுமுனிய விகாரையில் காணப்படும் காதலர் சிற்பம், குதிரைவீரன் சிற்பம் என்பன சிவன் பார்வதி மற்றும் ஐயனார் வடிவங்களாக ஆய்வாளர்களால் இனங் காணப்பட்டுள்ளன. இக்காலப்பகுதியில் மதுரை இளவரசி மாருதப்புரவீகவல்லியினாலும் அவளின் கணவனான உக்கிரசிங்கனாலும் மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் கட்டப்பட்டது என்பது வரலாறு. அதன் மூலம் கி.பி.8ஆம், 9ஆம் நூற்றாண்டுகளில் இலங்கையின் வட பகுதியிலும் சைவம் நன்னிலையை அடைந்திருந்தமையை அவதானிக்க முடிகிறது.

## 3 பொலநறுவைக் காலம்

இலங்கை வரலாற்றில் கி.பி 10ஆம் நூற்றாண்டு முதல் 13ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதி பொலநறுவைக் காலமாகும். கி.பி. 1017இல் இலங்கை சோழ சாம்ராச்சியத்தின் ஒரு பகுதியாகியது. முதலாம் இராஜராஜனும் அவன் மகன் இராஜேந்திர சோழனும் இலங்கை முழுவதையும் தம் ஆட்சியின் கீழ் கொண்டு வந்தனர். பொலநறுவை அவர்களின் ஆட்சிக்காலத்தில் **“ஜனநாத மங்கலம்”** என்றும் **“புலத்திய நகரம்”** என்றும் அழைக்கப்பட்டது.

பொலநறுவைக் காலப்பகுதியில் சைவம் முன்னரை விட உயர்ந்த நிலையில் காணப்பட்டது. பொலநறுவையில் மாத்திரம் 10 இற்கு மேற்பட்ட சிவாலயங்கள், 5 விஷ்ணு ஆலயங்கள், காளிகோயில் என்பன கட்டப்பட்டிருந்ததை புதைபொருள் ஆய்வுகள் மூலம் அறிய முடிகிறது. இவற்றுள் இரண்டாம் சிவாலயம் இராஜராஜனின் மனைவி பெயரில் **“வானவன்மாதேவி ஈஸ்வரம்”** என அழைக்கப்பட்டதோடு சோழர்களது கலைப் பாணியை இன்றும் பிரதிபலிக்கும் கற்றளி ஆலயமாக விளங்குகிறது.

பொலநறுவைக்கு அடுத்ததாக அக் காலப்பகுதியில் அதிக ஆலயங்கள் கட்டப்பட்ட இடமாகப் “பதவியா” விளங்குகிறது. சோழர் காலத்தில் ஐந்து சிவாலயங்கள் இங்கு. கட்டப்பட்டன. இவற்றுள் முதலாம் இராஜராஜனுடைய காலத்தில் கட்டப்பட்ட கோயில்களுள் **“இரவிகுலமாணிக்க ஈஸ்வரம்”** சிறப்பானது. இவற்றின் அழிபாடுகளுக்கிடையே நந்தியின் உருவம் பொறித்த

# பொலன்னறுவை நகரில் அமைந்த ஆலயங்கள்

(ஜனநாத மங்கலம்)





முதலாம் சிவாலயம்




இரண்டாம் சிவாலயம்
(வானவன் மாதேவியீச்சரம்)




மூன்றாம் சிவாலயம்





நான்காம் சிவாலயம்




ஐந்தாம் சிவாலயம்




ஆறாம் சிவாலயம்



சிவலிங்கம்




விஷ்ணு ஆலயம்



பதவியா
இரவிகுலமாணிக்கஈஸ்வரம்



பதவியா முத்திரை



பூநகரி மண்ணித்தலை சிவாலயம்

சமஸ்கிருத மொழியில் அமைந்த முத்திரையொன்று கண்டெடுக்கப்பட்டுள்ளது. அம்முத்திரையில் "இந்திரன் முதலான தேவர்கள் வழிபடும் பாதாரவிந்தங்களை உடைய மகேசனது சாசனம்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதன் மூலம் அவ்வாலயத்தின் அன்றைய நன்னிலையை அறிந்து கொள்ள முடிகிறது.

அநுராதபுரத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டொன்றின் மூலம் **"உத்தம சோழேஸ்வரம்"** எனும் ஆலயம் "கடவத்கோறளையில்" அமைந்திருந்தமை பற்றி அறிய முடிகிறது. இதே போல, மதிரிகிரியில் **"பண்டிதசோழேஸ்வரம்"** எனும் ஆலயம் சோழ மன்னர்களது படையினரால் அமைக்கப்பட்டது.

சோழர்களது காலத்தில் கந்தளாய் **இராஜராஜ சதுர்வேதிமங்கலம்** என அழைக்கப்பட்டதோடு இங்கு சிவாலயம் ஒன்றும் முத்தங்கைக் கோயில் எனும் துர்க்கையின் ஆலயமொன்றும் அமைக்கப்பட்டது. யாழ்ப்பாணக் கோட்டையிலிருந்து கண்டெடுக்கப்பட்ட முதலாம் இராஜேந்திரன் காலத்து கல்வெட்டு மூலம் நல்லூரிலிருந்த ஆலயமொன்றிற்கு தானம் கொடுக்கப்பட்ட செய்திகளை அறிய முடிகிறது. மேலும் பூநகரியிலுள்ள மண்ணித்தலை எனுமிடத்திலுள்ள சிவாலயமும் சோழர் காலத்தைச் சேர்ந்ததாக ஆய்வுகள் நிரூபிக்கின்றன.

சோழர்கள் இலங்கையில் புதிய ஆலயங்களை அமைத்ததோடு புராதன ஆலயங்களைப் புனருத்தாரணம் செய்தமை பற்றியும் அறிய முடிகிறது. மாதோட்டம், ஊர்காவற்றுறை போன்ற இடங்களிற் கிடைக்கப்பெற்ற கல்வெட்டுக்களின் மூலம் சோழர்கள் மாதோட்டத்தில் பல செய்ததுடன் இங்கு **"இராஜராஜேச்சரம்"** **"திருவிராமேச்சரம்"** என்னுமிரு சிவாலயங்கள் கட்டியதாயும் மாதோட்டம் **"ராஜராஜபுரம்"** என அழைக்கப்பட்டதாகவும் அறிய முடிகிறது. அவ்வாறே திருக்கோணேச்சரம் சோழ மன்னர்களது காலத்தில் **"மச்சகேஸ்வரம்"** என அழைக்கப்பட்டது.

# பொலநறுவைக்கால வார்ப்புப் படிமங்கள்



விநாயகர்



நடராசர்



சிவகாமி



சந்திர சேகரர்



நந்தி



பார்வதி



சோமாஸ்கந்தர்



நடராஜர்



சிவகாமி



உமாமகேஸ்வரர்



சைவசமய குரவர் நால்வர்



காரைக்கால் அம்மையார்


கந்தளாய் விஜயராஜேஸ்வரம்

சோழ மன்னர்களைத் தொடர்ந்து பொலநறுவைவையை ஆட்சி செய்த சிங்கள மன்னர்களும் அக்கால சைவசமய வளர்ச்சிக்கு ஆதரவு நல்கியதைக் கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகிறது. சோழர்களது ஆட்சியை முடிவுக்குக் கொண்டு வந்த முதலாம் விஜயபாகு மன்னன் கந்தளாயில் **''விஜயராஜேஸ்வரம்''** எனும் சிவாலயத்தை அமைத்ததாகவும், கந்தளாய் **''விஜயராஜ சதுர்வேதிமங்கலம்''** என அழைக்கப்பட்டதாகவும் அறிய முடிகிறது.

இதேபோன்று நிசங்க மல்லனின் சாசனமொன்றின் மூலம் கந்தளாய் **''சதுர்வேதி பிரம்மபுரம்''** என அழைக்கப்பட்டதோடு அங்கு பார்வதி சத்திரம் என்ற தானசாலையை அமைத்தான் என்றும், அங்குள்ள தேவாலயமொன்றின் உற்சவ காலத்தில் இடம் பெற்ற நாட்டியக் காட்சியை நிசங்கமல்லன் பார்வையிட்டதாகவும் குறிப்பிடப்படுகிறது.

பொலநறுவைக் காலத்தின் இறுதிப் பகுதியில் ஆண்ட கலிங்க மாகனுடைய ஆட்சிக் காலத்தில் கிழக்கிலங்கையிற் பல ஆலயங்கள் புனருத்தாரணம் செய்யப்பட்டதாக அறிய முடிகிறது. அவற்றில் கொக்கட்டிச்சோலை, திருக்கோவில், திருப்பெருந்துறை, அமிர்தகழி முதலிய இடங்களில் அமையப் பெற்ற ஆலயங்கள் சிறப்பானவையாகும்.

**''வைஜயந்தி சூத்திரம்''** எனும் சிற்பநூல் இக்காலப்பகுதியில் எழுதப்பட்டது. சைவத் திருவுருவங்கள் முன்னொரு போதும் இல்லாதளவுக்கு பொலநறுவைக் காலத்தில் வார்க்கப்பட்டுள்ளன. பொலநறுவையிற் கிடைத்த வார்ப்புப் படிமங்களுள் சிவகாமி சமேத நடராசர், விநாயகர், பார்வதி, முருகன், வைரவர், சோமாஸ்கந்தர், மகாவிஷ்ணு, பாலகிருஷ்ணர், சரஸ்வதி, சைவ சமய குரவர்கள், காரைக்காலம்மையார், சண்டேஸ்வரர் முதலானவை கலைநயம் மிக்கவை. அவற்றின் கலைநயம் பற்றி **''கலாயோகி ஆனந்த குமாரசுவாமி''** அவர்கள் விபரித்துள்ளார்.

இலங்கையின் சைவசமய வரலாற்றில் பொலநறுவைக் காலம் தனித்துவம் மிகு சைவப் பண்பாட்டு மரபுகளைக் கொண்ட காலமாக அமைந்திருந்தமையை அறிந்து கொள்ள முடிகிறது.

### மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. இலங்கையின் ஆதிக்குடியினராகிய நாகரும் இயக்கரும் வழிபட்ட வழிபாடு யாது?
2. சிவ என்னும் சொல் அமையப்பெற்ற மன்னர்களின் பெயர்கள்இரண்டு தருக.
3. விஜயன் இலங்கைக்கு வரும் போது இலங்கையின் நான்கு திசைகளிலும் காணப்பட்ட சிவாலயங்கள் யாவை?
4. அநுராதபுரக் காலப்பகுதியில் இந்துக்கட்டடக் கலை மரபைப் பின்பற்றி அமைக்கப்பட்ட கட்டடங்கள் யாவை?
5. திருக்கேதீச்சரம், திருக்கோணேச்சரம் ஆகிய ஆலயங்கள் சோழ மன்னர்களின் காலத்தில் எவ்வாறு அழைக்கப்பட்டன?

### செயற்பாடு

01) பொலநறுவைக் காலப்பகுதியில் அமையப்பெற்ற சைவ ஆலயங்களைப் பட்டியற்படுத்தி வகுப்பறையிற் காட்சிப்படுத்துங்கள்.

02) அநுராதபுர, பொலநறுவைக் கால சைவ ஆலயங்கள், திருவுருவங்கள் ஆகியவற்றின் படங்களைச் சேகரித்து வகுப்பறையில் காட்சிப்படுத்துங்கள்.

### பாடச்சுருக்கம்

- இலங்கையின் சைவசமய வரலாற்றினை அறிய பல வரலாற்றுச் சான்றுகள் உதவுகின்றன.
- புராதன இலங்கையை ஆட்சி செய்த மன்னர்கள் சைவர்களாக விளங்கியதோடு பல சமயப் பணிகளையும் ஆற்றினர்.
- சோழமன்னர்கள், சிங்களமன்னர்கள், வணிகர்கள் என்பவர்களால் அநுராதபுரம் மற்றும் பொலநறுவைக் காலங்களில் சைவ ஆலயங்கள் பல பரிபாலிக்கப்பட்டன.

## 4 பொலநறுவை அரசிற்குப் பிற்பட்ட - போர்த்துக்கேயர் வருகைக்கு முற்பட்ட காலம் (கி.பி.1250 – கி.பி. 1505)

கலிங்க மாகனின் ஆட்சியின் முடிவில் பல்வேறு காரணங்களால் பொலநறுவை இராசதானி வீழ்ச்சியுற்று மக்கள் தென்மேற்கு நோக்கி இடம்பெயரலாயினர். 13ஆம் நூற்றாண்டில் தம்பதெனிய இராச்சியமும் அதைத் தொடர்ந்து யாப்பகூவ, குருணாகல், கோட்டை முதலிய இராஜதானிகளும் இலங்கையின் தென்பகுதியிற் தோற்றம் பெற்றன. மலையகத்தில் கம்பளையைத் தொடர்ந்து கண்டி இராச்சியம் தோற்றம் பெற்றது. வட பகுதியில் ஆரியச் சக்கரவர்த்திகள் யாழ்ப்பாண இராச்சியத்தை நெறிப்படுத்தினர். அக்காலப் பகுதியில் இலங்கையில் சைவசமயம் தமிழ், சிங்கள மன்னர்களால் முதன்மைப்படுத்தப்பட்டது.

### அ. தென்னிலங்கை இராசதானிகளில் சைவம்

தென்னிலங்கையிலுள்ள தேநுவரையில் அமைந்திருந்த **"நகரீசன்"** என்ற சிவாலயம் பற்றிய செய்திகளை ஏழாம் விஜயபாகுவின் கல்வெட்டு மூலம் அறிய முடிகிறது. இதுவே முன்னர் சந்திரசேகரீச்சரமாகக் கருதப்பட்டதாக ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். அத்துடன் திஸரசந்தேஸய நூல் மூலம் இங்கு அமைக்கப்பட்ட இரண்டு விநாயகர் ஆலயங்கள் பற்றியும் அதில் ஒன்று **இராமசந்திரன்** எனும் வணிகரால் நிர்மாணிக்கப்பட்டதாகவும் அறிய முடிகிறது.

அக்காலப்பகுதியில் தேநுவரையில் அமைக்கப்பட்ட ஆலயங்களுள் விஷ்ணு ஆலயம் முதன்மையானது. அவ்வாலயத்தின் சிறப்புக்களை **இரண்டாம் பராக்கிரமபாகுவின்** கல்வெட்டு, மற்றும் **இபுன்பத்தூத்தா, குவெறோஸ் (F.D.Quyros 1930), மக்கன்சி** முதலான அறிஞர்களது குறிப்புகளும் சீன அரசன் **யுங்-லோ** என்பவனால் அவ்வாலயத்திற்கு வழங்கப்பட்ட தானங்கள் பற்றிய செய்திகளைத் தரும். சீனம், பாரசீகம், தமிழ் ஆகிய மும்மொழிகளிலும் எழுதப்பட்ட கல்வெட்டுக்கள் மூலமும் அறிய முடிகிறது.

ஆறாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் கோட்டையில் நகருக்குப் புறத்தே அழகிய ஈஸ்வரன் ஆலயமொன்று இருந்ததாகவும் அங்கு தினமும் வாத்திய இசைகளுடன் தமிழில் பக்திப் பாசுரங்கள் பாடப்பட்டதாகவும் சலலிஹினி சந்தேஸய(பூவைவிடுதூது) மூலம் அறிய முடிகிறது. இக்கூற்றினை நிறுவுமுகமாக 1984இல் கொழும்பு மாவட்டத்தின் இரத்மலானையில் கோட்டை இராச்சியத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் சிவாலயம் ஒன்றின் கட்டட அழிபாடுகளும் அவற்றுள்

# தெவிநுவர ஆலயங்கள்



சந்திரசேகரீச்சர ஆலய சிவலிங்கம்



நந்தி



விநாயகர் சிற்பம்



விஷ்ணு ஆலயம்

# சீதாவாக்கை வெரெண்டி கோயிலின் சிதைவுகள்









# இரத்மலானை திருநந்தீச்சரம்









ஆவுடையார் மற்றும் நந்தி என்பன வெளிப்படுத்தப்பட்டு இன்று **திருநந்தீச்சரம்** என்னும் பெயரில் வழிபடப்படுவதும் அவதானிக்கத்தக்கது.




கோட்டை இராச்சியத்தை ஆண்ட ஆறாம் பராக்கிரமபாகு, ஒன்பதாம் பராக்கிரமபாகு என்போரால் முன்னேச்சரம் பரிபாலிக்கப்பட்டதாக முன்னேச்சர ஆலயத்திற் காணப்படும் கல்வெட்டுக்கள் மூலம் அறிய முடிகின்றது.

சீதாவாக்கையில் அமைக்கப்பட்ட **வெரெண்டி கோயில்** (சிவாலயம்) மாயாதுன்னையின் காலத்தில் அமைக்கப்பட்டது. அது நாயக்கர்கால இந்து, திராவிட, கட்டடக்கலை மரபைப் பின்பற்றி பிரம்மாண்டமான தோற்றம் கொண்டதாக அமைக்கப்பட்டது. அதன் சிறப்புக்களை ஆறாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் தோற்றம் பெற்ற சவுல் சந்தேஸய (சேவல் விடுதூது) குறிப்பிடுகின்றது. இவ்வாலயத்தின் கலையழகினைக் கண்டு வியப்புற்ற போர்த்துக்கேய வரலாற்றாசிரியரான **தே கூற்றோ** (Do couto) மேல் வருமாறு குறிப்பிடுகிறார்.

"....இலங்கை முழுவதிலும் உள்ளனவற்றில் மிகவுஞ் சிறந்ததும் அளவிற் பெரியதுமான கோயில் இப்பகுதியில் அமைந்துள்ளது. பரமேஸ்வரன் என்று சொல்லப்படும் அவர்களின் கடவுளின் படிமத்தை வழிபடுவதற்கென்று அது உருவாக்கப்பட்டுள்ளது. அதன் கட்டிட வேலைப்பாடுகள் விசித்திரமானவை. அதன் கட்டுமானப்பணிகள் 20 வருடங்களாக நடைபெற்றன என்றும் அதில் 20000 தொழிலாளர்கள் ஈடுபட்டனர்" என்றும் சொல்லப்படுகிறது. பேர்சிவல் என்ற ஆங்கிலேயரும் இவ்வாலயத்தின் சிறப்பினை விபரித்துள்ளார். போர்த்துக்கேயரால் அழிக்கப்பட்ட இவ்வாலயத்தின் அஷ்டானப்பகுதி மாத்திரமே இன்று எஞ்சியுள்ளது.


சிலாபம் மானவரி ஈஸ்வரன் கோயில்

திஸர சந்தேஸய(அன்னம் விடுதூது), சலலிஹினி சந்தேஸய(பூவை விடுதூது) ஆகிய நூல்கள் மூலம் கோட்டை நகரில் அமைந்திருந்த முருகன் கோவில் பற்றிய செய்திகளை அறியமுடிகிறது. இவ்வாலயத்திற்கு ஏழாம் விஜயபாகுவின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த **அச்சுதராயன்** என்பவன் வழங்கிய தானங்கள் பற்றிய விபரங்களைச் சாசனம் ஒன்று விபரிக்கிறது. கோகில சந்தேஸய (குயில் விடுதூது) நூல் மூலம் களுகங்கைக்கு அண்மையில் அமைந்த விநாயகர் கோவில் பற்றிய செய்திகளை அறிய முடிகிறது. அத்தோடு பரவி சந்தோசய (புறா விடுதூது) மூலம் இரண்டாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் பெந்தோட்டை நகரில் அமையப் பெற்ற காளி கோயில் பற்றிய செய்திகளை இனம்காண முடிகிறது.

மேலும் களுத்துறையில் கிடைத்த கல்வெட்டொன்று களுத்துறை நகரில் அமையப்பெற்ற காளி கோயிலுக்கு வழங்கப்பட்ட தானங்கள் பற்றிய செய்திகளை விபரிக்கிறது. அத்துடன் சவுல் சந்தேசய பிரபந்தம் மூலம் சீதாவாக்கை வெரெண்டி கோயிலுக்கு அண்மையிலிருந்த உமையம்மையின் கோயில் பற்றிய விபரங்களை அறிய முடிகிறது.

மேலும் கேகாலை மாவட்டத்தில் அமையப் பெற்ற மொட்டைப் பொலியார் கோயில், நீர்கொழும்பில் அமையப் பெற்ற நஞ்சுடான் கோயில் மற்றும் காமாட்சியம்மன் கோயில், சிலாபம் மானவரி ஈஸ்வரன் கோயில், கற்பிட்டி நாச்சியம்மன் கோயில், நிக்கவரட்டிய, குண்டசாலை, குருணாகல் முதலிய இடங்களில் அமையப் பெற்ற கண்ணகி அம்மன் ஆலயங்கள் எல்லாம் இக்காலப் பகுதியில் பொலிவுடன் விளங்கிய ஆலயங்களாக இனங்காணப்பட்டுள்ளன.

## ஆ. யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவம்

12ஆம் நூற்றாண்டில் பாண்டிய மன்னர்களின் சேனாதிபதியாகவிருந்த ஆரியச்சக்கரவர்த்திகள் யாழ்ப்பாண இராச்சியத்தை ஆட்சி செய்தனர். கி.பி.12ஆம் நூற்றாண்டு முதல் கி.பி 15ஆம் நூற்றாண்டு வரை இவர்களது ஆட்சி இடம்பெற்றது. இக்காலப்பகுதியில் சிங்கைநகர்(பூநகரி), நல்லூர் என்பன தலைநகரங்களாக விளங்கின. சைவசமயம் அரச சமயமாக பேணப்பட்டதோடு அது வடக்கிலும் கிழக்கிலும் மிக உன்னத நிலையை அடைந்திருந்தது.

யாழ்ப்பாண இராசதானியின் நல்லூர்த் தலைநகரில் நல்லூர் கந்தசுவாமி ஆலயம் பிரதானமானது. இதை மையமாகக் கொண்டு வெயிலுகந்த விநாயகர் ஆலயம், கைலாசநாதர் ஆலயம், சட்டநாதர் ஆலயம், வீரமாகாளியம்மன் ஆலயம், சந்திரசேகரப் பிள்ளையார் ஆலயம் என்பன அமைக்கப்பட்டன. இரகு வம்சத்தினை தமிழில் மொழிபெயர்த்த அரசகேசரியினால் நீர்வேலியில் அரசகேசரிப் பிள்ளையார் ஆலயமும், கருணாகரத் தொண்டமானால் உரும்பிராயில் கருணாகரப் பிள்ளையார் ஆலயமும், பரராஜசேகரனால் இணுவில் பரராஜசேகரப் பிள்ளையார் ஆலயமும், செகராசசேகரனால் செகராஜசேகரப் பிள்ளையார் ஆலயமும் அமைக்கப்பட்டன.

15ஆம் நூற்றாண்டில் ஆறாம் பராக்கிரமபாகுவின் வளர்ப்பு மகனாகிய சப்புமல்குமாரன் (ஆறாம் புவனேகபாகு / செண்பகப்பெருமாள்) என்பவனால் யாழ்ப்பாண இராச்சியம் கைப்பற்றப்பட்ட போது நல்லூரில் விளங்கிய நல்லூர் கந்தசுவாமி ஆலயம் அழிக்கப்பட்டுப் பின்னர் இவனாலேயே அமைக்கப்பட்டதாக **யாழ்ப்பாண சரித்திரம்** எனும் நூலின் மூலம் அறிய முடிகிறது. மேலும் நயினாதீவு நாகபூஷணியம்மன் ஆலயம், சாவகச்சேரி வாரீவனேச்சரம், மானிப்பாய் மருதடி விநாயகர் ஆலயம், மாதகல் சம்பேச்சரம், அங்கணாமைக்கடவை கண்ணகியம்மன் ஆலயம், பொன்னாலை வரதராஜர் ஆலயம் என்பன யாழ்ப்பாண இராசதானிக் காலத்தில் பொலிவுடன் விளங்கிய ஆலயங்களாகும்.

# யாழ்ப்பாண இராச்சிய கால ஆலயங்கள்


வெயிலுகந்த விநாயகர் ஆலயம்


சட்ட நாதர் ஆலயம்


நல்லூர் கந்தசுவாமி ஆலயம்


கைலாச நாதர் ஆலயம்


வீரமா காளியம்மன் ஆலயம்


உரும்பிராய் கருணாகரப் பிள்ளையார் ஆலயம்


இணுவில் பரராஜசேகர பிள்ளையார் ஆலயம்


சாவகச்சேரி வாரீவனேஸ்வரம்


மானிப்பாய் மருதடி விநாயகர் ஆலயம்


நீர்வேலி அரச கேசரிப் பிள்ளையார் ஆலயம்.

## யாழ்ப்பாண இராச்சியக் கால சிற்பங்கள்


விநாயகர்


சுப்ரமணியர்

இக்காலப்பகுதியில் ஆலயங்கள் மட்டுமன்றி சைவப் பிரபந்தங்கள் பலவும் எழுச்சி பெற்றன. அவை சைவசமய வளர்ச்சிக்கு பெரிதும் உதவின. திருமலை பண்டிதராசர் தட்சணகைலாச புராணத்தையும், கவிராசர் கோணேசர் கல்வெட்டு என வழங்கும் கோணேசர் புராணத்தையும், முத்துராசர் கைலாய மாலையையும் இயற்றினர். பொதுமக்கள் இலக்கியமாகிய பள்ளு இலக்கியம் புதியதொரு பாடுபொருளைக் கொண்டு அமைந்தது.

## இ. வன்னி சிற்றரசர் காலத்தில் சைவம்

பனங்காமத்தினைத் தலைநகராகக் கொண்டு அமைந்த வன்னி இராசதானியில் சைவம் நன்னிலை பெற்றது. குதிரைமலை, செட்டிகுளம், கருநாவல்பற்று, தென்னமரவாடி, கொக்கிளாய், கரிக்கட்டுமூலை முதலான வன்னி பிரதானிகளின் பகுதிகளில் பல சைவ ஆலயங்கள் எழுச்சி பெற்றன.

ஒட்டுசுட்டான் தான்தோன்றியீஸ்வரர் ஆலயம், குமாரபுரம் சித்திரவேலாயுதர் ஆலயம் என்பன வன்னி மன்னர்களின் நல்லாதரவைப் பெற்றன. அத்துடன் மன்னார் குதிரைமலை அஸ்வகிரி சிவாலயம், செட்டிகுளம் சந்திரசேகரீச்சரம், உருத்திரபுரம் உருத்திரீச்சரம், வவுனிக்குளம் சிவாலயம், பனங்காமம் மற்றும் கற்சிலைமடுச் சிவாலயங்கள், ஓமந்தை பிள்ளையார் ஆலயம், முறிகண்டிப் பிள்ளையார் ஆலயம், புதுக்குடியிருப்பு குறவில் கோயில், முல்லைத்தீவு மன்னாக்கண்டல் சப்த மாதர் ஆலயம், வற்றாப்பளை கண்ணகி அம்மன் ஆலயம், செட்டிகுளம் மகிஷாசுர மர்த்தினி அம்மன் ஆலயம், ஆண்டான் குளம் மற்றும் சடவங்குளத்தில் அமையப்பெற்ற ஐயனார் ஆலயங்கள் என்பனவெல்லாம் இக்காலத்தில் சீருடன் விளங்கிய ஆலயங்களாகும்.

## ஈ. கிழக்கிலங்கை சிற்றரசர்கள் ஆட்சியில் சைவம்

கிழக்கிலங்கையில் குறிப்பாக மட்டக்களப்பில் சிற்றரசர்களும் பெருநிலக்கிழாரும் ஆட்சி புரிந்துள்ளனர். கொக்கட்டிச்சோலை தான்தோன்றியீஸ்வரர், கோயில் போரதீவு சித்திரவேலாயுதர், திருக்கோவில் சித்திர வேலாயுதர் முதலிய ஆலயங்கள் குளக்கோட்டன், மாகோன், ஆடகசௌந்தரி முதலானோர்களால் பரிபாலிக்கப்பட்டன. அவர்களது ஆட்சிக் காலப் பகுதியில் எழுந்த ஆலயங்கள் **தேசத்துக் கோயில்கள்** என சிறப்பித்து அழைக்கப்பட்டன.

முருகனது வேல் பிரதிட்டை செய்யப்பட்ட ஆலயங்களை **திருப்படைக் கோயில்கள்** என அழைக்கும் மரபு காணப்பட்டது. வெருகல், சித்தாண்டி, கோயிற் போரைதீவு, மண்டூர், திருக்கோயில், உகந்தை முதலான இடங்களில் அமையப்பெற்ற சித்திரவேலாயுத சுவாமி கோயில்கள் திருப்படைக் கோயில்களாகும். மேலும் பானகம சிவாலயம், அம்பாறை சிவன் கோயில், காரைதீவு கண்ணகியம்மன் கோயில், பாண்டிருப்பு திரௌபதியம்மன் கோயில் என்பனவெல்லாம் சீர்பெற்று விளங்கிய சைவ ஆலயங்களாகும்.

## 2. மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயம்.



### (அ) ஆலய அமைவிடம்.

இலங்கையின் வடபால் யாழ்ப்பாண மாவட்டத்தில் யாழ்ப்பாண நகரிலிருந்து வடக்கு முகமாக சுமார் பதினைந்து கிலோ மீற்றர் தொலைவில் காங்கேசன்துறை வீதியிலுள்ள மாவிட்டபுரம் என்னும் இடத்தில் இவ்வாலயம் அமைந்துள்ளது. மூர்த்தி, தலம், தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமைந்த புராதனமான முருகன் ஆலயங்களுள் இதுவும் ஒன்று.

### (ஆ) ஆலய வரலாறு.

இற்றைக்கு ஆயிரத்து இருநூற்றைம்பது வருடங்களுக்கு மேலான பழமை வாய்ந்தது இவ்வாலயம். இங்கு மாருதப்புரவீகவல்லி வழிபட்டு தன் நோய் நீங்கப் பெற்றாள் என்னும் ஒரு வரலாற்றுச் செய்தியும் உண்டு.

உக்கிரப்பெருவழுதி என்னும் ஓர் அரசன் மதுரையைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். அவனுடைய மகள் மாருதப்புரவீகவல்லி என்பவளுக்கு குதிரை முகமும் குன்ம வியாதியும் ஒருங்கே வருத்தியது. வைத்தியங்கள் பல செய்தும் அவள் நோய் குணமாகவில்லை. இறுதியில் சாந்தலிங்கம் என்ற முனிவரின் வழிகாட்டலின்படி இலங்கையின் வடபாலுள்ள கீரிமலைக்குச் சென்றாள். அங்கே தவம் புரிந்த நகுலமுனிவரை வணங்கி அவர் ஆசியுடன் கீரிமலையில் தீர்த்தமாடினாள். பின் கோயிற் கடவைப் பிரதேசத்தில் கோயில் கொண்ட கந்தசுவாமியாரை வணங்கி கோயில் தீர்த்தமாகிய நன்னீரூற்றும் சமுத்திர நீரும் சங்கமிக்கும் இடத்தில் நீராடினாள். இங்ஙனம் பல தடவை வணங்கி வர குதிரை முகமும் குன்ம நோயும் நீங்கப் பெற்றமையால் இவ்விடம் மாவிட்டபுரம் எனப்பெயர் பெறலாயிற்று. (மாவிட்டபுரம் என்பது குதிரை முகம் நீங்கப்பெற்ற தலம் என்பதாகும்).

தீராப் பிணி தீர்த்த முருகன் மீது ஆறாக்காதல் கொண்ட மாருதப்புரவீகவல்லி அவனுக்கென ஓர் அழகிய ஆலயத்தை அமைத்தாள். ஆரம்பத்தில் இவ்வாலய கர்ப்பக்கிருகத்தில் வேல் மட்டுமே வழிபடப்பட்டு வந்தது. அவற்றுடன் கந்தசுவாமியார், வள்ளி, தெய்வயானை விக்கிரகங்களையும் பிரதிஷ்டை செய்ய விரும்பிய மாருதப்புரவீகவல்லி அவற்றை இந்தியாவிலிருந்து கடல் மார்க்கமாக மரக்கலம் மூலம் தருவித்தாள்.

திருப்பணி வேலைகள் பூர்த்தியான பின் ஓர் ஆனி மாத உத்தர நட்சத்திரத்தில் கந்தசுவாமியாருக்கும் பரிவாரத் தெய்வங்களுக்கும் கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. போர்த்துக்கேயர் காலத்தில் இவ்வாலயமும் இடிக்கப்பட்டது.

போர்த்துக்கேயர் ஆட்சி முடிந்து ஒல்லாந்தர் ஆட்சி தொடங்கவே மூலஸ்தானத்தில் ஒரு வேலை வைத்து வழிபாடு செய்துவந்தனர். 1815இல் கந்தசுவாமியின் திருவுருவை வைத்து மகா கும்பாபிஷேகம் செய்தனர்.

**(இ) ஆலய அமைப்பு.**



மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் ஆலயம் இருவாசல் கொண்டது. முகப்பு கிழக்குப் புறமாகவும் மேற்குப் புறமாகவும் உள்ளது. இக்கோயிலின் உயர்ந்த இராஜகோபுரம் மேற்குப்பக்கத்திலேயே அமைக்கப்பட்டுள்ளது. இலங்கையில் முதன்முதலாக அமைக்கப்பட்ட பெரிய இராஜ கோபுரம் இதுவே ஆகும். அழகிய சிற்பங்கள் ஆலயத்தின் அழகினை மேலும் மெருகூட்டுகின்றன. இவ்வாலயம் மூன்று திரு வீதிகளைக் கொண்டது. ஆலயக்கொடித்தம்பம் முழுவதும் வெள்ளியாற் செய்யப்பட்டது. அழகும் பொலிவும் கொண்ட இவ்வாலயத்தின் தலவிருட்சம் காஞ்சிமா விருட்சம் என்பதாகும்.

**(ஈ) திருவிழாக்கள்.**



இவ்வாலயத்தின் மகோற்சவம் ஆண்டுதோறும் ஆனிமாத பூர்வபட்ச சஷ்டியிலே கொடியேற்றத்துடன் ஆரம்பமாகி இருபத்தைந்து நாள்கள் நடைபெறுகிறது. இவ்உற்சவங்களுள் மஞ்சம் மற்றும் கைலாச வாகன உற்சவம், சப்பறம், தேர், தீர்த்தம் என்பன சிறப்பானவை. தேர்த்திருவிழாவன்று பஞ்ச ரதங்கள் பவனிவரும். இவற்றில் முறையே விநாயகர், சிவபெருமான், கந்தசுவாமியார், ஆறுமுகப்பெருமான், சண்டேசுவரர் என்னும் மூர்த்திகள் பவனி வருவர்.

மாவிட்டபுரம் கந்தசுவாமியாரின் தீர்த்த உற்சவம் ஆடி அமாவாசை தினத்தன்று இடம் பெறும். கீரிமலையிலுள்ள **கண்டகி** தீர்த்தத்துறையில் காலை வேளையில் சுவாமி தீர்த்தமாடுதல் இடம்பெறும். தீர்த்தமாடிய பின் சுவாமி கீரிமலையிலேயே அன்று அந்தி வரை இருந்து அருள் புரிவார்.





மகோற்சவத்தை விட கந்தசஷ்டி விழா, தைப்பூசம் என்பனவும் சிறப்புடையவையே. புரட்டாதி மாத விஜயதசமியன்று மாவிட்டபுரம் முருகப்பெருமான் அருகிலுள்ள துர்க்காதேவி ஆலயத்திற்கு எழுந்தருளி வன்னி வாழை வெட்டும் நிகழ்வும் சிறப்பானது. 1829ஆம் ஆண்டு முதல் இவ் வழமை இக்கோயிலில் நடைபெறுகிறது. மாவிட்டபுரம் கந்தசுவாமியாரை **அபிஷேகக் கந்தன்** என்றும் அழைப்பர்.



தல விருட்சம்
காஞ்சிமா





மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயிலிலுள்ள
அழகிய சிற்பங்கள்



மஞ்ச உற்சவம்



கைலாச வாகன உற்சவம்



சப்பற உற்சவம்



பஞ்சரத பவனி

## மேல்வரும் வினாக்களுக்கு விடைதருக.

1. மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயிலின் அமைவிடம் யாது?

2. மாவிட்டபுரம் என்ற பெயர் ஏற்படக்காரணம் யாது?

3. மாவிட்டப்புரம் கந்தசுவாமி கோயிலின் இடம்பெறும் உற்சவங்கள் யாவை?

4. மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயிலின் தீர்த்தம் யாது?

## செயற்பாடு.

01) மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் பற்றி சிறு கட்டுரை ஒன்று எழுதிக் காட்சிப் படுத்துக.

## பாடச்சுருக்கம்

- மாவிட்டபுரம் கந்தசுவாமி கோயில் யாழ்ப்பாணத்திலிருந்து 15 கிலோ மீற்றர் தொலையிலுள்ள காங்கேசன்துறையில் உள்ளது.

- மதுரையை தலைநகராகக் கொண்டு ஆண்ட உக்கிரப்பெருவழுதியின் மகள் மாருதப்புரவீகவல்லி இவ்வாலயத்தை அமைத்தார்.

- இவ்வாலயம் இரண்டு வாயில்களையும் மூன்று வீதிகளையும் கொண்டது.

- மாவிட்டபுரக் கந்தசாமியின் தீர்த்த உற்சவம் ஆடி அமாவாசை அன்று நடைபெறும்.

# 22 ஈழத்துச் சைவ இலக்கியங்கள்

வரலாற்றுக்கு முற்பட்ட காலந்தொட்டு "சிவபூமி" எனப் போற்றப்படும் இலங்கையில், சைவம் தழைத்தோங்கவும், மக்கள் தாம் அனுபவித்த சொல்லொணாத் துன்பங்களிலிருந்து விடுபடவும் வழிபாட்டு மரபு உறுதுணை நின்றது. காலத்தின் தேவை கருதித் தனிமனிதர்கள் தாம் சமயத்தின் மீது கொண்டிருந்த பற்றின் காரணமாகவும் சமயத்தின் பெருமையை நிலை நிறுத்தவும் சமய நம்பிக்கைகளும் உண்மைகளும் அழிந்து விடாது பேணிக் காக்கவும் பல்வேறு இலக்கியங்களைப் படைத்தனர். இவை நலிவடைந்த சமயத்தின் பெருமையையும், புகழையும் அழியாவண்ணம் இன்றுவரை பாதுகாக்கும் பெருமைக்குரியன. இவை பாரம்பரியமாக இலங்கையில் சைவமக்களிடையே பாராயணம் பண்ணப்படுகின்றன. பெரியார்களால் இயற்றப்பட்ட சைவசமய இலக்கியங்களைப் பிரதானமாக மேல்வரும் கூறுகளில் அடக்கலாம்.

1. **விரதமகிமை கூறும் இலக்கியங்கள்** - பிள்ளையார் கதை, சிவராத்திரி புராணம், ஏகாதசிப் புராணம் போன்றவை.

2. **தலமகிமை கூறும் இலக்கியங்கள்** - திருக்கரைசைப் புராணம், கண்ணியவளை குருநாதசுவாமி கிள்ளைவிடுதூது, வெருகல் சித்திர வேலாயுதர் காதல், கல்வளையந்தாதி, மறைசையந்தாதி, புலியூரந்தாதி போன்றவை.

3. **சமய நம்பிக்கைகளை வலியுறுத்தும் இலக்கியங்கள்** - கண்ணகி வழக்குரை காதை, காமன் தகனம், காத்தவராயன் கூத்து, பொன்னர் சங்கர் கூத்து, அர்ச்சுனன் தபசு போன்றவை.

ஒல்லாந்தர் காலத்தில் விரத மகிமையைக் கூறும் இலக்கியங்களைப் படைத்தவர் எனும் வகையில் சுன்னாகத்தில் 300 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த **வரத பண்டிதர்** குறிப்பிடத்தக்கவர். பிரதான விரதங்களான பிள்ளையார் சஷ்டி, சிவராத்திரி விரதம், ஏகாதசி விரதம் ஆகியவற்றைத் தேர்ந்தெடுத்து விநாயகர், சிவன், திருமால் ஆகிய தெய்வங்களின் திருவிளையாடல்கள், அற்புதங்கள், இவ்விரதங்களை அனுட்டிப்பதன் பயன், பயன் பெற்றவர்களது வரலாறுகள் என்பவற்றைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் இவரால் பிள்ளையார் கதை, பிள்ளையார் புராணம், சிவராத்திரிப் புராணம், ஏகாதசிப் புராணம், குருநாத சுவாமி கிள்ளை விடுதூது, அமுதாராகரம் முதலான பயன்தரு இலக்கியங்கள்

பாடப்பட்டன. தனிமனிதரொருவர் ஈழத்தின் சைவ இலக்கிய மரபைப் பேணிக் காத்தமைக்கு வரத பண்டிதர் சான்றாகிறார்.

### அ. பிள்ளையார் கதை.

காலத்தின் சமயத் தேவையுணர்ந்து வரதபண்டிதரால் எழுதப்பட்ட தலை சிறந்த இலக்கியமாக பிள்ளையார் கதை காணப்படுகிறது. சிறப்பான 744 செய்யுள் அடிகளைக் கொண்ட ஆசிரியப் பாவாலாகிய இந்நூல் பாராயண மரபை பின்பற்றி எழுதப்பட்டுள்ளது. பிள்ளையார் விரதங்களில் ஒன்றான விநாயக சஷ்டி விரதத்தின் வரலாறு மகிமை, நோற்கும் முறை, அதன் பயன் என்பவை இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

**வெள்ளை எருதேறும் விரிசடையோன் பெற்றெடுத்த**
**பிள்ளையார் நோன்பின் பெருங்கதையை – உள்ளபடி**
**நோற்றார் மிகவாழ்வார் நோலா தருகிருந்து**
**கேட்டோர்க்கும் வாராது கேடு ”**

என பிள்ளையார் நோன்பின் சிறப்பு வியந்து கூறப்பட்டுள்ளது. ஆனைமுகன் வரலாறு, கயமுகாசுரனை அழித்து மூஷிக வாகனமாக்கியதும், ஆவணிச் சதுர்த்தி விரதச் சிறப்பும், மார்கழி விநாயக சஷ்டி விரத மகிமையும், விநாயகனைக் கருமங்களின் ஆரம்பத்தில் வணங்க வேண்டியதன் அவசியமும், சண்முகன் பிறந்த கதையும், திருமால் பாம்புருவானதும், திருக்கார்த்திகையின் பின்வரும் விநாயக விரதச்சிறப்பும், அதனை பாம்புருவான திருமாலும் இலக்கணசுந்தரி என்பாளும் அனுட்டித்துச் சாப விமோசனம் பெற்றமையும் இந்நூலிற் கூறப்பட்டுள்ளது.

கார்த்திகை கழிந்த பின்நாளில் வருகின்ற இருபத்தொரு நாட்கள் விநாயகரை அர்ச்சித்து ஒரே மனமாய் விநாயக சஷ்டி விரதத்தை நோற்கும் மக்கள் 21 நாளும் இச்சிறு நூலைப் பிள்ளையார் பெருங்கதை என்ற பெயரில் பாராயணம் பண்ணுவர். சாதாரண மக்கள் தாம் அனுட்டிப்பது விநாயகசஷ்டி விரதம் என்பதே அறியாது அனுட்டிக்க இந்நூல் வழிகாட்டுகின்றது.

**பொன்னுமிகும் கல்விமிகும் புத்திரரோடு எப்பொருளும்**
**மன்னும் நவமணியும் வந்தணுகும் எனவும்,**
**கற்றவரும் நோற்றவருங் காதலித்துக் கேட்டவரும்**
**பெற்றிடுவர் கற்பகத்தின் பேறு. எனவும்,**
**சூலிலார் நோற்கிற் சுதரை மிகப்பெறுவார்**
**சாலமிகும் வெங்கலியார் தாம் நோற்கில் - மேலைப்**
**பிறப்பெல்லாம் நல்ல பெருஞ்செல்வ மெய்திச்**
**சிறப்பிலே வாழ்வார் சிறந்து........**

எனவும் விநாயகர் நோன்பின் சிறப்பும், பேறும் இந்நூலில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

## ஆ. கண்ணகி வழக்குரை காதை.

ஆரியச்சக்கரவர்த்திகள் காலத்தில் ஈழத்தில் எழுந்த தலைசிறந்த இலக்கியமாக கண்ணகி வழக்குரை காதை கொள்ளப்படுகிறது. சிலப்பதிகார நூலின் கதையில் பல நீக்கங்களுடனும், புதிய சேர்க்கைகளுடனும் பொதுமக்களுக்கேற்ற வகையில் புதியதோர் இலக்கியமாக 14ஆம் நூற்றாண்டில் மட்டக்களப்பில் வாழ்ந்த **சக வீரர்** என்பவரால் செய்யப்பட்ட நூலாகும். 2219 பாடல்கள் கொண்ட இந்நூல் அகவல், வெண்பா சிந்து முதலிய யாப்புக்களால் ஆனது. நூற்கதைகள் பாடல்கள் என்பவற்றின் எண்ணிக்கை பல ஏடுகளில் வேறுபட்டுக் காணப்படுகிறது.

கண்ணகி வழிபாட்டுடன் தொடர்புடையதாகக் காணப்படும் இதனோடிணைத்து சிலம்புகூறல், கோவலன் கதை என்பவையும் படிக்கப்படுவது மரபாகும். திருக்குறள், இராமாயணம், பாரதம், நளவெண்பா, கந்தபுராணம் போன்ற நூல்களில் காணப்படும் நல்ல பல விழுமியக் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்ட இந்நூல் 10 காதைகளைக் கொண்டது.

மட்டக்களப்புப் பிரதேசத்திலே கண்ணகையம்மன் கோயில்களிலே ஆண்டுதோறும் விழாக்காலங்களிற் பாராயணம் பண்ணப்படும் இச்சிறுகாவியம், வடக்கில் கோவலனார் கதையென்றும், வன்னியில் சிலம்புகூறல் எனவும் கண்ணகையம்மன் வழிபாட்டுக் காலங்களில் பாராயணம் பண்ணப்படுகிறது. எனினும் இதில் வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் வரலாறு எங்கும் கூறப்படவில்லை.

மட்டக்களப்பில் படிக்கப்படும் கண்ணகி வழக்குரையில் வெடி அரசன், வீர நாராயணன் மற்றும் விளங்கு தேவன் போர்களும், மீகாமான் காதை, தாரியோட்டு மணி வாங்கிய காதை, மாதவி அரங்கேற்று காதை, பொன்னுக்கு மறிப்பு என்ற பாடல்கள் கண்ணகி வணக்கத்தோடும் பூசை முறைகளோடும் தொடர்பில்லாதவைகளாகும். ஆனால் வற்றாப்பளை கண்ணகி வழக்குரையில், கண்ணகி வழிபாட்டுடன் தொடர்புள்ள விடயங்கள் கூறப்பட்டுள்ளன.

கண்ணகி பாண்டிய மன்னனுடன் வாதாடல், பாண்டிய மன்னனும் தேவியும் இறத்தல், அவள் வன்னிமரத்தில் சங்கமமாதல் போன்ற விடயங்கள் கூறப்பட்டுள்ளன.

**பாண்டியனைப் பழிகொண்ட பைந்தொடியே யென்தாயே**
**தீண்டாத கற்புடைய செழுந்திருவே தெய்வதமே**
**வேண்டாது செய்தாலும் வேறுமன சாகாதே**
**பூண்டசினம் மாறியிப்போ பூங்கொடியே கண்பாராய்**

என்ற கண்ணகி வழக்குரை குளிர்ச்சிக்காதை 31ஆம் பாடல் இங்கு அவதானிக்கத்தக்கது. இக்காவியம் ஆலயங்களிற் பாடப்படும் போது பறை, உடுக்கு போன்ற கிராமிய இசைக்கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

தமிழ் இலக்கிய, இலக்கணப் பயில்வுப் பாரம்பரியத்தின் சிறப்பை உணர்த்துவதாக விளங்கும் இக் காவியமானது செந்நெறிப் பாங்கான இலக்கியமாகக் காணப்படுகின்றது. இதில் நாட்டார் பாடல் ஓசை, மரபு என்பன விஞ்சிக் காணப்படுகின்றன. சகுனம், சாத்திரம், நம்பிக்கைகள், சடங்குகள் முதலானவற்றை மக்கள் வாழ்க்கை நெறி முறைகளுக்கு உட்படுத்தி மக்கள் வாழ்வியலோடு இணையச் செய்வதில் இக்காவியங்கள் பெரும் பங்கு வகிக்கின்றன. அத்தோடு ஈழத்து நாட்டுக்கூத்து மரபைத் தழுவி வைத்தியம், சோதிடம் முதலிய அறிவியற் துறைக் கூறுகளையும் மருந்து, மந்திரம், வசியம் முதலான கிராமிய நம்பிக்கைக் கூறுகளையும் மக்களுக்குத் தெளிவு படுத்துவதில் செல்வாக்குச் செலுத்துகின்றன.

இவ்வகையில் கண்ணகி வழிபாட்டிற்குப் பெருமைசேர்ப்பதாக இக்காவியம் அமைகின்றது.

**மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.**

1. விரத மகிமை கூறும் இலக்கியங்கள் மூன்று எழுதுக.
2. பிள்ளையார் கதை எனும் நூலின் ஆசிரியர் யார்? அவர் எழுதிய ஏனைய நூல்களைக் கூறுக.
3. கண்ணகி வழக்குரை காதை எனும் இலக்கியம் கூறும் சமய நம்பிக்கைகளை எழுதுக.
4. ஈழத்துச் சைவ இலக்கியங்கள் படைக்கப்பட்டமைக்கு அடிப்படையான இரு காரணங்களைக் குறிப்பிடுக.

## செயற்பாடு.

- ஈழத்தில் எழுந்த சைவ இலக்கியங்களையும் அவற்றைப் பாடியவர்களையும் அட்டவணைப்படுத்தி வகுப்பறையில் காட்சிப்படுத்துக.
- காமன் தகனம் தொடர்பான விடயங்களை ஆசிரியர் துணையுடன் தேடித் தொகுத்து வகுப்பறையில் காட்சிப்படுத்துக.

## பாடச்சுருக்கம்.

- சமயத்தின் தொன்மைக்கும் நிலைபேற்றிற்கும் காரணமானவை சமய இலக்கியங்களாகும்.
- ஒல்லாந்தர் காலத்தில் சமய இலக்கியங்களில் வரதபண்டிதரின் இலக்கியங்கள் முதன்மை பெற்றன.
- ஆரியச்சக்கரவர்த்திகள் கால சமய இலக்கியங்களில் கண்ணகி வழக்குரை காதை பிரதானமானது.
- சமய நம்பிக்கைகள், வழக்காறுகள், சாத்திரங்கள், சம்பிரதாயங்களையும் சைவ நெறிமுறைகளையும் நிலைக்கச் செய்ததில் இவ்விலக்கியங்கள் முதன்மை பெறுகின்றன.

# 23 ஈழத்துச் சமய நிறுவனங்கள்

## (01) சைவபரிபாலனசபை

காலத்தின் தேவையே சமுதாயத்தில் சில தலைவர்களையும், இயக்கங்களையும், கூட்டு முயற்சிகளையும் உருவாக்குகின்றது. இலங்கை வாழ் சைவத் தமிழ்ச் சமூகத்தை எடுத்துக் கொண்டால் 19ஆம் நூற்றாண்டில் யாழ்ப் பாணத்தில் நிலவிய சமய, சமூக, கலாசார சூழ்நிலைகள் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர், சேர்.பொன்.இராமநாதன் போன்ற சமுதாயக் காவலர்கள் உருவாக வழிவகுத்தது. நாவலர் மறைவின் பின்னிருந்த சூழ்நிலைகள் யாழ்ப்பாணம் சைவபரிபாலனசபை, சைவ வித்தியா விருத்திச் சங்கம் போன்ற பெரும் நிறுவனங்கள் உதயமாகக் காரணமாயிருந்தன.



15ஆம் நூற்றாண்டில் போர்த்துக்கேயர் வந்து யாழ்ப்பாணத்தை ஆக்கிரமித்த காலத்தில் இலங்கையில் பண்டைக்காலத்திலிருந்து போற்றிப் பேணப்பட்ட சைவசமயம் நிலைகுலையத் தொடங்கியதும், சைவக் கோயில்கள் இடித்தழிக்கப்பட்டதும் சைவக் கிரியைகள், அனுட்டானங்கள், கல்விமுறைமை முடக்கப்பட்டதும் நாம் அறிந்ததே. அரசினால் சைவ மக்களின் கல்விமுறை பற்றிக் கவனம் எடுக்கப்படவில்லை. குறிப்பாக தமிழ்ச்சிறார்கள், சைவச்சிறார்கள் செறிந்து வாழ்ந்த யாழ்ப்பாணத்தில் அவர்கள் கல்வியறிவு மேம்பாட்டிற்கென தகுந்த கல்வி முறைமை வகுக்கப்பட்டிருக்கவில்லை. சைவ சாதனைகளையும், சமயக்கல்வியையும் ஒரு சிலர் மறைவாகப் பயின்று வரலாயினர். இக்காலத்தில் யாழ்ப்பாணம், பல கத்தோலிக்கக் கோவிற் பற்றுக்களாகப் பிரிக்கப்பட்டு, உத்தியோகம் பெற விரும்புவோர் சார்பான கல்வியைக் கத்தோலிக்கக் குருமாரே போதித்தனர். இவ்வாறே போர்த்துக்கேயருக்குப் பின் ஒல்லாந்தர் யாழ்ப்பாணத்தைக் கைப்பற்றிய காலத்தில் புரட்டஸ்தாந்து கிறிஸ்தவ சமயமும், கிறிஸ்தவ மதம் சார்பான ஆங்கிலமொழிமூலக் கல்வியும் 32 கோவிற்பற்றுக்களின் மூலம் வழங்கப்படலாயிற்று. யாழ்ப்பாண மக்களில் அனேகர் சைவநெறி ஆசாரங்களைக் கைநழுவவிடாது, தத்தம் வீடுகளில் சைவர்களாயும், வெளியிடங்களிற் போலிக் கிறிஸ்தவர்களாயும் நடந்துகொண்டனர்.

மேலும் ஒல்லாந்தராட்சிக் காலத்தின் இறுதியில் அழிக்கப்பட்ட தமது சைவக்கோயில்களை மீளக்கட்டவும் சைவப்பாடசாலைகளை நடத்தவும்

சைவமக்கள் அனுமதிக்கப்பட்டனர். 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் யாழ்ப்பாண ஆட்சி ஆங்கிலேயர் கைக்கு மாறியது. அவர்கள் சமய விடயங்களில் நடுநிலைக் கொள்கையைப் பின்பற்றுவதாகப் பிரகடனப்படுத்தினர். அதனால் சைவப் பாடசாலைகளை வெளிப்படையாக நடாத்தக் கூடியதாக இருந்தது. அதனால் சைவப்பாடசாலைகள் எண்ணிக்கையிலும் பயன்பாட்டிலும் வளர்ச்சியுற்றன. பிரித்தானிய ஆட்சியின் ஆரம்ப நாட்களில் ஒல்லாந்தர் 32 கோயிற் பற்றுக்களிலும் ஆரம்பித்து அவற்றைக் கொழும்பு புரட்டஸ்தாந்து மதத்தலைவர்களின் மேற்பார்வையின் கீழ் வைத்தனர்.

அரசாங்கத் தொழில் வாய்ப்புக்கள் பெறுவதற்கு ஆங்கிலமொழியறிவு கட்டாயமாக இருந்ததால் யாழ்ப்பாணத்துச் சைவமக்கள் அரசினர் ஆங்கிலப் பாடசாலை ஒன்றையாவது ஆரம்பிக்க வேண்டியது அவசியமெனக் கருதி, அதற்காக சைவசமய ஸ்தாபனமொன்றிற்கு அங்கீகாரமும் நிதியுதவியும் தரவேண்டுமென ஆங்கில அரசுக்கு மனுச்செய்தனர்.

இரண்டு பாடசாலைகள் அமைக்கப்பட்டன. அதில் யாழ்ப்பாணம் பிரதான வீதியில் அமைக்கப்பட்ட யாழ் மத்திய கல்லூரி பீற்றர்பேர்சிவல் பாதிரியாரால் மேற்பார்வை செய்யப்பட்டது. மற்றது வண்ணார்பண்ணையில் ஜோன்கில்னர் பாதிரியாரால் மேற்பார்வை செய்யப்பட்ட வண்ணார்பண்ணை கில்னர் கல்லூரி ஆகும். பெறக்கூடிய தகவல்களின் பிரகாரம் 1834 ஆம் ஆண்டில் யாழ்ப்பாண மாவட்டத்தில் 239 சைவத்தமிழ்ப் பாடசாலைகளும், 160 புரட்டஸ்தாந்து தமிழ் ஆங்கிலப் பாடசாலைகளும், 24 கத்தோலிக்கத் தமிழ்ப் பாடசாலைகளும் இருந்தன. 1829 இல் சேர் எட்வேட் பான்ஸ் தேசாதிபதியாக இருந்த காலத்தில் தொடங்கிய பாடசாலை ஆணைக்குழு 1841 இல் மத்திய பாடசாலை ஆணைக்குழுவாக மாறியது.

1843 முதல் வெவ்வேறு மிஷனறிச் சங்கங்களின் ஆதரவிலான கல்விக் கூடங்களுக்கு உதவிப்பணம் வழங்கப்பட்டபோதும் சைவத்தமிழ் பாடசாலைகளுக்கு அரச நிதியுதவி பெறமுடியாது போயிற்று.

ஐரோப்பியர் வருகையினால் இந்நாட்டில் நலிந்திருந்த சைவசமயத்தை ஆங்கிலேயர் காலத்தில் நலியவிடாது காத்தவை சைவநிறுவனங்களே. இவ்வகையில் சைவ நிறுவனமான சைவ பரிபாலன சபை பற்றிய சில முக்கிய விபரங்களை மேலும் காண்போம்.

யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை சர்வதாரி ஆண்டு சித்திரை மாதம் 29ம் திகதி (29.04.1888) வண்ணார்பண்ணையில் ஸ்தாபிக்கப்பட்டது.

"யாழ்ப்பாணம் சைவ சமய பரிபாலன சபை" என்ற பெயர் விகிர்தி வருடம் கார்த்திகை - 15ஆம் நாள் (15.11.1890) திருத்தப்பட்ட பிரமாணங்களுக்கமைய "யாழ்ப்பாணம் சைவபரிபாலன சபை என்ற பெயருக்கு மாற்றப்பட்டது. சபையின் தொடக்க நோக்கங்களாக மேல்வரும் விடயங்கள் அமைந்தன. காலத்தின்

தேவை கருதி சைவமக்களுக்குச் சிறப்பாகவும், தமிழ் மக்களுக்குப் பொதுவாகவும் நலன் தரும் விடயங்களை சைவபரிபாலன சபை முன்னெடுக்க வேண்டிய நோக்கில் அவை அமையலாயின :-

1. சைவசமயத்தை வளர்த்தல், பிற சமயத்தில் நம்மவரைச் சேரவிடாது தடுத்தல்.
2. சைவமுறைப்படி சைவப்பிள்ளைகள் தாய்மொழியாம் தமிழ்மொழியையும் மேலதிகமாக ஆங்கிலத்தையும் பயின்று கொள்வதற்கான வகையில் பாடசாலைகளை வேண்டிய ஊர் தோறும் தாபித்து நடத்துதல்.
3. கல்வியறிவும், ஒழுக்கமும் உடைய பெரியோர்களைக் கொண்டு சைவசமய விருத்தி கருதிப் பிரசங்கங்கள் செய்வித்தல்.
4. சைவத்தமிழ் மக்களின் நன்மையும் விருத்தியும் கருதி பத்திரிகைகளைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிடுதல்.
5. அழிந்திருக்கும் சைவ ஆலயங்கள், மற்றும் பழமை வாய்ந்த தரும தாபனங்களைப் புதுப்பித்து, ஒழுங்காக இயங்கச் செய்தல்.
   கோயில்கள், திருமடங்கள் முதலிவற்றிற்குரிய அசைவுள்ள, அசைவற்ற பொருள்களைப் பிறர் கவராது இருக்க, அவற்றைத் தாமே பொறுப்பேற்றுப் பாதுகாத்துச் சேர வேண்டிய ஸ்தாபனங்களுக்குச் சேர வைத்தல்.
6. வாசிகசாலைகள், நூல்நிலையங்கள் போன்றவற்றை தாபித்து நடத்துதல்.
7. இன்னும் சைவத்தையும் தமிழையும் பங்கமின்றி வளர்ப்பதற்கு என்னென்ன தேவையோ அவற்றைத் தவறாது செய்தல்.
8. சைவசமய அறிவையும், புராண இதிகாச விளக்கங்களையும் தமிழிலக்கிய இலக்கணத் தேர்ச்சிகளையும் ஊட்டும் சைவ நூல்களைப் பதிப்பித்து வெளியிடல்.

இந்நோக்கங்களின் முக்கிய அம்சங்களாக விரோதி ஆண்டு ஆவணி 28ஆம் நாள் (11.09.1889) புதன்கிழமை, இரண்டு வாரங்களுக்கொரு வெளியீடாக தமிழில் **"இந்துசாதனம்"** என்ற சஞ்சிகையும் ஆங்கிலத்தில் **"Hindu Organ"** என்னும் செய்தியிதழும் வெளியிடப்பட்டன. அவற்றைப் பதிப்பித்து வெளியிடும் முகமாக யாழ்ப்பாணம் காங்கேசன்துறை வீதியில் **சைவப்பிரகாச அச்சியந்திர சாலை** நிறுவப்பட்டது.


யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரி


சைவப்பிரகாச அச்சியந்திர சாலை



இந்து சாதனம் பத்திரிகை

சைவ பரிபாலன சபை, சைவப்பிள்ளைகள் சைவச்சூழலில் உயர் கல்வி கற்க வேண்டும் என்ற நன் நோக்கில் 1890 ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் இந்துக் கல்லூரியைத் தோற்றுவித்து சைவக் கல்விக்கு நற்பணி ஆற்றியது.

நாவலர் பெருமானது சொற்பொழிவுகள் வாயிலாக சைவநன்மக்கள் அடைந்த பயனை, நன்மைகளை உணர்ந்த சைவ பரிபாலன சபையானது, அவரின் வழியில் அவற்றை, மாணவர்களையும், சைவத் தமிழ்ச் சான்றோர்களையுங் கொண்டு ஊர்கள் தோறும் சொற்பொழிவுகள் செய்வித்து வந்தமை குறிப்பிடத்தக்கது. இச்சொற்பெருக்குகள் பாடசாலைகள், திருக்கோயில்கள், திருமடங்களில் நடைபெற்றுவந்தன.

சைவபரிபாலனசபை பல பதிப்பு முயற்சிகளை மேற்கொண்டு பணியாற்றியது. இந்தவகையில் தத்துவ பிரகாசப்பதிப்பு, அடங்கன்முறை, திருவாசகம், நாவலர் ஆக்கங்கள், பதிப்புகள் முக்கியம் பெற்றன. இன்று சைவசமய பாடப் பரீட்சைகளை பாடசாலை மாணவர்களின் சமய அறிவு விருத்தி கருதி இடைவிடாது நடத்தி வருவதோடு, சிறப்புச் சித்தி பெறுபவர்களுக்கும், வெற்றியாளர்களுக்கும் தங்கப்பதக்கங்கள், புத்தகப்பரிசில்கள் என்பன வழங்கப்பட்டும் வருகின்றன.

**மேல்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.**

1. சைவ பரிபாலன சபையின் தோற்றத்துக்கான பின்னணி யாது?
2. சைவ பரிபாலன சபை வெளியிட்ட செய்திச் சஞ்சிகைகள் பற்றிக் குறிப்பிடுக.
3. மக்களினதும் மாணவர்களினதும் சைவ அறிவு மேம்பாட்டுக்கு பரிபாலன சபையாற்றிய பங்கு, பணிகள் எவை?

**செயற்பாடு**

01) "இந்து சாதனம்", "HINDU ORGAN" ஆகிய இரு செய்தித்தாள்களில் ஏதாவது சில பிரதிகளைத் தேடிப் பெற்று வகுப்பறையிற் காட்சிப்படுத்துங்கள்.

02) "சைவமதி" என்ற தலைப்பில் ஒரு சஞ்சிகையைத் தயாரியுங்கள்.

### பாடச்சுருக்கம்

- சைவபரிபாலன சபை 1888இல் ஆரம்பிக்கப்பட்டு இன்றுவரை தன் பணியைத் தொடர்ந்து செய்கின்றது.
- சைவபரிபாலன சபையினரால் வெளியிடப்படும் "இந்து சாதனம்" சமயத் தகவல்களையும் சமய அறிவுப் போதனைகளையும் அறிந்து கொள்ள உதவுகிறது.
- பதிப்பு முயற்சிகளும் வெளியீடுகளும் நற்பயன் தந்தன.
- ஊர்கள்தோறும் சமயப்பிரசங்கங்கள் ஒழுங்கு செய்யப்பட்டன.
- பாடசாலை மாணவர்களுக்கிடையில் சைவசமயப் பாடப்பரீட்சைகள் நடாத்தப்படுகின்றன.

## (02) ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன்.

### (அ) அறிமுகம்

இராமகிருஷ்ணமிஷன் சமய சமூகப் பணிகளில் ஈடுபடும் உலகப்புகழ் பெற்றதொரு நிறுவனமாகும். இது 1897ஆம் ஆண்டு மே மாதம் 1ஆம் திகதி வங்காளத்தில், கல்கத்தாவிலிருந்து 7 கிலோமீற்றர் தொலைவில் கங்கைக்கரையில் பேலூர் எனுமிடத்தில் நிறுவப்பட்டது. இதுதான் இராமகிருஷ்ண மிஷனின் தலைமையகம் ஆகும். இதை விட இன்னும் 26 கிளைகள் இந்தியாவிலுள்ளன. அவற்றோடு சேர்த்து 135 கிளைகள் உலகம் முழுதும் பரந்துள்ளன. இராமகிருஷ்ண மிஷன் 1897இல் உருவாக்கப்பட்டு 1909இல் பதிவு செய்யப்பட்ட ஸ்தாபனமாகிச் செயற்பட்டு வருகிறது.

### (ஆ) இலங்கையில் இராமகிருஷ்ண மிஷன்

இலங்கையில் இராமகிருஷ்ண மிஷன் 1930ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. இது பேலூர் இராமகிருஷ்ண மிஷனின் நேரடிக் கட்டுப்பாட்டில் இயங்கும் மிஷன் ஆகும். இதற்கான சொந்தக் கட்டட முயற்சி 1936 ஏப்ரல் 4இல் நிறைவேறியது. இராமகிருஷ்ண மிஷன் ஆச்சிரமம் இதற்கு முன்பாகவே திருகோணமலையில் 1925இல் அமைக்கப் பட்டது. இது சுவாமி சர்வானந்தர்



அவர்களால் முதன்முதலில் ஆரம்பிக்கப்பட்டது. சுவாமி சர்வானந்தர் இலங்கைக்குப் பலதடவைகள் வருகை தந்ததன் விளைவாக மட்டக்களப்பு, திருகோணமலை, யாழ்ப்பாணம் போன்ற இடங்களில் மிஷனின் ஸ்தாபனங்களும் நிறுவப்பட்டன. இவற்றை நிர்வகிக்கச் சுவாமிகளும் இராமகிருஷ்ண மிஷனால் நியமிக்கப்பட்டார். அவ்விடங்களில் பாடசாலைகளும் அநாதைச்சிறுவர் இல்லங்களும் நிறுவப்படலாயின.

இவை கொழும்பு இராமகிருஷ்ண மிஷன் தோற்றத்திற்கு முன்பே நடைபெறலாயின. கொழும்பு இராமகிருஷ்ண மிஷனின் புதிய சொற்பொழிவுக் கூடம் 1936இலும், பிரார்த்தனைக் கூடம் 1938 இலும் திறந்து வைக்கப்பட்டன. கதிர்காமத்தில் இராமகிருஷ்ண மடம் சொந்தமாக 1953இல் நிறுவப்பட்டது. அதற்கு முன்பே கதிர்காம யாத்திரிகர்களுக்கு இலவசமாக உணவு வழங்கும் பொறுப்பை ஏற்று 1943 முதல் நடாத்திவந்தது. 10 வருடங்களுக்குப் பின் சொந்தக்கட்டடம் பெற்றுக் கொள்ளப்பட்டது. அதை 1976 நவம்பர் 10இல் அரசு சுவீகரித்ததால் கதிர்காம இராமகிருஷ்ண மிஷன் மடத்தின் சேவை அடியவர்களுக்கு இல்லாமற் போனது.

மட்டக்களப்பில் 1928 – 1932 களில் மண்ணாலும் ஓலையாலுமான இராமகிருஷ்ண மிஷன் இயங்கி வந்தது. 1934இல் இது புதிய கட்டடமாக இயங்கலாயிற்று.

### (இ) பணிகள்

ஸ்ரீ இராமகிருஷ்ண மிஷன் மேல்வரும் பணிகளை ஆற்றி வருகிறது.

- கல்விப்பணி
- கலாசாரப்பணி
- சமூக சேவை
- சமயப்பணி

### 1. கல்விப்பணி




இராமகிருஷ்ண மிஷனின் கல்விப்பணி 1917இல் யாழ்ப்பாணத்தில் ஆரம்பமாயிற்று. யாழ்ப்பாணம் வைத்தீஸ்வரா வித்தியாலயம் பொறுப்பேற்கப்பட்டு இராமகிருஷ்ண மிஷனின் கீழ் இயக்கியது. 1960இல் பாடசாலைகள் அரசுடமையாகும் வரை மிஷனே மாணவர்களுக்கு அறிவொளியூட்டியது.

இலங்கையில் இராமகிருஷ்ண மிஷன் பாடசாலைகள் கிழக்கு மாகாணத்தில் 19உம்

வடக்கில் இரண்டும் பதுளையில் ஒன்றுமாக நாடெங்கும் 22 இயங்கி வந்தன. கிழக்கில் மட்டும் 3 அனாதைச் சிறுவர் இல்லங்கள் இயங்கின. 1925 இல் கல்லடி உப்போடை சிவானந்த வித்தியாலயமும், திருகோணமலை இந்துக்கல்லூரியும் மிஷனின் கல்லூரிகளாகத் திறக்கப்பட்டன. பாடசாலைகளை விட குருகுலங்கள் பலவும் இராமகிருஷ்ண மிஷனால் தோற்றுவிக்கப்பட்டு உபநிடதம், இலக்கியம், சமஸ்கிருதம், யோகம் என்பனவும் கற்பிக்கப்படுகின்றன. இராமகிருஷ்ண மிஷன் தொடக்கத்திலிருந்தே பூசை, உபநிடதவகுப்பு, பகவத்கீதை, ஆத்மார்த்த உரையாடல் என்பவற்றை வகுப்புப் பேதமின்றி ஒழுங்காகவும் செம்மையாகவும் செய்து வருகிறது.

### 2. கலாசாரப்பணி

இலங்கையில் ஆன்மிக கலாசார வளர்ச்சியை ஏற்படுத்தும் செயற்பாட்டில் இராமகிருஷ்ண மிஷன் வெளிநாடுகளிலிருந்து சொற்பொழிவாளர்களை, கலைஞர்களை வரவழைத்து இயக்கத்தின் செயற்பாட்டை விரிவாக்கியுள்ளது. கொழும்பு இராமகிருஷ்ண மிஷனின் கலையரங்கு காலத்துக்குக் காலம் கலாசார நிகழ்வுகளை நடாத்தி வருகிறது. நாட்டிய, நாடக அரங்குகளும் இலவசமாகக் காண்பிக்கப்படுகின்றமை குறிப்பிடத்தக்கது.

மடத்திலிருக்கின்ற சுவாமிகள் இலங்கையின் பல இடங்களுக்கும் சென்று நிவாரணப் பணிகளிலும் கலாசாரப் பணிகளிலும் முன்னின்று பணியாற்றி வருகின்றனர். இராமகிருஷ்ண மிஷன் தன் வெளியீட்டகங்கள் மூலம் வெளியிடும் நூல்கள் அனைத்தையும் உலகெங்கும் உள்ள மிஷன் கிளைகள் மூலம் மக்களுக்கு கிடைக்கச் செய்கிறது.

### 3. சமூகசேவை

இராமகிருஷ்ணமிஷன் ஆற்றும் சமூகப்பணிகளில் நிவாரணப் பணிகள் குறிப்பிடத்தக்கவை. இராமகிருஷ்ண மிஷனில் நடைபெறும் விழாக்களில் மக்கள் இன, மத, சாதி பேதமின்றி கலந்து கொள்ளவும் தம் கருத்துக்களை வெளிப்படுத்தவும் முடியும். இளைஞர் மாணவர்கட்கான மாநாடுகள் என்பனவும் செய்யப்படுகின்றன. இதைவிட மிஷனின் அனாதை இல்லங்களும் குறிப்பிட்டுக் கூறும் வகையில் சேவையாற்றுகின்றன.

### 4. சமயப்பணி

இராமகிருஷ்ண மிஷனின் கருத்தில் சமயமும் கலாசாரமும் பிரிக்கமுடியாதவை எனும் வாசகம் ஆழமாக உள்ளது. இந்துமதம் உயிர்த்துடிப்புடனிருப்பது, அது தன்னைத்தானே புதுப்பிப்பது என்ற கருத்தை

## கொழும்பு இராமகிருஷ்ண மிஷன்


ஆச்சிரம வளாகம்


இராமகிருஷ்ணரின் திருவுருவப் படம்


மண்டபம்

## மட்டக்களப்பு இராமகிருஷ்ண மிஷன்


ஆச்சிரமமும் ஆண் பிள்ளைகள் இல்லமும்


ஆலயம்


சாரதா மகளிர் இல்லம்


காரைதீவு மகளிர் இல்லம்


திருகோணமலை இந்துக் கல்லூரி


கல்லடி சிவானந்தா வித்தியாலயம்


நிவாரணப் பணிகள்

மகுட வாசகமாகக் கொண்டியங்குகிறது. அவ்வப்போது நாடெங்கும் ஆன்மிக சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறது. இதற்கென பிறநாட்டு அறிஞர்கள் வரவழைக்கப்படுகின்றனர்.

ஆன்மிக, சமய நூல்களை வெளியிடுவதன் மூலம் சிறப்பான சமயப் பணியாற்றுகிறது. வேதாந்தகேசரி, இராமகிருஷ்ண விஜயம், வேதாந்த பிரபுத்தபாரதம், இராமகிருஷ்ண ஜோதி போன்ற நூல்கள் இந்நிறுவனத்தின் சமயப்பணிகளுக்கு எடுத்துக்காட்டுக்களாகும்.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை எழுதுக.

1. இராமகிருஷ்ண மிஷனின் தலைமையகம் எங்கே அமைந்துள்ளது?
2. தலைமை நிறுவனத்தின் நேரடிக் கட்டுப்பாட்டில் செயற்படும் கொழும்பு இராமகிருஷ்ண மிஷன் எப்போது ஆரம்பிக்கப்பட்டது?
3. இலங்கையில் எல்லாமாக எத்தனை மிஷன் பாடசாலைகள் ஆரம்பிக்கப்பட்டன?
4. இராமகிருஷ்ண மிஷனின் பணிகளை வகைப்படுத்துங்கள்.

## செயற்பாடு

01) இராமகிருஷ்ண மிஷன் எனும் தலைப்பில் பத்திரிகைகளில் வெளியான கட்டுரைகள், செய்திகளைத் தேடிப் பெற்று வகுப்பறையிற் காட்சிப்படுத்துங்கள்.

## பாடச்சுருக்கம்

- இராமகிருஷ்ண மிஷன் 1897இல் பேலூரில் ஆரம்பிக்கப்பட்டது.
- இலங்கையில் இராமகிருஷ்ண மிஷனின் பணிகள் 1930இல் ஆரம்பித்த போதும் 1936இல் தான் சொந்தக் கட்டிடத்தில் இயங்கலாயிற்று.
- இராமகிருஷ்ண மிஷனின் பணிகளை கல்விப்பணி, சமூகப்பணி, சமயப்பணி, கலாசாரப்பணி என வகைப்படுத்தி நோக்கலாம்.

# 24 சமய வாழ்க்கையும் சூழலும்.

ஆன்மாக்களைப் பக்குவப்படுத்துவது சமயம் ஆகும். சமயம் சமுதாயத்தில் ஒரு முக்கிய இடத்தைப் பெறுகிறது. சமுதாயத்தில் தனி மனிதனின் வாழ்க்கை நெறியே சமயம் என்றழைக்கப்படுகிறது. குறிக்கோளடிப்படையில் மக்களைப் பக்குவப்படுத்துகின்ற செயல் நிலையில் உயர்நிலை நோக்கிச் செலுத்துகிற சமய நிறுவனங்களாக திருக்கோயில்கள் அமைகின்றன.

இறைவனை இருத்தி மக்கள் வழிபடும் இடம் ''கோயில்'' எனவும், ''ஆலயம்'' எனவும் கூறப்படும். கோயில் என்பதில் இருபொருள் உண்டு. கோ+இல், இதில் ''கோ'' என்பது நம்மை ஆளும் அரசன் எனவும், ''இல்'' என்பது அவன் வாழும் இடம், குடிகொண்ட பதி, திருப்பதி, மேலான இடம் எனவும் பொருள்படும். மற்றொன்று ''கோ'' என்பது எல்லா உலகங்களையும் ஆண்டு கொள்ளும் ஆண்டவன் எனவும் ''இல்'' என்பது அவன் எங்கும் நிறைந்தவனானாலும் அவன் இருக்குமிடம் ஒன்று எனவும் வரும் எனக் கோயில் குறித்து விளக்குவர். ''ஆலயம்'' என்ற சொல்லில் ''ஆ'' என்பது ஆன்மா எனவும், ''லயம்'' என்பது லயிப்பது அல்லது சேர்வதற்கு உரியது எனவும் பொருள்படும். ஆகவே, ''ஆ + லயம் = ஆலயம்'' எனப்படுகிறது. கடவுள் திருவடியில் மனம் என்னும் ஆன்மா லயித்து இருத்தல் என்பதாகும் என ஆலயம் பற்றி விளக்குவார்.

கோயில், ஆலயம் குறித்த விளக்கங்களில் இறைவன் இருக்குமிடம் அவ் இறைவனை உயிர்கள் சென்று தொடர்பு கொள்ளும் இடம் என அவற்றைப் பொதுவாக விளங்கிக் கொள்ளலாம். அக்கோயிலுக்கும் மக்களுக்கும் உள்ள தொடர்பிலான செயற்பாடுகள் தெய்வத்தை நோக்கிய வழிபாட்டுச் செயற்பாடுகளாக அறியப்பட்டன. கோயில் கட்டுதல், மண்டபம் அமைத்தல், கலை வெளிப்பாடுகள் முதலியவற்றையும் தொண்டு என்ற வகையில் வழிபாட்டின் அடிப்படையாகவே செய்துள்ளனர்.

கோயிலைத் தூய்மை செய்தல், வழிபடும் மக்களுக்குரியன செய்தல், பாடல் பாடுதல், கலை வெளிப்பாடுகள் மூலம் பணி செய்தல் போன்றனவும் வழிபாட்டிற்குகந்த செயல்களாகவே கொள்ளப்படுகின்றன. இறைவனை வணங்குதலில் பூசை வழிபாடு, நீராட்டு, மலர் வழிபாடு, மாலை அணிவித்தல், தீப வழிபாடு என்பனவும் வணங்கும் முறைகளில் அமைகின்றன.

கோயிலின் அடிப்படையாக வலியுறுத்தப்படும் விதிமுறைகளும், கோயிலில் நிறைவேற்றப்படும் செயல் முறைகளும் குடிமக்களை தழுவிய கோயிலின் அடிப்படைகளாகின்றன. அவ்வகை முறைகளிலேயே மன்னர்கள் கோயில்களை அமைத்துள்ளனர்.

ஆலயங்கள் அமைப்பு முறையால் கலைகளின் இருப்பிடமாகவும், விழாக்களால் மக்கள் வேறுபாடுகளைக் களையும் இடமாகவும், காணிக்கைகளால் பொருளாதாரத்தின் வைப்பிடமாகவும், நீர், மரம் போன்றவற்றைப் பேணுவதினால் சுகாதாரத்தை வலியுறுத்தும் இடமாகவும், கல்வெட்டுக்கள் மூலம் வரலாற்றை அறிவுறுத்தும் இடமாகவும், திகழ்வதால் கோயில்கள் ஊரைச் சார்ந்தனவாக, ஊருக்குச் சார்பிடமாகத் திகழ்கின்றன. அதனாலேயே "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்னும் மொழி அமைந்தது. கோயிலை அலகிடுதல் (பெருக்குதல்), திருமெழுக்கிடுதல் (மெழுகுதல்) நந்தவனம் வைத்தல், மலர் எடுத்தல், மாலை தொடுத்தல், தூபம் இடுதல், திருவிளக்கு ஏற்றுதல், பூசைப் பொருள் கொடுத்தல் முதலியன தொண்டுகளாகக் கூறப்படும்.

## திருத்தலங்களைத் தூய்மையாக்கல்.

"என் கடன்பணி செய்து கிடப்பதே" என்ற எண்ணத்தோடு வாழ்ந்தவர் திருநாவுக்கரசர். அடியார்களிலேயே நீண்ட நாள் வாழ்ந்தவர். சமண சமயத்தில் இருந்த அவரை இறைவன் சூலை நோய் கொடுத்து மீண்டும் சைவத்திற்குக் கொணர்ந்தது அனைவரும் அறிந்ததேயாகும். சமூகப் பணி செய்தவர்களில் தலைமையிடத்தைப் பிடித்திருப்பவர் திருநாவுக்கரசரேயாவார். செல்லும் இடமெல்லாம் இறைவன் குடிகொண்டிருக்கும் தலங்கள் தூய்மையுடன் இருக்க வேண்டும் என எண்ணினார். எனவே உழவாரப்படை கொண்டு திருக்கோயில்களைச் சீர் செய்தார். ஒவ்வொரு தலமாகச் சென்று இப்பணியைச் செம்மையுறச் செய்வதே இவரது கடமை என்பதால்தான் என் கடன் பணி செய்து கிடப்பதே எனப் பாடுகிறார். இறைவனைத் தேடி கோயிலுக்கு வரும் பக்தர்கள் எவ்விதத்திலும் பாதிக்கப்படக் கூடாது என்பதற்காகவும், அங்கேயே தங்கும் அடியார்கள் தொல்லைகள் இன்றி இருக்கவும் நாவுக்கரசரின் பணி உதவுவதாக இருந்தது.

## நீர்நிலைகளைப் பாதுகாத்தல்.

மனித வாழ்க்கைக்குத் தண்ணீர் இன்றியமையாதது. இதனையே, "நீரின்று அமையாது உலகு" என்று திருவள்ளுவர் கூறுகிறார். திருக்கோயிலினின்றும் பிரிக்கப்படாது உடனிருந்து இயங்குவது தீர்த்தம். அதாவது திருக்குளம் ஆகும். தீர்த்தத்தை சார்ந்தே திருக்கோயில் விளங்குகிறது எனலாம். திருக்கோயில்களைச் சார்ந்து மிக அகலமாகவும் ஆழமாகவும் எழிலுற அமைந்துள்ள திருக்குளங்களைக் காணும் பொழுதெல்லாம் நமது சமுதாய முன்னோடிகள் சமுதாய அமைப்பை நிர்மாணித்த திறன் நமக்குப் புலப்படுகிறது. ஆற்றங்கரைகளிலும் பெரிய திருக்குளங்களின் கரைகளிலும் திருக்கோயில்கள் அமைக்கப்பெற்றன. இந்தத் திருக்குளங்களைப் பாதுகாத்தல், தூய்மையாகப் பேணுதல் திருக்கோயில்களின் கடமையாக இருந்தது. மானிடர் உடல் வெப்பம்

தணியத் தீர்த்தத்தில் மூழ்கினர். ஆன்மாவைப் பற்றி நிற்கும் ஆணவ வெப்பம் தணிய இறைவனின் திருவருட்புனலில் மூழ்கினர். இத்தகைய திருக்கோயில்களின் திருக்குளங்களை நாயன்மார்கள் அவ்வப்பொழுது தூர்வையெடுத்துத் தூய்மைப்படுத்திப் பாதுகாத்து வந்துள்ளனர்.

எடுத்துக்காட்டாக, பிறவியிலேயே கண் தெரியாதவராகப் பிறந்த தண்டியடிகளின் பணி மிகவும் போற்றத்தக்க ஒன்றாகும். சமணர்கள் இவருக்குப் பல்வேறு இன்னல்களைச் செய்தனர். இந்நிலையிலும் திருவாரூரில் குளம் தோண்டும் பணியைச் செய்து தூய்மையான நீர் கிடைக்க வழி செய்தவர் தண்டியடிகளாவர்.

## தாகம் தணித்தல்.

இன்று இருக்கும் சாலை மற்றும் போக்குவரத்து வசதிகள் அக்காலத்தில் இல்லை. கால்நடையாகவே செல்லும் மக்களின் களைப்பு நீங்க, நிழல் தரும் மரங்களுடன் தண்ணீர் பந்தலும் இருந்தால் பயணம் சிறப்பாக அமையும். இந்த எண்ணத்துடன் தண்ணீர்ப் பந்தல் அமைத்த அடியார்களைப் பெரியபுராணத்தில் காணமுடிகிறது. உணவு படைத்து அடியார்களின் பசியைப் போக்கியதோடு, அவ்வடியார்களின் நீர் வேட்கையையும் போக்கினார் அப்பூதியடிகள். அதுவும் தனது பெயரில் அமைக்காமல் நாவுக்கரசர் பெயரில் தண்ணீர்ப் பந்தல் வைத்துள்ளார். தலந்தோறும் செல்லும் நாவுக்கரசர் அப்பூதியடிகள் அமைத்திருந்த நீர்ப்பந்தலுக்கு வருகிறார். இதனைச் சேக்கிழார்,

"அளவில்சனஞ் செலவொழியா வழிக்கரையில் அருளுடையார்
உளமனைய தண்ணளித்தாய் உறுவேனிற் பரிவகற்றிக்
குளம்நிறைந்த நீர்த்தடம்போல் குளிர்தூங்கும் பரப்பினதாய்
வளமருவும் நிழல்தருதண்ணீர்ப்பந்தல் வந்தணைந்தார்"

எனக் காட்டுகின்றார்.

தண்ணீர்ப்பந்தல் அமைக்கும் பொழுது, நல்ல நிழல் தரும் மரத்தின் கீழ் அமைத்தால்தான் நன்றாக இருக்கும் என்ற நடைமுறை உண்மையைத் தெளிவாகக் குறிப்பிடுகிறார் ஆசிரியர்.

நாவுக்கரசரும் அறச்சாலையும், தண்ணீர்ப்பந்தலும் வைத்திருந்ததை வரலாற்றின் மூலமாக அறியமுடிகிறது. அதனை "ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்பந்தலும் அமைத்தார்" என்ற பெரியபுராணப் பாடல் அடி உணர்த்துகிறது.

## பசிப்பிணி போக்குதல்.

இருப்பவர்கள் இல்லாதவர்களுக்குக் கொடுத்து உதவும் பண்புடையவர்களாக இருக்க வேண்டும். இல்லையென்றால் ஒரு கால கட்டத்தில் இல்லாதவர்கள் இருப்பவர்களிடம் தட்டிப்பறிக்கும் நிலை ஏற்பட்டுவிடும். இதற்கெல்லாம் இடம் கொடுக்காமல், ஒருவருக்கொருவர் கொடுத்துதவுவதோடு, இல்லாதவர்களுக்கு இருப்பவர்கள் ஆதரவாகவும் இருந்திருக்கிறார்கள் என்பது பெரியபுராணம் காட்டும் சமுதாயமாகும். இல்லத்திற்கு வந்த அடியார்களுக்கு உணவு படைத்து விருந்து செய்தது மட்டுமல்லாமல், மடங்கள் அமைத்தும் உணவளித்தும் பசிப்பிணியைப் போக்கியிருக்கிறார்கள்.

ஒரு முறை வானம் பொய்த்ததால் திருவீழிமிழலையில் பஞ்சமும் பட்டினியும் தலைவிரித்தாடின, அக்கால கட்டத்தில் அங்கு வந்திருந்த திருநாவுக்கரசரும், ஞானசம்பந்தரும் இறைவனிடம் படிக்காசு பெற்று அவர்களுடைய மடங்களிலிருந்து உணவு வழங்கி அடியார்களின் பசியைப் போக்கினார்கள். இதனை,

நாவினுக்கு வேந்தர்திரு மடத்தில் தொண்டர்
நாள்கூறு திருவமுது செய்யக் கண்டு
சேஉகைத்தார் அருள்பெற்ற பிள்ளை யார்தம்
திருமடத்தில் அமுதுஆக்கு வாரை நோக்கித்
தீவினைக்கு நீர்என்றும் அடைவி லாதீர்
திருவமுது காலத்தால் ஆக்கி இங்கு
மேவுமிக்க அடியவர்க்கு அளியா வண்ணம்
விளைந்தவாறு என்கோலோ விளம்பும் என்றார்''

என்ற பெரியபுராண பாடல் மூலம் அறியமுடிகிறது.

## நந்தவனம் அமைத்தல்.

திருப்புகலூரில் வாழ்ந்த முருகநாயனார் நந்தவனம் அமைத்து அதில் பூக்கும் பூக்களை இறைவனுக்கு தினமும் கொடுத்து வந்தார். அவர் நந்தவனத்தில் கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்னும் நான்கு வகைப்பூக்கள் இருந்தன. நாயனார் அப்பூக்களைக் கொய்து மாலை தொடுத்து அவ்வூரில் உள்ள ஆலய இறைவனுக்கு சாத்தி வழிபட்டு வந்தார். இதே போன்று ஆண்டாளும் தமது இல்லத்தமைந்த நந்தவனத்திலிருந்து துளசித் தளிர்களைக் கொண்டு மாலை தொடுத்து திருமாலை வழிபட்டார். இந்த அடிப்படையிலேயே இன்றும்கோயில்களில் நந்தவனம் அமைக்கப்பட்டு பூக்கள் ஆலயத்தில் நடைபெறும் பூசைகளுக்காகப் பயன்படுத்தப்படுகின்றன. நந்தவனம் அமைப்பதன்

மூலம் ஆலயத்தில் பூசைக்குரிய மலர்கள் கிடைப்பது மட்டுமல்லாமல் சூழலும் மாசடையாமல் பாதுகாக்க உதவுகிறது.

இவ்வாறாக நாயன்மார்கள் சமயத்தொண்டு மட்டுமல்லாமல் சமூகத் தொண்டும் செய்து சமய வாழ்க்கையையும் போற்றி வாழ்ந்தவர்கள் என்பதை உணரமுடிகின்றது.

## மேல்வரும் வினாக்களுக்கு விடை தருக.

1. திருக்கோயில் திருத்தொண்டுகள் மூன்று தருக.
2. அடியார்களுக்குச் செய்யும் திருத்தொண்டுகள் மூன்று தருக.
3. திருக்கோயில் திருத்தொண்டு செய்த நாயன்மார் இருவரைக் கூறுக.
4. அடியவர்களுக்குத் திருத்தொண்டு செய்த நாயன்மார் இருவரைக் கூறுக.
5. திருநாவுக்கரசர் பெயரில் சமூகத்திற்குத் தொண்டு செய்த அடியவர் யார்?

## செயற்பாடு

01) நாயன்மாரை திருக்கோயில் தொண்டு புரிந்தோர், சமூகத்திற்குத் தொண்டு புரிந்தோர் என அட்டவணைப்படுத்துக.
02) உங்கள் ஊரில் உள்ள திருக்கோவிலுக்குச் சென்று தொண்டு செய்க.

## பாடச்சுருக்கம்

- ஆலயங்களில் செய்யப்படும் தொண்டுகளாக திருக்கோயில்களைச் சுத்தம் செய்தல், நந்தவனம் அமைத்தல், குளம் வெட்டுதல், மாலை கட்டிக் கொடுத்தல், விளக்கேற்றுதல் என்பன அமைகின்றன.
- அடியவர்களுக்கு செய்யும் தொண்டுகளாக திருவமுதளித்தல், தாகம் தீர்த்தல் என்பன கூறப்படுகின்றன.
- அக்காலத்தில் மக்கள் இயற்கையோடு ஒன்றிய சமய சமூக வாழ்க்கையை வாழ்ந்து, நாமும் வாழ வேண்டும் என்பதனை வலியுறுத்தியுள்ளனர்.
- சமய வாழ்வின் அடிப்படையில் இனிமையான ஒரு சமூக வாழ்வியலை நம் முன்னோர்கள் கண்டுள்ளனர்.

# தரம் - 11
## சைவநெறி பாடத்திட்டம்

**1.0 அன்றாட வாழ்க்கைப் பிரச்சினைகளுக்கு முகம் கொடுக்கத் தக்கதாக, சமய ஒழுகலாறுகளை, இறை சிந்தனையுடன் கடைப்பிடிப்பர்.**

1.1 கடவுள் ஒருவரே உண்மை என்பதையும், எல்லாச் செயல்களுக்கும் அவரே எல்லாவற்றுக்கும் ஆதாரம் என்பதையும் ஏற்று சைவ சித்தாந்த நூல்கள் ஊடாக விளக்குவர்.

- **கடவுள்**
  - ✓கடவுள் உண்மையைச் சைவ சித்தாந்த நூல்கள் ஊடாக விளக்குதல்

1.2 நற்பண்புகளை மேம்படுத்துவதற்காக நாளாந்தக் கடமைகளிலும், ஏனைய செயற்பாடுகளிலும் இறை சிந்தனையுடன் ஈடுபடுவர்.

- **வீட்டில் சமயம்.**
  - ✓வீட்டில் விசேட தினங்களில் பின்பற்ற வேண்டிய நடைமுறைகளை விளக்கிக் கூறுதல்.
- **பாடசாலையில் சமயம்.**
  - ✓பாடசாலையில் கொண்டாடப்படும் சமய விழாக்களையும் அவற்றின் முக்கியத்துவத்தையும் விபரித்தல்.
- **கோயிலும் சமயமும்.**
  - ✓கோயில் வளர்ச்சியில் சமயமும் சமய வளர்ச்சியில் கோயிலும் ஒன்றுக்கொன்று உதவியாக அமைய வேண்டும் என்பதை விபரித்தல்.

1.3 வாழ்வின் பல்வேறு கட்டங்களிலும் சமய ஒழுகலாறுகளையும், வழக்காறுகளையும் பின் பற்றுவர்.

- **சமய விழுமியங்கள்.**
  - ✓சமய ஒழுகலாறுகளின் வழி நின்று, சமயியாக வாழ்தல்.
  - ✓நற்பிரஜையாக வாழ்தல்.
  - ✓தான தருமம் செய்தல்.
  - ✓தமக்கும் சமூகத்துக்கும் உதவியாக வாழுதல்.
  - ✓அர்ப்பண சிந்தையுடன் ஈடுபடுதல்.
  - ✓மகிழ்வான மனநிலையைச் சகலருக்கும் ஏற்படுத்தல்.
  - ✓சமூக நோக்குடன் செயற்படுதல்.

1.4 வாழ்க்கை முன்னேற்றத்திற்காக வாழ்வியல் சடங்குகளையும், அவற்றின் முக்கியத்துவங்களையும் இனங்கண்டு, அவற்றுக்கு மதிப்பளிப்பர்.

- **திருமணச் சடங்கு.**
  - ✓பல்வேறு வகையான திருமணச் சடங்குகளை அவதானித்தல்.
  - ✓திருமணச் சடங்கின் முக்கிய அம்சங்களை விபரித்தல்.

1.5 விரதங்களின் சமய, சமூக முக்கியத்துவங்களை விளக்கி, விரதங்களை அனுஷ்டிப்பர்

- **விரதங்கள்.**
  - ✓ஆடி அமாவாசை விரதம்.
  - ✓சித்திராப் பௌர்ணமி (சித்திரைப் பூரணை) விரதம்

1.6 வாழ்வியலில் பண்டிகைகள் உணர்த்தும் முக்கியத்துவத்தை அறிந்து கொண்டாடுவர்.

- **பண்டிகைகள்.**
- **தீபாவளி.**
  - ✓கடவுள் வழிபாடு.
  - ✓நன்றி மறவாமை.
  - ✓கொடுத்துண்ணும் பண்பு.
- **ஆடிப்பிறப்பு.**
  - ✓கடவுள் வழிபாடு.
  - ✓உணவைப் பகிர்ந்து உண்ணல்.

**2.0 சமய நம்பிக்கையே பக்தியின் அடிப்படை என்பதை உணர்ந்து, அவற்றைப் பின்பற்றுவர்.**

2.1 நாயன்மார்களின் கதைகளின் ஊடாக சமய நம்பிக்கையை இனங்கண்டு, தம் வாழ்விலும் பக்தியைக் கடைப்பிடிப்பர்.

- சாக்கிய நாயனார்

## 3.0 திருமுறைப்பாடல்களையும்,பாசுரங்களையும், தோத்திரப் பாடல்களையும் பக்தியோடும் பண்ணோடும் பாடுவர்.

3.1 தோத்திரப்பாடல்களைப் பக்தியோடும் இசையுடனும் பாடுவர்.

✓ பிழையறப் பண்ணோடு பாடுதல், பக்தியை வெளிப்படுத்தும் வகையிற் பாடுதல்.

✓ பொருள் கூறுதல், அருஞ்சொற்களை விளக்குதல்.

✓ பொழிப்புரையினை எழுதுதல்.

✓ சந்தர்ப்பம் கூறுதல்.

- **தோத்திரப்பாடல்கள்**

1. **அபிராமி அந்தாதி**
   (அ) "ஆத்தாளை எங்கள்........"
2. **சகலகலாவல்லிமாலை**
   (அ) "பண்ணும் பரதமும்......."
3. **நாலாயிரத் திவ்விய பிரபந்தம்**
   (அ) "குடதிசை முடியை வைத்து ......."
4. **கந்தபுராணம்**
   (அ) "அருவமும் உருவமாகி......."
5. **கந்தரனுபூதி**
   (அ) "உருவாய் அருவாய்........"
6. **திருப்புகழ்**
   (அ) "பக்தியால் யானுன்னைப்........"
7. **பராபரக்கண்ணி**
   (அ) "எவ்வுயிரு மென்னுயிர்......."
   (ஆ) "வந்தித்து நின்னை.........."
   (இ) "கெட்டவழி யாணவப்........"
   (ஈ) "மூர்த்தி தலந் தீர்த்தம் ........"
   (உ) "சிந்தித்த வெல்லாம்........."

3.2 சமய இலக்கியங்களில் இடம்பெறும் புராண இதிகாசக் கதைகள், தத்துவங்கள், நாட்டார் வழக்காறுகள் முதலியவற்றை இனங்கண்டு, அவை பற்றி தொகுத்தும் வகுத்தும் விபரிப்பர்.

3.3 சமய இலக்கியத்திலிருந்து தெரிவு செய்யப்பட்ட பாடல்களை அடிப்படையாகக் கொண்டு, சமய உணர்வுகளை விருத்தி செய்வர்.

- **சமய இலக்கியம் ( கந்தபுராணம் - திருப்பெருவடிவம்)**

✓ கதைச்சுருக்கத்தைக் கூறுதல்.

✓அறப்பண்புகள், தத்துவக் கருத்துக்களை இனங்கண்டு விளக்குதல்.
✓இரசனை உணர்வை வளர்த்தல்.
✓வகுத்தும் தொகுத்தும் கூறுதல்.
✓புராணபடனஞ் செய்தல்.

**4.0 சமய வழிபாட்டு முறைகளை விதிப்படி பேணுவதன் அவசியத்தை முன்வைப்பர்.**

4.1 ஆலயம், தலயாத்திரை என்பவற்றுக்கு இடையிலான தொடர்பினை விபரிப்பர்.

- **தலயாத்திரை**
  ✓பக்தியுடன் சரியான முறையில் மேற்கொள்ளல்.

**5.0 சமயப் பெரியார்களின் வாழ்க்கை வரலாறுகளை அறிந்து, அவற்றை முன்மாதிரியாகக் கொண்டு ஒழுகுவர்.**

5.1 சமய குரவர் (நால்வர்) பணிகளை அறிந்து அவற்றை விபரிப்பர். அவர்களுக்கு மதிப்பளித்து அவர்கள் வழி ஒழுகுவர்.

- **சமய குரவர் நால்வரதும் சமய, சமூகப் பணிகள்**
  ✓சமய குரவர்கள் காட்டிய வழியில், சமூகத்துக்கும் சமயத்துக்கும் இடர்வரும் போது, அதனைப் பாதுகாக்க முன்வருதல்.

5.2 சந்தான குரவரதும், அவர்களது பணிகள் பற்றியும் விளக்குவர்.

- **சந்தான குரவர்களும், அவர்களது பணிகளும்**
  ✓சந்தான குரவர்கள் சமயத்துக்கும் ஆற்றிய பணிகளை இனங்கண்டு விளக்குதல்.

5.3 சித்தர்களது ஆன்மீக ஞானம் பற்றிய விளக்கத்தைப் பெறுவர்.

- **ஈழத்துச் சித்தர்கள்**
  ✓பொது அறிமுகம் ( ஐந்து சித்தர்களின் வரலாறு)

5.4 சமயம் வளர்த்த பெரியார்களது சாதனைகளை வெளிப்படுத்துவர்.

- **குமரகுருபரரின் சமயப்பணி**

5.5 இலங்கையில் சமய, சமூக, கல்விப் பாரம்பரியத்தை வளர்த்த பெரியார்களையும் அவர்களது பணிகளையும் அறிந்து, அவர்களுக்கு மதிப்பளிப்பர்.

- **ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்**
  - ✓அவர்களின் சமய, சமூக, கல்விப் பணிகளை மதிப்பிடல்.

## 6.0 சைவ சித்தாந்தக் கோட்பாடுகளை விளக்கி, வெளிப்படுத்துவர்.

6.1 சைவசித்தாந்தம் ஏற்றுக்கொள்ளும் முப்பொருள் உண்மைகளையும் அதன் இயல்புகளையும் நூலாதாரங்களுடன் விளக்குவர்.

- **முப்பொருள் விளக்கம் (சிவஞானபோதம், சிவப்பிரகாசம், சிவஞானசித்தியார், திருவருட்பயன் முதலிய நூல்களினுடாக)**
  - ✓பதியின் இயல்பை விபரித்தல்.
  - ✓பசுவின் தன்மையை எடுத்துக் கூறல்.
  - ✓பசுவுக்கும், பதிக்கும் இடையிலான தொடர்பை இனங்காணல்.
  - ✓பாசம், பாசத்தின் இயல்பு பற்றி விளக்கல்.
  - ✓பாசத்திற்கும், பசுவிற்கும் இடையிலான தொடர்பை விளக்குதல்.
  - ✓பாசத்திலிருந்து விடுபடும் மார்க்கங்களைக் கூறல்.

6.2 ஆன்மீக விடுதலை நோக்காகக் கொண்டு, அதற்கான செயற்பாடுகளில் ஈடுபடுவர்.

- **தீட்சை**
- **சைவ நாற்பாதங்கள்**

## 7.0 நாட்டார் சமய வழிபாடுகளையும், வழக்காறுகளையும் அறிந்து அவற்றிற்கு மதிப்பளிப்பர்.

7.1 நாட்டார் தெய்வங்கள், அவற்றின் வகைகள் பற்றி விளக்குவர்.

- **வற்றாப்பளைக் கண்ணகி அம்மன் ஆலயம்**
- **காரைதீவு கண்ணகை அம்மன் ஆலயம்**

7.2 நாட்டார் தெய்வவழிபாட்டில் இடம்பெறும் பூசகர் முறை பற்றி விளக்கம் பெறுவர்.

- **நாட்டார் தெய்வ வழிபாட்டில் பூசகர் முறை**

7.3 நாட்டார் தெய்வ வழிபாட்டிற்கும் சமூகத்திற்கும் இடையிலான தொடர்பினை இனங்காண்பர்.

- **நாட்டார் தெய்வ வழிபாடும் சமூகமும்.**

## 8.0 ஈழத்துச் சைவமரபினை பேணிக்காக்க வேண்டும் என்னும் மனப்பாங்கினை விருத்தி செய்வர்.

8.1 ஈழத்துச் சைவமரபின் தொன்மை, வரலாறு என்பவற்றை ஆதாரத்துடன் முன்வைப்பர்.

- **இலங்கையில் சைவசமய வளர்ச்சி**
  - ✓பௌத்தத்துக்கு முந்திய சைவம்
  - ✓அனுராதபுரக் காலம்
  - ✓பொலநறுவைக் காலம்
  - ✓கண்டி இராச்சியத்தில் சைவம்
  - ✓யாழ்ப்பாண இராச்சியத்தில் சைவம்
  - ✓போர்த்துக்கேயர் - ஒல்லாந்தர் காலம்
  - ✓19 ஆம் நூற்றாண்டிற் சைவம்
  - ✓பௌத்த, சைவ உறவு
  - ✓20 ஆம் நூற்றாண்டிற் சைவம்

8.2 ஈழத்துச் சைவஆலயுங்களையும் அவற்றின் சிறப்பம்சங்களையும் விபரிப்பர்.

ஆலய வகைகளையும் அவற்றின் பல்வேறு அம்சங்களையும் பகுத்து ஆராய்வர். அவை பற்றி விபரிப்பர்.

- **விநாயகர் ஆலயம்**
  - ✓மாமாங்கப்பிள்ளையார் ஆலயம்
- **சிவாலயங்கள்**
  - ✓திருக்கேதீச்சரம்
  - ✓திருக்கோணேச்சரம்
  - ✓பொன்னம்பலவாணேச்சரம்
- **முருகன் ஆலயங்கள்**
  - ✓திருக்கோயில் சித்திரவேலாயுதர் ஆலயம்
  - ✓மாவிட்டபுரம் கந்தசுவாமி ஆலயம்

8.3 ஈழத்துச் சைவப் பிரபந்தங்களின் வகைகளை இனங்கண்டு, விளக்கம் பெறுவர்.

ஈழத்துச் சைவ இலக்கிய மரபுகளில் சமயக் கருத்துக்களை இனங்காணல்.

- **ஈழத்துச் சைவ மரபுகள்**
  - ✓கண்ணகி வழக்குரை காதை
  - ✓பிள்ளையார் கதை

8.4 ஈழத்துச் சமய நிறுவனங்களையும் அவற்றின் பணிகளையும் பகுப்பாய்வு செய்வர்.

- **இராமகிருஷ்ண மிஷன்**
- **சைவ பரிபாலன சபை**

**9.0 சமய வாழ்க்கைக்கும் சூழலுக்கும் இடையிலான தொடர்பினை விருத்தி செய்வதற்கான முயற்சிகளில் ஈடுபடுவர்.**

- **சமய வாழ்க்கையும் சூழலும்.**
  - ✓நீர் நிலைகளைப் பாதுகாப்பர்.
  - ✓தண்ணீர்த் தொட்டி, தண்ணீர்ப் பந்தல் அமைத்தல்.
  - ✓தலவிருட்சம் வைத்தல்.
  - ✓நந்தவனம் அமைத்தல்.
  - ✓அன்னசத்திரம், தங்குமிடம் அமைத்தல்.
  - ✓ஆலய வீதிகளிற் சுத்தம் பேணல்.
  - ✓ஆலயச் சூழலில் சமூக ஒருமைப்பாடு பேணல்.

**10.0 ஏனைய சமூகத்தவர்களது சமய, கலாசார பண்பாடுகளுக்கு மதிப்பளிப்பர்.**

- **வேற்றுமையில் ஒற்றுமை காண்போம்.**
  - ✓தேசியத்தையும் ஐக்கியத்தையும் கட்டியெழுப்பும் செயற்பாடுகளில் ஈடுபடல்.

# සිංහල වර්ණ මාලාව

| | | | | | |
|---|---|---|---|---|---|
| අ | ආ | ඇ | ඈ | ඉ | ඊ |
| උ | ඌ | ඍ | ඎ | ඏ | ඐ |
| එ | ඒ | ඓ | ඔ | ඕ | ඖ |
| (අ)ං | (අ)ඃ | | | | |
| ක | ඛ | ග | ඝ | ඞ | ඟ |
| ච | ඡ | ජ | ඣ | ඤ | ඦ |
| ට | ඨ | ඩ | ඪ | ණ | ඬ |
| ත | ථ | ද | ධ | න | ඳ |
| ප | ඵ | බ | භ | ම | ඹ |
| ය | ර | ල | ව | | |
| ශ | ෂ | ස | හ | ළ | ෆ |

நம்நாட்டு இளஞ்சந்ததியினரின் நலன்கருதி நம்அரசு உங்களுக்கு வழங்கும் இந்நூலை அடுத்த ஆண்டும் உங்கள் சகோதரர்களுக்கு வழங்கத்தக்க வகையில் வைத்துப் படியுங்கள்.

பாடசாலையின் பெயர் : ..........................................................................................

| ஆண்டு | புத்தகத்தைப் பெற்றுக் கொண்ட மாணவர் பெயர் | வகுப்பு | வகுப்பாசிரியரின் கையொப்பம் |
|---|---|---|---|
| 2008 | ........................................................ | ................ | ................................. |
| 2009 | ........................................................ | ................ | ................................. |
| 2010 | ........................................................ | ................ | ................................. |
| 2011 | ........................................................ | ................ | ................................. |
| 2012 | ........................................................ | ................ | ................................. |



இந்நூலை கவனமாகக் கற்று,
உங்கள் அறிவை விருத்தி செய்து,
அடுத்த வருடம் உங்கள் வகுப்புக்கு
வகுப்பேற்றப்படவுள்ள சகோதர,
சகோதரிகளிடம் ஒப்படைப்பது
உங்களது பொறுப்பாகும்.

நகுலேச்சரம்



திருக்கோணேச்சரம்



திருக்கேதீச்சரம்





சந்திரசேகரீச்சரம்



முன்னேச்சரம்